நம் இருவரைப் பற்றி ஒரு அற்புதமான விஷயம் உள்ளது.

# உண்மையில் நாங்கள் ஒருவரே.



அந்த மழலைச் செல்வம் தான் உங்கள் உலகம். அவனுக்குத் தாருங்கள்
ஒரு அன்பளிப்பை. அதை வாஞ்சையுடன் போற்றி மகிழ்வான் என்றென்றும்.

## சில்ட்ரன்ஸ் கிஃப்ட் குரோத் ஃபண்ட்.

உங்களின் ஒரு அங்கமே உங்கள் மழலைச் செல்வம் அவனது அங்கத்தில் நீங்களும் ஒன்றாகத் திகழ்கிறீர்கள். இந்த பந்தத்தைக் கொண்டாட அவனுக்கு யூடிஐ-ன் சில்ட்ரன்ஸ் கிஃப்ட் குரோத் ஃபண்டை அன்பளிப்பாகத் தாருங்கள். 15 வயதிற்குட்பட்ட எந்த ஒரு குழந்தைக்கும் ஆண்டிற்கு 12 % உறுதிப்படுத்தப்பட்ட வருவாய். வருவாய் தானாகவே மறுமுதலீடு செய்யப்படும் முதலீடு செய்யப்பட்ட ரூ.10,000 வளர்ந்து 21 ஆண்டுகளில் குறைந்தபட்சம் ரூ.1,08,000 ஆகிறது. குறைந்தபட்சம் முதலீடு ரூ.2,000 உச்ச வரம்பு கிடையாது. மேலும் விவரங்களுக்கு உங்கள் அருகாமையிலுள்ள யூடிஐ கிளையை, முக்கிய பிரதிநிதியை அல்லது முகவரை அணுகவும். உங்கள் குழந்தையின் எதிர்காலம் உங்கள் கையில் இப்பொழுதே அதைப் பத்திரப்படுத்துங்கள்.





## யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா

உங்கள் வளமான நாளைக்கு

## இப்போது : திட்டம் விற்பனைக்காக மீண்டும் திறக்கப்பட்டுள்ளது

[illegible]

**மண்டல அலுவலகம்** : 29, இராஜாஜி சாலை, சென்னை 600 001 போன் : 517101. **கிளை அலுவலகம்** : கோயம்புத்தூர் போன் : 214973 சென்னை போன் : 517101, 517190 மதுரை போன் : 738186 திருச்சி போன் : 760060

SAATCHI & SAATCHI : 009599 C TAM B

• மனோபாலா

பெரிய திரையிலிருந்து சின்னத் திரைக்கு வந்த சில பிரபலங்களிடம், வரப்போவது ''தொலைக்காட்சி



• விஜயசக்ரவர்த்தி

# இருபது தொலைக்காட்சி நூற்றாண்டா?

• விசு

நூற்றாண்டா? சினிமா இனிமேல் அவ்வளவுதானா?'' என்று கேட்டோம்.

**விசு :**

எனக்கு இயக்குனர், நடிகர், எழுத்தாளர்னு மூன்று முகம் இருக்கு. இயக்குனர்ங்கற முறைல சொல்லப்போனா, சினிமா அவ்வளவுதான்! எதிர்காலம் சின்னத்திரை வசம்தான். நடிகர்ங்கற முறைல சினிமாவுல வாய்ப்பு கெடைக்கறப்போ நடிப்பேன். சினிமாவுக்காகப் போராடணும்னு அவசியம் வர்றப்போ போராடவும் செய்வேன் – எழுத்தாளர்ங்கற முறைல!

**சுரேஷ் மேனன் :**

சினிமா எப்பவும் அழியாது. வடக்கு மாநிலங்களில் மக்களோட கவனம் சினிமாப் பக்கம் மறுபடி திரும்ப ஆரம்பிச்சிருக்கு. வெளிநாடுகள்ல கூட சினிமாவுக்கு மக்கள் முக்கியத்துவம் கொடுக்க ஆரம்பிச்சுட்

டாங்க. சின்னத்திரைல இருக்குற பெரிய வசதி என்னன்னா, சினிமாவுல முயற்சி பண்ண முடியாத சப்ஜெக்டை டீவியில பண்ணலாம். சினிமா, டீ.வி. இரண்டுமே ஒண்ணுக்கொண்ணு விட்டுக் கொடுத்தா இரண்டு மீடியாவுமே சக்ஸஸ் ஆகும்.

**மனோரமா :**

**சி**னிமா அவ்வளவுதான்னெல்லாம் சொல்லமுடியாது. சினிமாவில் இருக்கற விஷயம்தான் டீ.விக்கு வருது. சொல்லப் போனா, சினிமாவை வச்சுத்தான் டீ.வியே ஓடிட்டிருக்கு. 21-ம் நூற்றாண்டில் நிச்சயம் சினிமா இருக்கும். மறுபடியும் ஜெயிக்கும்.

**மனோபாலா :**

**சி**ன்னத்திரை விஞ்ஞான வளர்ச்சியின் விளைவு. விஞ்ஞான வளர்ச்சியை யாரும் தடுக்க முடியாது. மொபைல் ஃபோன் வந்தவுடனே எல்லாரும் வாங்க ஆரம்பிக்கிற மாதிரிதான் இதுவும். ஹாலிவுட்லயே எல்லாரும் டீ.வி. டீ.வின்னு அது பின்னாடி ஓட ஆரம்பிச்ச காலம் உண்டு. ஆனா, ஸ்பீல்பெர்க் போன்ற டைரக்டர்கள் மக்களை சினிமா பக்கம் திரும்ப வைச்சாங்க. ஹாலிவுட்ல தொழில் நுட்பம் வளர்ந்துருக்குன்னா, நம்ம நாட்டுல கதைகளில் அதிக கவனம் செலுத்த ஆரம்பிச்சிருக்கோம். 'உன்னிடத்தில் என்னைக் கொடுத்தேன்', 'நட்புக்காக' போன்ற படங்கள் 'ஹிட்' ஆனதுக்குக் காரணம் கதையம்சம்தான். டீ.வில ஒரு சில நல்ல விஷயங்கள் வரத்தான் செய்யுது. ஆனா, அது சினிமாவை என்னிக்குமே பாதிக்காது.

**விஜயசக்கரவர்த்தி :**

**உ**லகில் ஒரே ஒரு மனுஷன் இருக்கற வரைக்கும் சினிமா இருக்கும். தியேட்டர்ல போய் முறுக்கை கடிச்சுட்டு, புகையை விட்டுட்டு டான்ஸ் பாக்கறதுல மனுஷனுக்கு ஒரு வடிகால் இருக்கு. டீ.வி. பாக்கலாம். அப்புறம் போரடிச்சுரும். சினிமாதான் சரின்னு தோண ஆரம்பிச்சுடும். ஒரு வீட்ல மொட்டை மாடில உக்காந்து வெளியே பாக்கறதுக்கும், ஜன்னல் வழியா வெளியே பாக்கறதுக்கும் இருக்கற வித்தியாசம்தான் இந்த இரண்டுக்கும். சினிமா 21-ம் நூற்றாண்டுல மட்டுமில்லை; 41-ம் நூற்றாண்டுல கூட இருக்கும்!



• சுரேஷ் மேனன்



• மனோரமா

**ஆபாவாணன் :**

**சி**னிமா அழிஞ்சுடுமாங்கறது கால காலமா இருக்கிற கேள்வி. ஆனா சினிமாவை யாராலயும் அழிக்க முடியாது. உலக அளவில் பல தொலைக்காட்சி சேனல்கள் வர்றது பெரிய வெற்றிதான். ஆனாலும், சினிமாவோட சுருங்கின வடிவம்தான் டீ.வி. பையன் வளர வளர அப்பாவுக்குப் பெருமைங்கற மாதிரி டீ.வி. வளர்ந்தா, அந்தப் பெருமையெல்லாம் சினிமாவுக்குத்தான்! டீ.விங்கறது ஒரு 'ஆர்கனைஸ்டு சினிமா'.

தொகுப்பு :
**கே. பாலசுப்ரமணியன்**

## நினைவிருக்கிறதல்லவா!

# அமரர் கல்கி நூற்றாண்டு சிறப்புப் போட்டிகள்!

**பல எழுத்தாளர்களின் வேண்டுகோளுக்கிணங்கி நாவல் போட்டிக்கான கடைசித் தேதியை மார்ச் 15-லிருந்து ஏப்ரல் 30-க்கு நீட்டித்திருக்கிறோம்.**

## நாவல் போட்டி : பரிசு : ரூ. 25,000

● கல்கியில் 26 வாரங்கள் தொடராக வெளியிடக்கூடிய அளவிலான நாவலாக இருக்க வேண்டும்.

● சரித்திர நாவல், சமூக நாவல், மர்ம நாவல், விஞ்ஞானப் புதினம் **(Science Fiction)** என எதுவானாலும் அனுப்பி வைக்கலாம்.

● தரம் மட்டுமே கருத்தில் கொண்டு பரிசு முடிவு செய்யப்படும்.

*கடைசி தேதி : ஏப்ரல் 30, 1999.*




## நகைச்சுவைப் பயணக் கட்டுரைப் போட்டி : பரிசு ரூ. 10,000

● உள்நாட்டு, வெளிநாட்டு, ஏன் பக்கத்து ஊர்ப் பயணம் குறித்தும் எழுதலாம்.

● இடைவிடாது சிரிக்கும்படி கட்டுரை அமைய வேண்டும்.

● பயணக் கட்டுரைக்கான இதர இலக்கணங்கள் - வரலாறு, பூகோளக் குறிப்புகள், வர்ணனைகள், மக்கள், இயற்கை, பழக்க வழக்கங்கள் யாவும் அமையப் பெற வேண்டும். நகைச்சுவையுடன் தகவல்களைப் பின்னித் தர வேண்டும்.

● இக்கட்டுரை கல்கியில் 5 முதல் ஆறு பக்கங்களுக்குள் (படங்கள் உள்பட) அடங்கும்படி அமைய வேண்டும்.

*கடைசி தேதி : ஜூன் 10, 1999.*

## வாசகர்களுக்கான போட்டி: பரிசு ரூ. 5,000

*கல்கி கலெக்ஷன் பகுதியை உன்னிப்பாகப் படித்து வாருங்கள்.*

*பொன்னியின் செல்வன் நீங்கலான பகுதியில் இடம்பெறும் கட்டுரை/கவிதைகளுள் உங்களை அதிகம் கவர்ந்தது எது? ஏன்...? என்பதை ஒரு பக்க விமர்சனமாக எழுதி அனுப்புங்கள்.*

● மே, 1999 இறுதி வரையிலான கல்கி கலெக்ஷன் பகுதியைத் தொடர்ந்து படித்து, பிறகு சிறந்த ஒன்றைத் தேர்வு செய்து விமர்சனம் எழுதுங்கள்.

● விமர்சிக்கப்படும் கட்டுரை இடம்பெற்றுள்ள இதழ் தேதியைக் குறிப்பிட்டு எழுத வேண்டும்.

● விமர்சனம் கல்கியில் ஒரு பக்கத்திற்குள் அடங்கும்படி அமைய வேண்டும்.

*கடைசி தேதி : ஜூன் 20, 1999.*

**அனுப்பப்படும் நாவல்கள் 'சொந்தக் கற்பனையே' என்ற உறுதிமொழியுடன் அனுப்பப்பட வேண்டும்.**

**ஒவ்வொரு போட்டிக்கும் ஒரு பரிசு மட்டுமே வழங்கப்படும்!**

**அனைத்துப் போட்டிகளிலும் ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.**

*போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்கு செப்டெம்பர் 9, 1999 – அமரர் கல்கி நூற்றாண்டு நிறைவு விழா நிகழ்ச்சியில் பரிசுகள் வழங்கப்படும்.*

'இருக்கின்ற இடம் போதாது; கட்டிய கட்டடம் போதாது; ஒதுக்கிய நிதி போதாது!' என்றுதான் பொதுவாகப் பலரும் அரசுக்கு எதிராகக் கோரிக்கை வைப்பார்கள். கோஷமிடுவார்கள். உதகை நீதிமன்ற வளாகத்தில் கடந்த இரண்டு மாத காலமாக நடைபெறும் போராட்டம் அப்படியே தலைகீழ்!

நீலகிரி மாவட்ட ஆட்சியாளர் வளாகத்தினுள் இயங்கி வரும் பல்வேறு அரசு அலுவலகங்களுள் மாவட்ட நீதிமன்றமும் சப்-கோர்ட்டும் அடக்கம். அத்துடன் அருகாமையில் உள்ள முனிசிப் கோர்ட், மாஜிஸ்திரேட் கோர்ட்டுகளையும் இணைத்து புத்தம் புது கட்டடம் கட்ட அங்கிருந்து சுமார் 4 கி.மீ. தொலைவில் உள்ள காகா தோப்பில் இடம் ஒதுக்கி,





• நீதிமன்ற வளாகம்: வெறிச்!

பன்னிரண்டு கோடி ரூபாயும் அரசு ஒதுக்கீடு செய்தது. உயர்நீதிமன்ற நீதிபதி பரிந்துரைப்படி கட்டடம் கட்ட ஆரம்பித்த நிலையில் வெடித்துள்ளது பிரச்னை!

"எங்களுக்குப் பன்னிரண்டு கோடியும் வேண்டாம். காகாதோப்பும் வேண்டாம். புத்தம் புது கட்டடமும் வேண்டாம்..." என்று ஒன்றல்ல, இரண்டல்ல; நூற்றுக் கணக்கான வழக்குரைஞர்கள் போராடுகிறார்கள். இரண்டு மாத கால நீதிமன்றப் புறக்கணிப்பு, இருபத்தைந்து நாட்களாகத் தொடர் உண்ணாவிரதம். ஆர்ப்பாட்டம், கடையடைப்பு!

புதிய இடத்திற்குப் போவதில் அப்படியென்ன சிக்கல்?

"இங்கிருந்து மலைப்பாதைல அஞ்சு கிலோ மீட்டர் சார், காகா தோப்பு. முழுக்க

முழுக்க ரிசர்வ் ஃபாரஸ்டை ஒட்டிய இடம். நாலு ஹேர் பின் பெண்ட் தாண்டிப் போகணும். எப்படியும் ஒரு மணி நேரம் பயணம் பண்ணணும். எப்படி முடியும்?

"இப்ப இருக்கிற நீதிமன்றத்திற்கு வரவே ஏகப்பட்ட நேர விரயம். 65 கி.மீ. தூரத்துல உள்ள



• செல்வராஜ்

கின்னக்கொரை, தெங்குமரஹாடாவெல்லாம் கூட இந்தக் கோர்ட்டுக்குக் 'கவரா'குது. அங்கிருந்து இங்கே வர்றதுன்னா ஒரே பஸ். ராத்திரியே சீட் போட்டு வச்சிருந்து வரணும். இனி இன்னும் ஒரு மணி நேரம் 'மேல' போகணும்னா எப்படி முடியும்?

"நாங்க இந்தத் திட்டம் போட்டப்பவே எதிர்த்தோம். ஒன்பது மாதம் முன்பு இதே

உதகையிலிருந்து நேரடி ரிப்போர்ட்

# ந்து போயிருக்கும் காகாதோப்பு ஜலகாரம்!



• வழக்கறிஞர்கள் போராட்டம்

**வெ**றிச்சோடிக் கிடக்கும் கோர்ட் வளாகம். வளாகத்தின் நடு மைதானத்தில் தொடர் உண்ணா விரதப் பந்தல். திரும்பின பக்க மெல்லாம் கொதித்துப் போய்ப் பேசும் வழக்குரைஞர்கள். கோப வெளிப்பாடுகள். கொஞ்ச தூரத்தில் அமளிதுமளியாகும் வழக்குரைஞர் கள் சங்கம். பொது மக்கள், வழக்கு ரைஞர்கள், அரசியல்வாதிகள் என அடுத்தடுத்து கூட்டம் போட்டுப் பேசும் தலைகள்.

"நீதிமன்றங்களைப் பொறுத்தவரை, ஒரு சின்ன விஷயத்தை செயலாக்கணும்னாக் கூட அஞ்சு வருஷம், பத்து வருஷமில்லாம முடியாது. இதே நீதிமன்ற வளாகத்தில் இந்த பார் கவுன்சில் அஸோஸியேஷனுக்குச் சின்னதா ஒரு இடம் கேட்டோம். அதுக்கே பத்து வருஷம் பிடித்தது. ஆனா இப்ப இதுக்கு மட்டும் ஒரே வருஷத்துல இடம் ஒதுக்கி, நிதி ஒதுக்கி, ரோடு போட்டு, கட்டடமும் எழும்புதுன்னா என்ன அர்த்தம்? எவ்வளவு பெரிய தலைகள் சம்பந்தப் பட்டிருக்கும்?"

– உணர்ச்சி பொங்கக் கோபாவேச மாய்ப் பேசும் ஒரு மூத்த வழக்குரைஞர். கைதட்டும் கூட்டம்.

வழக்குரைஞர்கள் போராட்டக் குழு தலைவர் செல்வராஜிடம் பேசினோம் :

''இது ஒரு போலித் திட்டம்னுதான் சொல்லணும். இப்ப இருக்கிற நீதிமன்றத்திற்குப் பின்னாடியே 70 – 75 செண்ட், காலி இடம் இருக்கு. கட்டடம் கட்டறதுன்னா அதுல கூடக் கட்டலாமே? முழுமையா காடு நிறைஞ்ச, பத்து வருஷம் ஆனாலும் டெவலப் ஆகாத மலை உச்சிக்குக் கோர்ட்டை எதுக்குக் கொண்டு போகணும்? ஏற்கெனவே வழக்குகள் இங்கே அவ்வளவா ஃபைலாகறதில்லே. இருக்கிற

மாதிரி போராட்டமும் நடத்தினோம். எங்க நியாயத்தை உணர்ந்து அதுக்கு ஆதரவா தொகுதி எம்.எல்.ஏவும் சட்டமன்றக் கொறடாவும் கையெழுத்துப் போட்டாங்க. அப்போதைக்கு அதை நிறுத்தியும் வச்சாங்க. இப்ப திரும்பவும் அதே வேலையைக் கையில எடுத்திருக்காங்கன்னா என்ன அர்த்தம்?''

• வெட்டப்பட்ட மரங்கள்- காகாதோப்பு





"உங்க படத்தோட கதை அப்பட்டமான காப்பின்னு ஒருத்தர் கேஸ் போட்டாரே, என்ன ஆச்சு?"

"படத்தில் கதையே இல்லைன்னு டி.வி., பத்திரிகைகள் செய்த விமர்சனத்தை ஒரு பாயிண்டாக நம்ம வக்கீல் போட்டார். கேஸ் தள்ளுபடியாயிடிச்சு!"

— எம். சகிலா பானு

கோர்ட்டுக்கே வேலை அதிகமா இல்லை. தேவையில்லாம எதற்கு விஸ்தரிப்பு? இப்ப கோர்ட் இருக்கிற இடத்துல தகவல் தொடர்பு வசதிகள் எல்லாமே இருக்கு. கோர்ட் வேலைகள் அனைத்தையும் ஒரே இடத்துல இருந்து செய்து விட முடியும். ஆனா புதுக் கட்டடம் எழும்புற காகா தோப்புலயிருந்து இங்கே வந்து ஒரு சர்டிபிகேட் வாங்கணும், ட்ரெஷரியில பணம் கட்டணும்னா நினைச்சுப் பாருங்க. இது ஒரு பெரிய திட்டம்னு காட்டி அதில் மிகப் பெரிய பலனை அடைய சில பேர் முயற்சிக்கிறதாகவே எங்களால் யூகிக்க முடியுது. இது சம்பந்தமா முதல்வருக்கு பெட்டிஷன் அனுப்பியாச்சு. பதிலில்லை. சம்பந்தப்பட்ட அமைச்சர்களைப் பார்த்தும் பலனில்லை. இதைச் சுத்தமா நிறுத்தற வரைக்கும் நாங்களும் விடப் போறதில்லே. ஹைகோர்ட், செக்ரட்டேரியட் வாசலில் கூட உண்ணாவிரதம், போராட்டம்னு தொடரத்தான் போகிறோம்..."

இவர்கள் குறிப்பிடும் காகா தோப்புக்கு நாம் போனபோது வழியெங்கும் நிறைய மரங்கள் வெட்டிச் சாய்க்கப்பட்டு, (வனத் துறை எப்படி அனுமதித்தது?) மண் மேடுகள் நிரவப்பட்டிருந்தன. புதிய வழித்தடம் போடப்பட்டாலும் இன்னும் பேருந்து வசதி செய்யப்படவில்லை என்றனர் சுற்றுப்புறவாசிகள். பக்கத்திலேயே பாலிடெக்னிக் ஒன்று. மற்றபடி ஆங்காங்கே சில குடிசைகள். புதிய கட்டடம் எழுவதற்கான வேலைகள் துரிதமாய் நடக்கின்றன.

இதுபற்றி சட்டமன்றக் கொறடா முபாரக்கைத் தொலைபேசியில் (சட்டமன்றக் கூட்டத் தொடரில் கலந்து கொள்ள சென்னையில் இருந்தவரை) தொடர்பு கொண்டு விளக்கம் கேட்டோம்.

"ஹைகோர்ட் நீதிபதி சுவாமி வந்து பார்த்து, பார் அசோஸியேஷனுடன் சேர்ந்து தேர்வு செய்த இடம்தான் அது. எங்கள் ஆட்சி வருவதற்கு முன்னரே உருவான திட்டம் இது. நான் இதில் கூடுதல் அக்கறை காட்டுவதாகச் சொல்வது அர்த்தமில்லாதது. அவர்களின் கூட்டத்தில் சென்ற வருடம் அத்தொகுதி (ஊட்டி) எம்.எல்.ஏவும், நானும் கலந்து கொண்டு அத்திட்டம் வேண்டாம் எனக் கையெழுத்திட்டது உண்மைதான்.

"என்றாலும் எங்களைப் பொறுத்தவரை எங்கள் மாவட்டத்திற்கு வரக்கூடிய பெரிய திட்டம் கைவிட்டுப் போய்விடக் கூடாதே என்கிற ஆதங்கம்தான். அதற்காக அந்தப் புதிய இடத்தில்தான் நீதிமன்றம் அமைய வேண்டும் என்பதில் அழுத்தமான கருத்துடையவர்களும் அல்ல நாங்கள். 'இது உயர்நீதிமன்ற நீதிபதி முடிவு செய்தது என்பதனால், அவர்களாக இந்த இடம் வேண்டாம், இத் திட்டம் வேண்டாம் எனச் சொல்லும் நிலையில் அத்திட்டத்தை வாபஸ் பெற்றுக் கொள்ள அரசு தயார்' என அந்த இலாகாவில் எங்கள் அமைச்சர் தெளிவுபடுத்தியுள்ளார். சமீபத்தில் உயர்நீதிமன்ற நீதிபதி வந்து அந்த இடத்தைப் பார்வையிட்டுச் சென்றுள்ளதாக அறிகிறேன். அவர் இதுகுறித்து அரசுக்கு முடிவு தெரிவித்தபின் அமைச்சர் இறுதி முடிவு எடுத்து அறிவிப்பார்...!" என்றார்.

— கா.சு. வேலாயுதன்



# 300 ரூபாய்களுக்கு கே.வி.ஆர் ஆர்ட் கோர்ஸ் ஃப்ரீ

# இதை இலவசமாக பெறும் அதிர்ஷ்டசாலிகள் 50,000

## சுலபமாக படம் வரைய கற்றுத்தரும் சிம்பிள் ஆர்ட் கோர்ஸ் இது

இப்படி, இப்படி, இப்படி



இப்படி, இப்படி, இப்படி

1ல் இருந்து 12 எண்களில் படம்

சித்திரம் வரைவது சிலருக்கு ஹாபி. சிலருக்கு அது தொழில். எந்த வயதிலும் வீட்டிலிருந்தபடியே சுலபமாகக் கற்றுக் கொள்ள முடியும். 300/– ரூபாய் மதிப்புள்ள இந்த கோர்ஸ் இலவசமாகத் தரப்படும். விளம்பரத்திற்காக இவ்வாறு கோர்ஸ்களை ஃப்ரீயாக அளிப்பதில் கே.வி.ஆர் ஒரு ரெக்கார்டை ஏற்படுத்தியுள்ளது. மற்றவர்கள் எவரும் இவ்வாறு அளிப்பதில்லை. அதனால் உடனே இதை உபயோகித்துக் கொள்வதில் ஆர்வம் காட்டுங்கள். இந்த நல்ல வாய்ப்பை உபயோகப்படுத்திக் கொள்ளுங்கள்.

### 5 கோர்ஸ்கள்

1. ஈஸி டிராயிங் கோர்ஸ்
2. ஈஸி கார்ட்டூன் கோர்ஸ்
3. ஈஸி அனாடமி கோர்ஸ்
4. ஜாமெட்ரிகல் ஆர்ட் கோர்ஸ்
5. கமர்ஷியல் ஆர்ட் கோர்ஸ்

5 கோர்ஸ்கள்

### இந்த கோர்ஸ்கள் ஃப்ரீ

இந்த ஃப்ரீ கோர்ஸை தினமும் ஆயிரக்கணக்கானவர்களுக்கு அனுப்ப வேண்டியிருக்கும். அதனால் இந்த ஃப்ரீ கோர்ஸ் உங்களை வந்தடைய குறைந்தது 10 நாட்கள் நீங்கள் காத்திருக்க வேண்டி இருக்கும்.

### இனி உங்கள் வீட்டில் அனைவரும் சுலபமாக படம் வரையலாம்





### கே.வி.ஆர். சிம்பிள் ஆர்ட் கோர்ஸ் தனித்துவம்

• எவராலும் சுலபமாக படம் வரைய கற்றுக்கொள்ளமுடியும். "டிரிக் ஃபோட்டோ கிராபியைப் போல • டிரிக் டிராயிங்"கிற்கான சூட்சுமங்கள் • ஹாபி, பணம், புகழ், பெருமை, அனைத்தும் கிட்டும். • மொத்தம் 5 ஆர்ட் கோர்ஸ்கள் அடங்கிய ஆர்ட் கோர்ஸ் பேக்கேஜ் இது.

### இலவசமாக இவ்வாறு கோர்ஸை பெற்றுக் கொள்ளுங்கள்

• இந்த பத்திரிகையிலுள்ள கூப்பனில் உங்களது விவரங்களை எழுதி அனுப்புங்கள். • ஜெராக்ஸ் மற்றும் கார்டுகளின் மீது எழுதியவற்றை ஏற்றுக்கொள்ள முடியாது. • ஒரு கோர்ஸை இலவசமாக பெற ஒரு கூப்பனை அனுப்பவும். • உங்களுடைய நண்பருக்குத் தாவிரும்பினால் மற்றொரு பத்திரிகையை வாங்கி, அந்தக் கூப்பனை பூர்த்தி செய்து அனுப்ப வேண்டும். • கவர் மீது 3ரூ ஸ்டாம்பை தற்பொழுதைய விலைமதிப்பின்படி ஒட்ட வேண்டும். • கூப்பனில் உள்ள நியமம், நிபந்தனைகளின் படி இந்த ஃப்ரீ கோர்ஸ் அளிக்கப்படும். • முதலில் அனுப்பும் 50 ஆயிரம் பேருக்கே இது அளிக்கப்படும். • இந்த கோர்ஸ் முழுவதும் இலவசம். ஆனால் இதை பெற்றுக்கொள்ளும் செலவுகளை நீங்களே ஏற்க வேண்டும்.

### கூப்பனை பூர்த்தி செய்து உடனே அனுப்பவும்

**K.V.R. INSTITUTE** 179

(Tamil Free Art Course Scheme)

**P.B. No. 1020, 77. Habibullah Road, T. Nagar, Chennai - 17.**

எனக்கு ரூ. 300 விலை மதிப்புள்ள கே.வி.ஆர். ஈஸி டிராயிங் கோர்ஸ், ஈஸி கார்ட்டூன் கோர்ஸ், ஈஸி அனாடமி கோர்ஸ், ஜாமெட்ரிகல் ஆர்ட் கோர்ஸ், கமர்ஷியல் ஆர்ட் கோர்ஸ் பேக்கேஜை ஃப்ரீயாக அனுப்பவும். தபால் செலவு + பேக்கேஜ் + ஃபார்வார்டிங் + விளம்பர செலவுகளுக்கு ரூ 100ஐ தபால்காரரிடம் செலுத்தி எனது ஃப்ரீ கே.வி.ஆர் சிம்பிள் மொத்தம் இந்த 5 கோர்ஸ்களின் 'சிம்பிள் ஆர்ட் கோர்ஸ்' பாக்கெட்டை பெற்றுக் கொள்வேனென்று உறுதியளிக்கிறேன். இந்த ஃப்ரீ கோர்ஸ் வாய்ப்பளித்ததற்காக உங்களுக்கு நன்றி.

(உங்களது விலாசத்தை நன்கு புரியும்படியாக ஆங்கிலத்தில் எழுதவும், இல்லாவிடில் கோர்ஸை அனுப்ப முடியாது)

Name ..............................................................

Address ..............................................................

..............................................................

.............................................. Pincode ☐☐☐☐☐☐

# காற்றினிலே வரும் கீதம்!



* புத்தமங்கலம் : மூப்பனார் வருகிறார்...

மயிலாடுதுறையிலிருந்து சுமார் ஒரு மணி நேர சாலைப் பயணம். புழுதி பறக்கும் மண் சாலையில் கடந்து போக வேண்டும் புத்தமங்கலத்துக்கு. பெட்டிக்குள் பத்திரப்படுத்தி வைத்த கல்யாணப் புடைவையை உதறி உடுத்திக் கொண்ட பெண்ணைப் போல் எதிர்பார்ப்புடன் தன்னை அலங்கரித்துக் கொண்டு காத்திருக்கிறது கிராமம்.

வெளுத்து வந்த சட்டையும் நெற்றியில் திருநீறுமாகச் சிறுவர்கள்; அவர்கள் அங்கும் இங்கும் ஓடிக் கலைத்த தெருக் கோலங்களைப் பொறுமையோடு சீர்செய்யும் பெண்கள். மாவிலை, குருத்தோலைத் தோரணங்கள்; நடு நடுவே கலர் காகித அலங்காரங்கள் - பித்தளைக் குடத்தில் பூரண கும்பம் காத்திருக்கிறது.

முன்னதாக காவல் துறையினர் வந்திறங்கி ஒரு சிறு கலக்கு கலக்குகிறார்கள். பின்னால்... ஊர் எல்லையிலேயே இறங்கி நடந்து வருகிறார் ஜி.கே. மூப்பனார். கல்கி பிறந்த வீட்டின் திண்ணைச் சுவரில், கல்கி நூற்றாண்டை நினைவூட்டும் வாசகத்துடன் ஒரு கருங்கல் பலகை பதிக்கப்பட்டுள்ளது. அதைத் திறந்து வைக்க வருகிறார் மூப்பனார்.

எதிரிலும் பக்கவாட்டிலும் நின்று முகம் கொள்ளாத பூரிப்புடன் வரவேற்கும் ஊர்வாசிகள். 'கல்கி புகழ் வாழ்க' என்று கோஷமெழுப்பும் குரல்கள்!

மக்கள் தலைவர் மூப்பனாரை ஓர் அரசியல் தலைவராக மட்டுமன்றி கலை, இலக்கிய நேசராக, பொன்னியின் புதல்வருக்கு மரியாதை செய்ய வந்திருக்கும் மற்றொரு காவிரியின் மைந்தராகவே கருதி அன்று வரவேற்றார்கள் புத்தமங்கலம் கிராமத்தினர்.

புத்தமங்கலம் சகோதரர்கள் வேங்கட ராமனும் கிருஷ்ணமூர்த்தியும் கால்களில் சதங்கையும் கைகளில் சிப்ளா கட்டையுமாக ஆடிப்பாடி ஹரிகதை நடத்திய வாசல் திண்ணை. அதையொட்டிய சுவரில்

நினைவுப் பலகையைத் திறந்து வைக்கிறார் மூப்பனார். உள்ளே சென்று கல்கி பிறந்த அறையைப் பார்க்கிறார். அவருடைய கதைகள் பலவற்றில் இடம் பெற்ற 'காமரா' அறை. திறந்த முற்றத்தை ஒட்டிய கூடத்து பூஜை அலமாரி. அங்கே பிரதம விருந்தினரான மூப்பனாருக்குப் பரிவட்டம் கட்டி கௌரவிக்கக் காத்திருக்கிறார் கோவில் குருக்கள்.

மிகுந்த கவனத்துடன், வீட்டின் தற்போதைய சொந்தக்காரருக்கு முதல் பரிவட்டத்தை அணிவிக்கச் செய்கிறார் மூப்பனார்.

அடுத்து இருக்கும் கல்கியின் சகோதரர் வேங்கடராமய்யர் வீட்டுக்கும் போகிறது கூட்டம். அவரது மகன் நடராஜன் வரவேற்று ஊஞ்சலில்



• புத்தமங்கலத்தில் - சா. கந்தசாமி, ஜெயமோகனுடன்...



• 'கம்பீர' ஊர்வலம்!



• அருளாசி வழங்கும் குருமகா சந்நிதானம்



• உரையாற்றுகிறார் உதயமூர்த்தி

அமரச் செய்கிறார்.

''இந்த இடத்தில் காலடி வைக்கும்போதே உடல் சிலிர்த்துப் போகிறது'' என்று கம்மிய குரலில் உணர்ச்சிவசப்படும் எம்.எஸ். உதயமூர்த்தி – இன்னொரு மயிலாடுதுறை மைந்தர். கல்கி ஆரம்பித்த எழுத்துப் பணியை நவீன இலைப் பாதையில் தொடரும் சாயாவனம் கந்தசாமி, சாஹித்ய அகாதமி விருது பெற்ற கையோடு வந்திருக்கிறார். இளைய தலைமுறைப் பிரதிநிதியாக ஜெயமோகன் இருக்கிறார். கல்கி போற்றிய பெண்மையின் பிரதிநிதியாக சிவசங்கரி வந்திருக்கிறார். கல்கி பத்திரிகை தொடங்க முதலீடு செய்து உதவிய ஆர்.கே. சுப்பு பிள்ளை குடும்பத்தார் வந்திருக்கிறார்கள். இத்தனை பேரையும் தமது சீரிய முயற்சியால் ஒருங்கிணைத்து வரவழைத்து, விருந்தோம்பி அழைத்து வந்திருக்கும் தெய்வத் தமிழ் மன்றத்தாரும் அவர்களது செயலர் இரா. இராஜசேகரனும் தலைவர் ராமலிங்கமும் மகிழ்ச்சியில் திளைத்து நிற்கிறார்கள்.

'தேச நலன் தேச நலன் தேச நலன்' என்ற உயர்நோக்கை தாரகமந்திரமாகக் கொண்டு இயங்கிய மாமனிதர் ஒருவரின் மிக மிக எளிமையான ஆரம்ப வாழ்க்கை, கூடியிருக்கும் அத்தனை பேரின் மனக்கண்களிலும் விரிந்து இதயங்களை ஊடுருவிச் சென்று அந்தராத்மா

லைத் தொட்டு அசைக்கிறது. கல்கி குடும்பத்துப் பெண்கள் தங்களை அறியாமல் 'காற்றினிலே வரும் கீதம்' என்று பாட ஆரம்பிக்கிறார்கள்...

கல்கி என்கிற எழுத்தாளரின் கவிதை உள்ளம்
கல்கி என்கிற கவிஞரின் அழகியல் பார்வை
கல்கி என்கிற ரசிகரின் உன்னதத் தேடல்
கல்கி என்கிற மனிதரின் நிறைந்த உள்ளம்
அந்த நிறைவை அவர் பரிமாறும் பாங்கு

என்று இழை இழையாக அமரர் கல்கியை நம் முன் நிறுத்துகிற பாடல்.

'காலமெல்லாம் அவன் காதலை எண்ணி உருகுமோ என் உள்ளம், காற்றினிலே வரும் கீதம்' என்று பாடி முடிக்கிறபோது அத்தனை பேரும் அவரவர் மௌனத்தில் மூழ்கியிருக்கிறார்கள். இணைந்த உள்ளங்களின் பிரதிநிதியாகக் கல்கியின் மகன் பேசுகிறார்: "மகிழ்ச்சியான நேரம் என்பதைவிட நெகிழ்ச்சியான நேரம் என்றுதான் இதைச் சொல்ல வேண்டும்..." அவர் சொல்லி முடிப்பதற்குள் அத்தனை பேர் கண்களும் பனித்துப் பெருகுகின்றன. தலைவர், விருந்தினர் என்ற தகுதிகளெல்லாம் புறம்தள்ளி ஜி.கே. மூப்பனாரும் ரசிகரோடு ரசிகராகி அந்த நெகிழ்ச்சியில் இழைகிறார்.

சுதந்தரப் போரின்போது மயிலாடுதுறையில் சத்யாகிரஹம் செய்து சிறை சென்ற ஒரு தேசாபிமானிக்கு அஞ்சலி செலுத்துகின்ற அந்தக் கணத்தில், நாடு இன்னமும் போக வேண்டிய தூரத்தை எண்ணியும் அங்கே உள்ள பொறுப்புள்ள இதயங்கள் கனப்பதாகத் தோன்றுகிறது நமக்கு.

ராஜசேகரன் தமது கடமையுணர்ந்து அனைவரையும் மீண்டும் இயக்குகிறார். மக்கள் தலைவர் அடுத்தடுத்து அரசியல் கூட்டங்களுக்குப் போயாக வேண்டும். அனைத்தையும் முடித்துக் கொண்டு மாலை மயிலாடுதுறையில் விழா மேடைக்கு அவர் வந்தாக வேண்டும். ஊரின் இருபுறமும் உள்ள கிருபாலநாதர், வரதராஜப் பெருமாள் ஆலயங்களுக்குச் சென்று தரிசனம் செய்துவிட்டு, கூட்டம் கலைகிறது.

**மா**லை நிகழ்ச்சிகள் மயிலாடுதுறை நகராட்சிப் பள்ளியில் தொடங்குகின்றன. அப்பள்ளி இனி சுதந்தரப் போராட்ட தியாகி நாராயணசாமி நாயுடு பெயரால் அழைக்கப்படவிருக்கிறது. கல்கி பயின்ற இப்பள்ளியின் புதிய ஆய்வுக் கூடக் கட்டடத்துக்குக் கல்கி நூற்றாண்டு விழா நினைவுக் கட்டடம் என்று பெயர் சூட்ட முடிவாகியிருக்கிறது. இதற்கான அரசு ஆணை முந்தைய தினம்தான் (27.2.99) வந்து சேர்ந்திருக்கிறது.

கல்கி நூற்றாண்டு விழாக் குழுவினர் கேட்டுக் கொண்டதன் பேரில் அமைச்சர் கோ.சி. மணி முதல்வரை சட்டசபையிலேயே சந்தித்துப் பேசி அரசாணை அனுப்பியிருக்கிறார். அமரர் கல்கியின் மொழியில் சொல்ல வேண்டுமானால், வாயு வேக, மனோ வேகமாக அப்பணி நடந்தேறியிருக்கிறது!

பள்ளியின் மையக் கூடத்தில் தலைமை ஆசிரியர்களின் படங்கள் சுவரில் மாட்டப்பட்டிருக்கின்றன. அதே வரிசையில் 'முன்னாள் மாணாக்கன்' என்று கல்கியின் படமும் இடம் பெற்றிருக்கிறது!

சென்னையிலிருந்து எடுத்துவரப்பட்ட கல்கியின் உருவப்படம் நாதஸ்வர இசை முழங்க அபயாம்பிகையின் முதுகில் ஏற்றப்பட்டு ஊர்வலம் வருகிறது. அபயாம்பிகை, மயூரநாதர் ஆலய யானை! பெரம்பூர் (அட மாயவரம் பக்கத்துலதாங்க! சின்ன கிராமம்) செல்வராஜ் குழுவினர் ஆபோகியிலிருந்து அலை பாயுதே வரையில் சிரத்தையாக வாசித்தபடி வருகிறார்கள். நகராட்சி மேல்நிலைப் பள்ளி, டி.பி.டி.ஆர் தேசிய மேல்நிலைப் பள்ளி, ராஜ் மெட்ரிகுலேஷன் மேல்நிலைப் பள்ளி, குருஞான சம்பந்தர் மேல்நிலைப் பள்ளி இவற்றின் மாணவர்களும் ஆசிரியர்களும் அன்போடு உடன் நடந்து வருகிறார்கள்.

திருமண மண்டப விழா மேடை. மீண்டும் கல்கியின் பாடல்களுடன் விழா ஆரம்பிக்கிறது. நெகிழ்ச்சியுடன் தெய்வத் தமிழ் மன்றம் சார்பில் அனைவரையும் வரவேற்கிறார் ராஜசேகரன். 'இது உணர்வுபூர்மான விழா' என்று அவர் அறிவிக்க, அன்றைய மாலையின் சிறப்புச் சொற்பொழிவுகள் அதற்குப் பொருத்தமாகவே அமைகின்றன.

'அமரர் கல்கியின் ஜொலிக்கும் நகைச்சுவை உணர்வு அவரது வேதாந்த நிலையின் வெளிப்பாடுதான்' என்று சுட்டிக் காட்டுகிறார் எம்.எஸ். உதயமூர்த்தி. 'இன்ப துன்பங்களை சமநோக்குடன் ஏற்பவரே இப்படிச் சிரிக்க வைக்க முடியும்' என்கிறார். எழுத்தும் நாத உபாசனை போன்றதுதான். பாடகர் பரம்பொருளுடன் இரண்டறக் கலப்பது போன்ற நிலைதான் எழுத்தாளருடையது. அத்தகைய உத்தம பாடகரான எம்.எஸ். சுப்புலட்சுமியின்



• வந்திருந்தோரில் ஒரு பகுதி



இசை கல்கியின் எழுத்து சக்திக்கு உர மாகியிருக்கக் கூடும் என்பதைச் சுட்டிக் காட்டுகிறார். காலஞ் செல்லச் செல்ல கல்கி தம் எழுத்துப் பாணியை மாற்றிக் கொண்டார்; வாசகர்களின் கல்வி அறிவு வளர வளர அதற்கேற்பத் தமது பாணி யையும் வடிவமைத்தார்; ஆன்மீகத்தில் மிக ஆழ்ந்த ஈடுபாடு அவருக்கு; அதனால்தான் சிவகாமியின் சபதத்துக்கு அப்படியொரு முடிவை அவரால் அமைக்க முடிந்தது...' என்றெல்லாம் விவரமாகச் சொல்கிறார்.

**யா**னை மீது ஊர்வலம் விட்ட நூதனத்தை வியக்கிற சிவசங்கரி, மயிலாடுதுறை மக்கள் ஆங்காங்கே 'கொத்துக் கொத்தாக' நின்று ரசித்துப் பங்கேற்றதைக் குறிப்பிடுகிறார். கல்கியின் கதாபாத்திரங்களாக குழந்தைகளுக்கு வேடமிட்டு அவரது நினைவுநாளைப் புதிய முறையில் கொண்டாடச் செய்யலாமே என்கிறார். அமெரிக்க எழுத்தாளர் மார்க் டுவேய்ன் பிறந்த ஊரில் இப்படி ஒரு சம்பிரதாயம் இருக்கிறதாம்.

மூப்பனாரின் தலைமையுரையும் உணர்ச்சி மயமாகவே அமைகிறது: 'தஞ்சைத் தரணி, காவிரிக்கும் விவசாய வளத்துக்கும் பெயர் பெற்று விளங்கிய காலம் உண்டு. இன்று அந்தப் பெருமைகளுக்கு அபாயம் ஏற்பட்டிருக்கிறது. தஞ்சையின் பெருமையை இப்போதும் நிலை நாட்டி வருபவை அதன் கலைகளும் இலக்கியங்களும்தான். அப்படிப்பட்ட இலக்கியங்களை உருவாக்கியவர் கல்கி' என்கிறார். 'அவர் வீட்டில் நுழைந்தபோது எனக்குப் புதிய உணர்வு ஏற்பட்டது. விடுதலை வீரர்கள் வரிசையில் முன்னணியில் இருந்தவர். அப்படிப்பட்டவருக்கு விழா எடுப்பது நம் கடமை' என்கிறார் மூப்பனார்.

சகோதரர்களைப் போல் ஒன்று சேர்ந்து இயங்கி மயிலாடுதுறையையே விழாக் கோலம் பூணச் செய்த தெய்வத் தமிழ் மன்றத்தினரை தமது ஏற்புரையில் வாழ்த்துகிறார் கி. ராஜேந்திரன்.

கல்கியின் மொழி பெயர்ப்புத் திறனுக்குச் சான்றாக லாலா லஜபதி ராயின் 'யுவ பாரதம்'; சுவாமி விவேகானந்தரின் 'நமது தாய்நாடு' ஆகிய இருநூல்களை இமயம் பதிப்பகத்தார் பதிப்பித்துத்தர விழா மேடையில் வெளியிடுகிறார் கி. ரா. கதைகளைத் தேர்ந்தெடுக்காமல் அரிய தொகுப்புகளை வழங்கிய பதிப்பாளர் புத்தகப்பித்தனின் துணிச்சலைப் பாராட்டுகிறார்.




• விழா மேடை

சாஹித்ய அகாதமி பரிசு பெற்றுள்ள மண்ணின் மைந்தர் சா. கந்தசாமிக்கும் அவ் விழா பாராட்டு விழாவாக அமைகிறது. 'ஜெயமோகனின் விஷ்ணுபுரம் - ஒரு திறனாய்வு' என்று ராஜசேகரன் எழுதியுள்ள நூலை, கந்த சாமி வெளியிட்டு வாழ்த்துகிறார்.

கல்கி நூற்றாண்டு நினைவு அறக்கட்டளை நிறுவி, ஐயாயிரம் ரூபாய் வைப்பு நிதி அமைக்கின்றனர் தமிழ் மன்றத்தினர். வட்டித் தொகை ஆண்டுதோறும் கல்கி நினைவுச் சொற்பொழிவு நிகழ்த்தப் பயன்படுத்தப்படும்.

ஜி. ரங்கசாமி மூப்பனார் போன்ற பிரமுகர்கள், எம்.பி., எம்.எல்.ஏ., நகர மன்றத் தலைவர் என்று அனைவரும் நிலைகொள்ளாத மகிழ்ச்சியுடன் நிகழ்ச்சிக்கு வந்து மேடையில் அமர்ந்திருக்கிறார்கள். அரங்கு நிறைந்த கூட்டம். இரவு பதினோரு மணிக்கு தருமபுரம் குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாச்சார்ய சுவாமிகள் ஆசியுரை வழங்கி முடிக்கும் வரை உன்னிப்பாகக் கேட்டபடி அமர்ந்திருக்கிறது. அப்பரின் வாக்கையே எடுத்துக் கூறுகிறார் சுவாமிகள்.

***'நின்னாவார் பிறரின்றி நீயே ஆனாய்,***
***நினைப்பார்கள் மனத்துக்கோர் வித்தும் ஆனாய்,***
***மன்னானாய், மன்னவர்க்கோர் அமுதமானாய்***
***.......................................................***
***பூமிமேல் புகழ்தக்க பொருளேயுன்னை***
***என்னானாய் என்னானாய் என்னில்லல்லால்***
***ஏழையேன் என் சொல்லி ஏத்துவனே...'***

- இறைவனைக் குறித்துப் பாடப்பட்ட இப் புகழ் மொழிகள் கல்கிக்கும் பொருந்தும் என்கிறார் சுவாமிகள்! அன்றைய தினம் மயிலாடுதுறையில் நடந்த நிகழ்ச்சிகளையும் அதில் பங்கேற்றோர் காட்டிய ஈடுபாட்டையும் எண்ணிப் பார்க்கும்போது அவர் சொல்வதில் மிகையில்லை என்றே தோன்றுகிறது.

— சுப்ர. பாலன்

படங்கள் : யோகா

நினைவுகள்தான் இவை. சரஸ்வதி தேவியைப் பற்றிய என் நினைவுகள். அதுதான் இந்தக் காதலனின் டயரி.

எங்கள் நினைவுகள் எங்கேயிருந்து தொடங்குகின்றன?

என்னுடையது சரஸ்வதி தேவியைக் கண்ட அந்த நிமிஷம் முதல். சரஸ்வதி தேவியுடையது என்னை அவள் அறிமுகப்படுத்திக் கொள்வதன் முன்பு.

எங்கள் இதயத்தில் ஏராளமான பழைய காயங்கள் இருந்தன.

நாங்கள் வரவழைத்துக் கொண்டதா? இல்லை. தானே வந்ததுமல்ல.

இப்படிப் பழைய வேதனைகளில் நாங்கள் வாழ்ந்து வந்தோம். சிரித்தும் வேடிக்கை பேசியும் தனிமையிலே வேதனைப்பட்டும்.

இப்படி ஏன் வாழ்கிறோம்?

சரஸ்வதி தேவி என்னைக் காண வந்தது ஒரு காலைப் பொழுதில். மணி ஒன்பதோ பத்தோ ஆகியிருக்கலாம்.

நான் அப்போது வசித்து வந்தது தேவியின் வீட்டிற்கு அடுத்த வீட்டில். வீடு

# 1



என்று சொன்னால் சாதாரண வீடல்ல. ஒரு நாயர் தரவாட்டி(குடும்பத்தி)ற்குரிய எல்லாச் சின்னங்களும் கொண்ட ஒரு பெரிய மாளிகை.

மாளிகை வீட்டின் காம்பவுண்டை அடுத்து ரயில் தண்டவாளங்கள். ரயில் வரும்போதும் போகும் போதும் சுற்றுப்புறமே குலுங் கும். கொஞ்சம் பழகினால் குலுக்கம் மறந்து போகும். நான் வெறுமனே

# ஒரு காதல் டைரி

ஒரு கதை சொல்லத் தொடங்கி இருந்தால் 'துயரின் இனிமை கலந்த ஒரு மோகன காவியம்' என்று இதற்குப் பெயர் வைத்திருப்பேன். அதுவே பொருத்தமான தலைப்பு.

ஆனால் இது கதையல்ல. அசல் நிஜ வாழ்வின் ஒரு பாகம். எப்படியானாலும் நாங்கள் சந்தித் துக் கொண்டோம்.

எனக்கு வயசு முப்பத்திநாலோ

வைக்கம் முகம்மது பஷீர்

தமிழில் : வையவன்

ஆறோ. தேவிக்கு 22½. என் கைவசம் ஏறக் குறைய இரண்டாயிரம் ரூபாய். என் துக்கங் கள், என் கவலை, என் வீழ்ச்சிகள், என் யுத் தம், என் அனுபவங்கள் என்று இப்படிப் பலப்பலவற்றை நான் காகிதத்தில் பெயர்த்து எழுதி விற்றதில் கிடைத்த காசு அது.

எழுத்தை வைத்தே உயிர் வாழ வேண் டும் என்ற திட நிச்சயத்தோடு பேனா பிடித் திருந்தேன் நான்.

எல்லா அரசாங்கங்களும் என் எதிரிகள். நான் ஒரு தனிமைப்படுத்தப்பட்ட மனிதனா னேன். எனினும் எனது நூல்களும் ஒரு மாதிரி நன்கு விற்றுக் கொண்டிருந்தன. தாராளமாக எனக்குப் பணம் கிடைக்கிறது என்று அறிந்து ஆணும் பெண்ணுமாய் நிறைய நண்பர்கள் கிடைத்தனர்.

எல்லாவிதத்திலும் உதவ ஆட்கள் வந் தனர். பல பெரிய வீடுகளுக்கு வரவேற்று அழைத்துச் சென்றார்கள். அப்போதெல்லாம் பட்டினி, சஞ்சலம், பீதி இவை நிறைந்த பழைய நாட்கள் நினைவு வரும்.

இந்த நிகழ்ச்சிகளை எல்லாம் இங்கே குறிப்பிடாது விட எனக்குத் தெரியும். ஆனால் இது ஒரு முன்னுரை. இதெல்லாம் இங்கே வேண்டுமென்று நான் கருதுகிறேன்.

வாழ்க்கை விசால விசாலமான காலங் களின் ஊடே ராப்பகல்களாய்க் கழிந்து போயிருந்தாலும் அனுபவங்கள் என்று சொல்லிக் கொள்ளப் பல இருந்தாலும் மானுடப் பெண் என்பவள் எனக்கு மர்ம மான ஒரு அதிசயமாகத் தென்பட்டாள்.

லட்சக்கணக்கிலோ கோடிக்கணக்கிலோ பெண்களைக் கண்டிருக்கிறேன். எனினும் உடுபுடைவையற்ற ஒரு பெண்ணைக் கூடக் கண்ட நினைவில்லை. பெண் ஒரு தாகம் போல பாக்கி நின்றிருந்தாள். இப்படி இருக் கிறபோதுதான் சரஸ்வதி தேவி வருகிறாள்.

## அவள் ஏன் வந்தாள்?

தேவி வந்தது நான் அழைத்ததன் பேரில்! எனக்காக அல்ல. அவளுக்காக நான் அழைத் தேன். அவளுடைய காரியத்திற்காக. நான் சொல்லிய காலைப் பொழுதில். நான் குளித்து காப்பி குடித்து, ஒரு சிகரெட் பிடித்த படி, ஒரு வெள்ளை வேட்டி மட்டும் அணிந்து சாய்வு நாற்காலியில் படுத்திருந் தேன்.

அடுத்த வீட்டு வேலைக்காரப் பையன் என் கையில் ஒரு நோட்டீஸைக் கொண்டு வந்து கொடுத்தான்.



அது ஒரு கல்லூரி விழாவின் நிகழ்ச்சி நிரல். அதில் 'கோ-எஜுகேஷன்' என்ற தலைப்பில் பத்து நிமிடத்தில் முடிகிற பேச்சுப் போட்டி உண்டு என்று மட்டும் போட்டிருந்தது.

'கோ-எஜுகேஷன்' என்ற தலைப்பின் கீழ் பச்சை மையில் ஒரு கோடிட்டிருந்தது.

பையன் சொன்னான்.

"கோ-எஜுகேஷனைப் பற்றி சார் ஒரு சொற்பொழிவு எழுதித் தர முடியுமா?"

"யாருக்குடா?" நான் கேட்டேன்.

அவன் சொன்னான், "எங்க வீட்டுச் சின்னம்மாவுக்கு."

அந்தச் சின்னம்மா யாரென்று நான் தெரிந்து கொள்ள வேண்டாமா?

அக்கம் பக்கத்தில் இருப்பவரை – குறிப் பாகப் பெண்களை காரிய சிரத்தையோடு நான் கவனிக்கத் தொடங்கவில்லை.

முதலில் எனக்கு ஏராளமாக எழுத வேண்டியிருந்தது. இரண்டாவது, என் மனசில் ஒரு பழைய சந்நியாசி பாவம் உண்டு. மூன்றாவது, தாகம் இருப்பினும் பெண் என்பவள் ஒரு பெரிய பிரச்னை என்று தோன்றியது.

இத்தகைய ஆண் ஆயினும் காமக்குரோ தாதிகளுள்ள ஓர் உயிர் அல்லவா இந்த நான்!

நிம்மதியை இழக்கச் செய்யும் பெண் என்ற அற்புத சிருஷ்டியை நெருங்கிப் பார்க் கும்போது ஒரு விநோதமும் தோன்றும்; நெருங்கக் கூடாது என்றும் தோன்றும். ஆனால் பார்த்தும் கேட்டும் அறியாத அந்தச் சின்னம்மாவுக்கு சொற்பொழிவு தேவையல்லவா?

கோ-எஜுகேஷன் வேண்டுமென்றோ வேண்டாமென்றோ – எது அவள் எண்ணம்? வேண்டாம் என்பதாயிருந்தால் எனக்கு எழுத முடியாது.

நான் பதில் சொன்னேன். "அவளை வரச் சொல். நான் பேச வேண்டும்."

அவன் போய்ச் சொன்னான்.

வருவது யார்? இளம் பெண்ணா? வயதா னவளா? கறுப்பா சிவப்பா? ஒன்றும் சிந்திக்க வில்லை. வருகிற நபர் என்னைச் சூறாவளி யில் சிக்க வைப்பாளா? ஒன்றும் நினைக்க

"நாலு நாளா தாங்க முடியாத இருமல்னு டாக்டர் கிட்டே சொன்னதும்..."

"என்ன சொன்னார்?"

"'பெஸ்ட் ஆஃப் லொக்'ன்னார்!"

– ஜெயாப்ரியன்

வில்லை. சிகரெட் புகைத்தபடி படுத்திருக்கிறேன் நான்.

படியேறி, ரோஜா வர்ணச் சேலை அணிந்த, வெளுத்து மெலிந்த ஓர் இளம் பெண் வந்தாள். வெட்கத்தாலோ என்னமோ முகமும் ரோஜா நிறம். விழிகள் நல்ல ஒளி. முடியைக் கட்டவில்லை. அதைச் சுருட்டி மார்பிலே போட்டிருந்தது. சட்டென்று சேலை உடுத்தியது போல.

ஒரு ஃபினிஷிங் டச் எதுவுமில்லை. ஆக ஒரு துயரச் சாயல். எனினும் அவள் புன்னகைத்தாள். சட்டென்று அறிமுகமற்ற அவளைப் பற்றி என் மனசில் ஒரு கருத்து எழுந்தது.

'அடே... இது ஒரு துயரின் இனிமை கலந்த மோகன காவியமல்லவா! எ ஸாட் ஸ்வீட் போயம்!'

நான் எழவில்லை. அவள் வராந்தாவில் ஏறி என் முன் வந்து நின்றாள். பிறகு புன்னகையோடு கேட்டாள். கேட்டது மிகவும் இனிமையான குளிர்ந்த தொனியில். இதயத்திலிருந்து வருவது போல.

"ஏன் என்னைக் கூப்பிட்டீங்க?"

"உட்காருங்க" என்று கூறிவிட்டு நான் ஒரு நாற்காலியைச் சுட்டிக் காட்டினேன்.

அவள் உட்காரவில்லை. தூணில் சாய்ந்தபடி என் முன்னால் புன்முறுவலோடு நின்றாள்.

நான் சாய்வு நாற்காலியில் படுத்தபடி மீண்டும் ஒரு சிகரெட் பற்றவைத்தேன். புகை விட்டுவிட்டுக் கேட்டேன்.

"நான் யார்னு தெரியுமா?"

"தெரியும். போட்டோ பார்த்திருக்கேன். நிறையக் கதைகள் படிச்சிருக்கேன்."

"என்ன செய்றீங்க?"

"படிக்கிறேன்."

"பி.ஏ வா?"

"பி.எஸ்ஸி."

நான் தொடர்ந்தேன்.

"நான் ஸ்கூல் ஃபைனலுக்கும் கீழே ஃபிஃப்த் ஃபாரம் வரை படிச்சிருக்கேன். படிச்சுக்கிட்டு இருக்கறப்ப சொல்லாமல் ஓடிப்போய் சுதந்தரப் போராட்டத்திலே கலந்துக்கிட்டு அடி உதை வாங்கி சிறைவாசம். அப்புறம் இந்தியா முழுக்க ஒம்பது பத்து வருஷம் சுத்தி அலைஞ்சிட்டு வந்திருக்கேன்."

அவள் சிரித்தாள்.

"கிட்டத்தட்ட இதெல்லாம் கொஞ்சம் எனக்கும் தெரியும்."

"சரி" – நான் தொடர்ந்தேன். "என் அபிப்பிராயத்துக்கு இணங்கினாத்தான் சொற்பொழிவு எழுதிக் கொடுக்க முடியும். கோ-எஜுகேஷன் வேணுங்கறதுதான் என் கருத்து."

"எனக்கும் அதுதான்."

"அப்படின்னா எழுதலாம். என்னிக்கு வேணும்?"

"இன்னிக்கு, இப்போ தருவீங்களா?"

"இது பூவா என்ன? கையில பறிச்சுத் தர்றதுக்கு. கொஞ்சம் சிந்திக்கணும் அதைப் பத்தி!"

"ஆக மொத்தம் ஒரு வார காலம்தான் இருக்கு. சீக்கிரமா கெடைச்சாத்தான் படிச்சு மனப்பாடம் பண்ண முடியும்! இன்னிக்கு நாலு மணிக்கு, இல்லேன்னா நாளைக்குத் தருவீங்களா?"

"நல்லாப் பேசுவீங்களா?"

அவள் சிரித்தாள். அழகான பற்கள். இளம் ரோஜா வண்ணமுள்ள சதைப் பிடிப்பான உதடுகள். மனம் திறந்து சிரித்தபடி அவள் சொன்னாள்.

"ஒரு மாதிரி."

"நல்லபடியா அழகாப் பேசணும்." – நான் சொன்னேன்: "நான் எழுதித்தர்றேன்."

அன்று நான் எழுதவில்லை. அவள் போகும்போது கவனித்தேன். அவள் எங்கே போகிறாள்?

போனது அடுத்திருந்த சிறு வீட்டுக்கு. அதுதான் அவள் வீடாக இருக்கும் என்று கருதினேன். பெரிய பணக்கார வீடல்ல அது. ஆகவே அவள் ஏழை. பஞ்சத்தில் அடிபட்டவள் என்று எனக்குத் தோன்றியது. இரக்கம் தோன்றியது.

சாதாரண ஆண்களிடம் அவர்களுடைய கருணையைத் தூண்டி காரியம் சாதித்துக் கொள்ளும் இயல்பு அவளுக்கு இருக்கிறதே!

துயரக்களை, பலவீனமான உடல், அழகு, அடக்க ஒடுக்கம் இத்தனையும் உள்ள பெண் அல்லவா? ஆக எனக்குள் பரிவு அதிகரித்தது.

தொடர்ந்து மற்றோர் உணர்வு. என்னையே கேலி செய்கிற சிந்தனை. அவள் நான் நினைத்த மாதிரி ஏழையல்ல. பக்கத்திலுள்ள பெரிய நாயர் வீட்டில் இருப்பவள்!



"தன்னோட முன்ஜாமீனை ரத்து செய்யச் சொல்லி தலைவரே கோரிக்கை விடுத்திருக்காரே. ஏன்?"

"கொஞ்சம் உள்ளே போயிட்டு வந்தா நல்ல எதிர் காலம் இருக்கும்னு அரசியல் நோக்கர்கள் அபிப்பிராயப் படுறாங்களாம்!"

– அம்பை தேவா

---

அடுத்த நாள்தான் அது நிஜமென்று புரிந்தது. எண்பது வயதுள்ள கிழவரும் மூர்க்கருமான தந்தை, 'உங்களை நேசிக்க என்னை அனுமதியுங்கள்' என்ற பாவத்தில் நடந்து வருகிற வயது மூத்த தாய், 'என்னை உங்களுக்குப் பிடிக்காது, எனக்குத் தெரியும்', என்ற பின்னணியில் வாழும் தங்கை, 'யாரடா அது?' என்ற பார்வை பார்க்கும் சகோதரர்கள்.

அவளுக்கு எத்தனை சகோதரர்கள்? நான் யாரையும் கேட்கவில்லை. அந்த மாளிகையில் இரண்டோ மூன்றோ வேலைக்காரர்களும் ஒரு வேலைக்காரியும் உண்டு.

அங்கே நான் புதிதாகக் குடிவந்ததால் ஒன்றும் அறிய முடியவில்லை. துப்புத் துலக்கியதில் கிட்டியது பின் வருமாறு:

அவளுடைய அப்பா ஒரு எஸ்டேட் மானேஜராக இருந்தவர். ஏரானம் ஏராளமாய்ச் சம்பாதித்தவர். மிகவும் அகங்காரி. குரூரமானவர். பலரை வஞ்சித்து நசிக்கச் செய்தவர்.

பழைய பாவங்களின் பரிகாரத்திற்காக ஒரு ஆலயத்திற்காக ஒரு பெரிய பிளாட்டை ஒதுக்கி வைத்திருக்கிறார். அதன் மதிப்பு ஐம்பதாயிரம் பெறும். ஆலயம் கட்டினால் பிரதிஷ்டை செய்ய வடிவமைத்த சுப்பிரமணியர் சிலை குளத்திலே பத்திரமாக இருக்கிறது. இரண்டு பெண்களுக்கும் கல்யாணம் ஆகவில்லை.

நான் யோசித்தேன். மூத்த மகள் இப்படித் துயரத்தில் நடமாட என்ன காரணம்?

துக்கம்.

அவளறியாமல் நான் அவளைக் கூர்ந்து கவனித்தேன்.

பணம், செல்வாக்கு, படிப்பு, அழகு இத்தனையுமுள்ள ஓர் இளம் பெண் ஏன் துயரில் மூழ்கி இருக்கிறாள்? காதல் நிராசைகள் நேர்ந்திருக்குமோ?

இருக்கும். இருக்கும். இதயத்தில் நிறைய காயங்கள் ஏற்பட்டிருக்கும்! இது வெறும் ஊகம் மட்டுமே.

என்ன அவளுடைய பெயர்? ஓ! அவளைப் பற்றி ஒன்றும் சிந்திக்க வேண்டாம். போகட்டும்.

இப்படி நான் ஒதுக்கித் தள்ளினேன்.

அடுத்த நாள் அவள் காலேஜுக்குப் போகும் வழியில் (நன்றாக டிரஸ் செய்து, பவுடர் பூசி, கண்ணாடி அணிந்து, பூலோகத்தை விரட்டும் புன்சிரிப்புமாக) என் வாசல் அருகில் வந்தாள்.

"எழுதிட்டீங்களா?"

"இல்லே."

'என்ன ஒரு மனுஷர்' என்ற பாவத்தில் தளர்ந்து குழைந்து சந்தோஷம் நிறைந்த புன்னகைப் பார்வையோடு சொன்னாள்.

"அது எனக்கு வேணுமே!"

"இன்னிக்கு எழுதிடறேன். நாலு மணிக்குப் பிறகு வாங்க."

"மறக்கக் கூடாது!"

"இல்லே."

"போன வருஷம் கூட நான் போட்டியிலே பேசினேன். ரெண்டாவது பரிசுதான் கெடைச்சது! இதுவரைக்கும் முதல் பரிசே கெடைச்சது இல்லே. இதிலே எனக்கு ஃபர்ஸ்ட் பிரைஸ் கெடைக்கணும்."

என்ன எழுதுவது? கோ-எஜுகேஷன். ஆணும் பெண்ணும் ஒன்று கூடிப் படிக்க வேண்டும்.

சாதி வேற்றுமைகளும் அரசியல் பூசல்களும் அடிமைத்தனமும் மனித சமுதாயத்தை எதிரிட்டுள்ள எல்லாக் குழப்பங்களும் கோ-எஜுகேஷன், இல்லாததால் ஏற்பட்டவை தானென்று தோற்றுவித்துக் கொண்டு நான் ஒரு சொற்பொழிவு எழுதித் தயாரித்தேன்.

சொற்பொழிவு ஆக மொத்தம் பத்து நிமிடங்கள் மட்டுமே. ஆனால் அரை மணி நேரம் பேச வேண்டிய சங்கதி உண்டு. எனவே நான் அதைச் சுருக்கிச் சிறிதாக்கினேன். மீண்டும் சுருக்கினேன்.

மாற்றி மாற்றி நூறு தடவை எழுதியிருப்பேன். முடிவில் 'க்ளீன் பினிஷ்டு'. ஒரு படியை அவள் கையில் வைத்தேன்.

களைப்பு மேலிட்ட மோகன காவியமாக அவள் நாலு மணிக்கு வந்தாள்.

"சொற்பொழிவில் கொஞ்சம் நகைச்சுவை வேணும். ஆட்களைச் சிரிக்க வைக்கிறாப்ல" என்றாள்.

(தொடரும்)






1999 மார்ச் 14
வெகுதான்ய மாசி 30
மலர் : 57
இதழ் : 33

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## பம்மாத்து பட்ஜெட்!

மாலையில் படிக்கப்படுவதற்குப் பதிலாக காலையிலேயே நாடாளுமன்றத்தில் தாக்கலாயிற்று என்பது மட்டுமே புதுமை... இதைத் தவிர்த்து அதிசயித்து மகிழும்படி யஷ்வந்த் சின்ஹாவின் பட்ஜெட்டில் இருப்பது மிகக் குறைவுதான்.

நிதிநிலை அறிக்கை என்பது வருவாய்க்குள் செலவைக் கட்டுப்படுத்தும் முயற்சி அல்ல; எதிர்பார்க்கிற செலவுக்கேற்ப கூடுதல் கடன் வாங்கப் போடப்படும் திட்டம் என்றே ஆகிவிட்டது.

இவ்வாண்டின் செலவுகளில் 27 சதவிகிதம், வாங்கிய கடன்களுக்கான வட்டி செலுத்தவே ஒதுக்கப்பட்டிருக்கிறது. ராணுவம், மானியம், அரசு செலவினங்கள், மாநிலங்களுக்குத் தரவேண்டிய பங்கு எனப் பணத்தைப் பிரித்து வைத்த பிறகு, தொழில் வளர்ச்சி, அபிவிருத்தி திட்டங்களுக்கென்று மிஞ்சும் தொகை, மொத்த செலவில் பத்து சதவிகிதம்தான்.

இந்நிலையில் உற்பத்திப் பெருக்கத்தை எப்படி எதிர்பார்க்க முடியும்? உற்பத்திப் பெருக்கம் இல்லாதபோது கூடுதல் வருவாய் எங்கேயிருந்து கிடைக்கப் போகிறது? கடன் சுமையும் அதன் விளைவான வட்டிச் சுமையும் எப்படிக் குறையப் போகின்றன...?

இந்த அடிப்படை உண்மை, வார்த்தை ஜாலங்களாலும் கபடக் கணக்குகளாலும் மறைக்கப்படுவது வெந்த புண்ணில் வேல் பாய்ச்சுவதாகவே அமைகிறது.

இருமுறை ஏற்றிய பெட்ரோல் விலையை மயிரிழை அளவு குறைப்பதும் பட்ஜெட்டுக்கு முன்னரே கணிசமாக ஏற்றிய சமையல் காஸ் விலையை எள்முனையளவு குறைப்பதும் எந்த நியாயத்தில் சேர்த்தி...?




நிதிப் பற்றாக்குறை - அதாவது வரவுக்கும் எதிர்பார்க்கும் செலவுக்கும் இடையேயான இடைவெளியைக் குறைத்துக் காட்டும் முயற்சியில் சிறு சேமிப்புத் தொகை கடன் கணக்கில் எழுதாமல் விடப்பட்டிருக்கிறது.

அரசின் வசம் சிறுசேமிப்பாக உள்ள பொதுமக்களின் பணம் என்றைக்கிருந்தாலும் அவரவருக்குத் திருப்பித் தரப்படவேண்டிய தொகையேயாகும். இந்தத் தொகையைச் கடன் கணக்கிலிருந்து நீக்குவதன் மூலம் நிதிப் பற்றாக்குறையை 1,10,000 கோடியிலிருந்து 79,955 கோடி என்ற நிலைக்கு 'இறக்கி'யிருக்கிறார் நிதியமைச்சர்.

இந்தக் காகிதக் கணக்கினால் அரசுக்குக் கூடுதல் வருவாயும் வரப்போவதில்லை; செலவும் குறையப் போவதில்லை என்பது நிபுணர்களால் உடனுக்குடன் சுட்டிக்காட்டப்பட்டிருக்கிறது.

கண்துடைப்புக் கணக்கு காண்பித்துச் செயல்படுவதில் பெருத்த அபாயம் இருக்கிறது. வரிகள் மூலம் பெறப்போகும் வருவாய் இருபத்தோரு சதவிகிதமாக உயரும் என்றும் பொதுத்துறை நிறுவனங்களைத் தனியார்மயமாக்குவதன் மூலம் பத்தாயிரம் கோடி ரூபாய் பெறப்படும் என்றும் எதிர்பார்த்து, அதற்கேற்ப நிதிநிலை அறிக்கையைத் தயாரித்திருப்பது மேலும் அபாயகரமானது. ஏனெனில், இந்த எதிர்பார்ப்புகள் பூர்த்தியாகும் என்பதற்கு உத்தரவாதமில்லை.

வரவு இவ்வளவுதான்; ஆனால் செலவோ இந்த அளவைத் தொடக்கூடும் என்று நேருக்கு நேர் உண்மையைச் சந்தித்து சவாலை ஏற்றால், அரசு அனாவசிய செலவுகளைக் கண்டிப்புடன் குறைக்க வேண்டியிருக்கும். ஆனால் அரசுச் செலவினங்கள் குறைக்க, ஒரு துரும்பைக் கூட அசைக்க அடுத்தடுத்து வரும் ஆட்சியாளர்கள் தயாராயில்லை.

கலால் வரிச் (excise duty) சீரமைப்பினால் வரி வசூல் சுலபமாக்கப்பட்டு வருவாய் கூடும் என்று அரசு கருதுகிறது. இதை வரவேற்கலாம். தனிநபர் மற்றும் கம்பெனிகளின் வருமான வரிக்கும் சுங்க வரிக்கும் சர்சார்ஜ் விதிக்க முடிவெடுத்துள்ளது. இந்த சர்சார்ஜில் மாநிலங்களுக்குப் பங்கு தர வேண்டியதில்லை என்பதால், பெறப்படுகிற முழு வருவாயும் 'செலவுக்காயிற்று' என்று கணக்கிடுகிறது மத்திய அரசு.

இந்த நடவடிக்கையினால் அரசு பெறப்போகும் வருமானம் உயரும் என்பது சரிதான். ஆனால்,







அச்சுறுத்தும் வட்டிச் சுமையையும் உற்பத்திக்கு உதவாத ஊதாரிச் செலவினங்களையும் காண, மிக மிகச் சொற்பமான இந்த வருவாய் உயர்வினால் ஆதாயம் ஏதுமில்லை.

போதாக்குறைக்கு ரயில்வே பட்ஜெட்டில் சரக்குக் கட்டணங்கள் கணிசமாக உயர்த்தப்பட்டுள்ளன. அந்த உயர்வினால் சரக்குகளின் விலை ஏற, சராசரி மக்களுக்குத்தான் அவதி. முதல் வகுப்பு, ஏ.ஸி. மட்டுமின்றி, ஸ்லீப்பர் கட்டணமும் ஏற்றப்பட்டிருப்பது மத்தியதர வகுப்பினருக்குச் சாதகமான விஷயம் அல்ல. தவிர, ஏ.ஸி. மற்றும் முதல் வகுப்பில் செல்வோர் பெரும்பாலும் கம்பெனி செலவிலோ அரசு செலவிலோ பயணம் செய்பவர்கள்தான். அந்தச் செலவெல்லாம் கடைசியில் பொதுமக்கள் தலையில்தான் விடியும்!

யூனிட் டிரஸ்ட் போன்ற மியூசுவல் ஃபண்டுகளில் முதலீடு செய்வோருக்கு வருமான வரி விலக்குத் தர முன்வந்திருப்பது தொழில் முதலீட்டை ஊக்குவிக்கும் ஆரோக்கியமான நடவடிக்கை. இதைத் தவிர இவ்வாண்டின் பட்ஜெட்டில் பாராட்டும்படிப் பெரிதாக ஒன்றும் இல்லை. எனினும், தாமே சில வாரங்களுக்கு முன் பயமுறுத்திய அளவுக்கு இந்த பட்ஜெட்டில் கடுமையான வரிகளை நிதியமைச்சர் விதிக்கவில்லை. இதன் காரணமாகவே பலரது வரவேற்பையும் அது பெற்றிருக்கிறது.

ஆண்டுதோறும் பட்ஜெட் தாக்கலாகும்போது சொல்வதைத்தான் நாம் மீண்டும் சொல்ல வேண்டியிருக்கிறது :

அரசு செலவினங்களைக் குறைத்தாக வேண்டும். 'மூன்றாண்டுக் காலத்துக்காவது சம்பள உயர்வு கிடையாது; அரசுத் துறைகளில் புதிய ஊழியர்கள் பணிக்கு எடுத்துக் கொள்ளப்பட மாட்டார்கள்' என்று கடுமையான முடிவை எடுத்துச் செயல்படுத்தியாக வேண்டும்.

இந்த நடவடிக்கையின் மூலம் செலவைக் குறைக்கிற அதே நேரத்தில், தொழில் - வர்த்தக முதலீடுகளுக்கு உகந்த சூழலையும் உருவாக்கினால்தான், நாடு பொருளாதார வளர்ச்சி காணும். இல்லையேல், தொழில் வர்த்தக வளர்ச்சியால் சாண் ஏறும் இந்தியப் பொருளாதாரம், அரசின் வீண் செலவினங்கள் காரணமாக ஒரு முழம் அல்ல - பத்து முழம் சறுக்கிப் பாதாளம் நோக்கியே செல்லும். ●

## கொக்கரக்கோ...

புதிய முதல்வர் ராணே, தன்னைப் போலவே எல்லோரும் நேரம் காக்க வேண்டுமென்பதில் ரொம்பக் கண்டிப்பு. அரசாங்க அதிகாரிகளுக்கெல்லாம், "நீங்கள் செக்ரட்டரியோ, ப்யூனோ - யாரானாலும் சரி; நேரம் தவறாமல் வேலைக்கு வந்தால்தான் சம்பளம் கிடைக்கும்" என்ற தொனியில் சுறுசுறுவென்று ஒரு சர்க்குலரைச் சுழல விட்டார். ஏனிப்படி 'கொத்தி எடுக்கிறார்' என மந்த்ராலயா வட்டாரங்கள் கசமுசக்கின்றன.

கூவிக் குரல் கொடுக்கும் விஷயங்களில் ராணேவுக்கு எக்கச்சக்க பற்று என்பதற்கு பிரிதொரு உதாரணம் -

மசூதிகளில், லவுட்ஸ்பீக்கரை உபயோகிப்பதை எதிர்த்து பஜ்ரங்தல்காரர்கள் பலமாக முறையிட்டும், இது நியாயமான கோரிக்கை என்று பால்தாக்கரேவே ஆதரித்தும், ராணே கண்டு கொள்ளவில்லை! வேளா வேளைக்கு, நேரம் தவறாமல் குரல் கொடுக்கிறார்கள் என்பதாலா? தேர்தலுக்கு அதிக சமயமில்லை என்பதாலா? - எல்லாம் நேரம்தான்!



# 25 கோடி கல்யாணச் செலவு ஒரு பெரிய விஷயமா?

## சொன்னது நீதானா?

"உண்மையாயிருக்கிறேன் பேர்வழி என்று பிறர் மனதைப் புண்படுத்தும்விதத்தில் பேசாதீர்கள்! சிவசேனையில் ஏதோ ஒரு பதவி வகித்து விட்டால் உடனே கொம்பு முளைத்து விட்டதாக எண்ண வேண்டாம்! மக்களிடம் அன்போடும் பண்போடும் பழகக் கற்றுக் கொள்ளுங்கள்" - இப்படி எல்லாம் அட்வைஸ் கொடுத்தது யார்? சாட்சாத் தாக்கரேயேதான்! அத்துடன் விட்டாரா?

என்னைப் பாருங்கள்; நான் இன்றும் கூட 'பால்தாக்கரே' என்றுதானே கையெழுத்திடுகிறேன்? எங்கேயாவது 'பாலா சாஹேப் தாக்கரே' என்று போடுகிறேனா?" என்று வேறு உதாரணம் காட்டியிருக்கிறார் பாருங்கள்... அடடா! வினயமே! உன் மறு பெயர்தான் தாக்கரேவா?

## 'படா'டோபக் கல்யாணம்!

மேலே உள்ள படத்தில் ஜகஜ்ஜோதியான கோட்டையையும், கூட்டத்தையும் பார்த்துவிட்டு, "ஓஹோ, நம்ம 'கஜோல் - தேவ்கன்' ஜோடி திருமண விழா போலிருக்கிறதே" என்று நினைத்து விட்டீர்களா? ப்ச்... அவர்கள் ஸிம்பிளாக, தேவ்கனின் ஜுஹூ இல்லமான வர்ஷாவிலேயே, சிவப்பும் வெளுப்புமான பூக்களால் அலங்கரிக்கப்பட்ட மணமேடையில், மராத்திய முறைப்படி, 'சிக்'கனமாக மண முடித்துக்கொண்டு விட்டார்கள். (இந்த சமயம் பார்த்து தேவ்கனின் பாட்டி மண்டையைப் போட

வேண்டுமா?) ஆஷா போஸ்லேவும் அமிதாப்பும் மட்டுமாவது வந்ததால்தான் இது "ஃபிலிமி வெட்டிங்" என்பதே நினைவுக்கு வந்தது! பெண் வீட்டில் நடந்த மெஹந்தி விழாவிற்கு வந்திருந்த ஷாருக்கான் கூட, திருமணத்திற்கு ஆப்செண்ட் (அப்செட்?) ஆகிவிட்டாரே! காதல் ஜோடி இந்நேரம் ஹைர ஹைர ஹைரப்பா என்று ஐரோப்பாவில் ஹனி மூனித்துக் கொண்டிருக்கையில்... இந்தப் படத்திற்கு வருவோம். டில்லி ஏரியா



• கல்யாணக் கோலத்தில் கஜோல்!

ஃபரீதாபாத்தில், ஹரியானா விகாஸ் பார்ட்டி எம்.எல்.ஏ. ஒருவரின் மகன் திருமணத்துக்குப் போடப்பட்ட ஆடம்பரமான கோட்டை! யானை, குதிரைகளின் ஊர்வலங்கள் பற்றியும், ஹெலிகாப்டர் வாயிலாக இன்விடேஷன்கள் தூவப்பட்ட முறை பற்றியும், கல்யாணச் செலவு 25 கோடி என்பது பற்றியும் மும்பை பத்திரிகைகள் வாய் பிளந்தன... 100 ஜோடி கல்யாணங்களைக் கண்ட நம் தமிழர்களுக்கு, இதெல்லாம் 'கால்' தூசு அல்லவா?

## நவீன கிருஷ்ண லீலை!

மஹாபாரத ஸீரியலின் கிருஷ்ணரை நினைவிருக்கிறதா? நிதிஷ் பரத்வாஜ் – இன்றைய பி.ஜே.பி. எம்.பி.! கம்பாலா ஹில்லில் அவர் வசிக்கும் அலானா சேம்பர்ஸிலேயே குடியிருக்கும் வயசான ஷராஃப் தம்பதியருக்கு உதவி செய்வது போல் நடித்து (ஆபரேஷன்போது ப்ளட் டொனேஷனுக்கு ஏற்பாடு செய்து, ஃபோன் வசதி பெற வழி செய்து...) அவர்கள் நம்பிக்கைக்குப் பாத்திரமாகி, சில வெற்றுக் காகிதங்களில் நைஸாகக் கையெழுத்து வாங்கினாராம்! இப்போது அவர்கள் ஃப்ளாட்டையே அபகரிக்கப் பார்க்கிறாராம்! கேஸ் நடந்து கொண்டிருக்கிறது. த்ரேதா யுகத்து கிருஷ்ணர் வெண்ணை திருடினார், சேலைகளை அபகரித்தார். கலியுகத்துக் கிருஷ்ணர் காலத்துக்குத் தகுந்தாற்போல் ஃப்ளாட்டை அபகரிக்கிறார்!

## நெற்றிக் கண்ணைக் காட்டினும்....

சண்டைக்கே வந்து விட்டார்கள் 'கலா மண்டல'த்தார். 'மும்பையில் உறுப்பினர்களைத் திரட்டி சபா நடத்துவதே பெரும்பாடு; முலுண்டு ஃபைனார்ட்ஸுடன் இணைந்து கஷ்டப்பட்டு விழா நடத்தினோம்; இப்படி விமரிசிக்கலாமா?' என குமுறினார் பிரசிடெண்ட்ஜி – உண்மை தான்! இவ்வளவு கஷ்டப்பட்டு ஒரு விழாவை நீங்கள் ஏற்பாடு செய்யும்போது, பங்குபெறுபவர்கள், புறநகர் சபாக்கள் தானே என அலட்சியமாயிராமல், தரமான படைப்புகளைத் தர வேண்டாமா? "நாங்கள் என்ன செய்வோம்! சம்பந்தப் பட்டவர்கள் காட்டும் விமர்சன 'கட்டிங்'குகள் அடிப்படையில்தானே நிகழ்ச்சிகளைத் தேர்வு செய்கிறோம்." எனப் பாயிண்டைப் பிடித்தார் – ஒன்றுமில்லாததை ஆஹா ஓஹோ என்று எழுதுவதால் (அல்லது எழுத வைப்பதால்) தானே நீங்கள் ஏமாற வேண்டியிருந்தது? விமர்சனம் 'உண்மை'யாக இருந்தால், சம்பந்தப்பட்ட கலைஞர்களுக்கும் குளிர் விட்டுப் போகாமல், அடுத்த முறை மேடை ஏறும் போது ஒரு பொறுப்புணர்ச்சி இருக்குமல்லவா?

'சுதா ரகுநாதன் கச்சேரியை ஏன் புகழவில்லை?' என்றார். விழாவில் மிகச் சிறப்பான நிகழ்ச்சியாக இது ஒன்றே அமைந்தது என்பதில் ஐயமில்லை! ஆனால் அல்ஃபோன்ஸோ இனிக்கும் என்று சொல்ல வேண்டுமா என்ன? அது புளித்தால்தானே செய்தி? குறைகளைக் கட்டிக் காட்டுவது கலைகளை வளர்ப்பதற்குத் தான். அதை மூடி மறைப்பதால் யாருக்கு லாபம்?

— ஜெயஸ்ரீ ராஜ்



# பெரியாரின் சக்கர நாற்காலி

பகுத்தறிவுப் பிரசாரம் செய்ய பல ஊர்களுக்கும் போய் வந்து கொண்டிருந்த தந்தை பெரியார், அறுபது வயதைக் கடந்தபோது, கைத்தடி பயன்படுத்த ஆரம்பித்தார். எண்பதைக் கடந்தபோது, கைத்தடி பலன் தரவில்லை. நடக்கும்போது, இருவரை இரண்டு பக்கங்களிலும் இருக்கச் செய்து, அவர்களின் தோள்களில் கையைத் தாங்கியபடி நடப்பார். அப்போது நகைச்சுவையுடன், "நான் கொஞ்சம் விசித்திரமான மனிதன். ஆறுகால்களுடன் நடமாடுகிறேனல்லவா! அதனால்தான்" என்பாராம்.

தொண்ணூறு வயதைத் தாண்டிய பின், பெரியார் நடப்பதற்கு மிகவும் சிரமப்படுவதைக் கண்ட அவருக்கு நெருக்கமானவர்கள், அவருக்காக ஒரு சக்கர நாற்காலி ஏற்பாடு செய்தனர்.

பொதுக் கூட்டங்கள் இல்லாத நாட்களில், மாலை நேரங்களில் பெரியார் திடலில் சக்கர நாற்காலியில் நகர்ந்தபடியே காற்று வாங்குவார் பெரியார். அப்படியே, கூட வருகிறவர்களிடம் பல்வேறு விஷயங்கள் குறித்தும் பேசிக் கொண்டிருப்பார்.

மற்றவர்கள் எவரும் அவரை அமரவைத்து, சக்கர நாற்காலியைத் தள்ளுவதை அவர் விரும்பியதில்லை. 'அவங்களுக்கு ஏன் வீண் சிரமம்?' என்பார்.

அறிஞர் அண்ணா, முதலமைச்சராக இருந்தபோது, மருத்துவ சிகிச்சைக்காக அமெரிக்கா புறப்பட்ட சமயம், முதல் நாள் இரவே பெரியார் அண்ணாவைச் சந்தித்துப் பேசிவிட்டு, தன்னால் மறுநாள் அதிகாலை விமான நிலையத்துக்கு வர இயலாது என்று சொல்லிவிட்டு, விடை பெற்றுக் கொண்டு விட்டார். ஆனால் மறுநாள் அதிகாலை விழித்துக் கொண்டு, 'ஏர்போர்ட்டுக்குப் போய் அண்ணாவை வழியனுப்பி வைக்க வேண்டும். புறப்படலாம்' என்று சொல்லி விட்டார். அண்ணா வரும் முன்பாகவே, பெரியார் விமான நிலையம் சென்று சக்கர நாற்காலியில் அவருக்காகக் காத்திருந்தார். அண்ணா வந்ததும், கார் கண்ணாடி வழியே சக்கர நாற்காலியில் அமர்ந்திருக்கும் பெரியாரைப் பார்த்து விட்டார். அவர் முகத்திலே எதிர்பாராத சந்தோஷம். ஆனால் டாக்டர்கள் அறிவுரையை மீறி, அண்ணாவால் பேச முடியாமல் போய்விட்டது!

இன்னொரு முக்கியமான சம்பவம் : "ராஜாஜி மறைந்தபோது, அவரது இறுதி ஊர்வலத்தில் கலந்து கொண்ட பெரியார், இறுதிச் சடங்குகள் நடந்த மயானம் வரை வந்திருந்தார். மயானத்திற்கு வந்திருந்த பல பெருமக்களில் அன்றைய ஜனாதிபதி வி.வி. கிரியும் ஒருவர். இறுதிச் சடங்குகள் நடந்து கொண்டிருந்த போது, இந்தியாவின் ஜனாதிபதி நிற்பதைக் கண்ட பெரியார், தாம் உடனடியாக எழுந்து கொண்டு, ஜனாதிபதி கிரி அமர தன் சக்கர நாற்காலியைக் கொடுத்தார். இந்தக் காட்சி, அங்கே கூடியிருந்த அனைவர் மனதையும் நெகிழச் செய்தது" என்று நினைவு கூர்ந்தார் திராவிடர் கழகப் பிரமுகரான பூங்குன்றன்.

பெரியார் மறைவுக்குப் பின், அவரது உடல் பெரியார் திடலிலேயே அடக்கம் செய்யப்பட்டது. அதன் பின் ஒரு வருடத்தில் அவர் தங்கிய அறை, பெரியார் நினைவகமாக மாற்றி அமைக்கப்பட்டது. அங்குதான் சக்கர நாற்காலி உட்பட, பெரியார் பயன்படுத்திய பல்வேறு பொருட்களும் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன. இங்குள்ள மற்ற பொருட்களில் சில : பெரியாரின் கைத்தடி, கண்ணாடி, பூதக் கண்ணாடி, கைலி, சட்டை, சாப்பாட்டுத் தட்டு, படுக்கை.

— கௌதம்

படம் : ஸ்ரீஹரி

## அப்புறம் என்ன ஆச்சு?

## ஏழு வினாடிகளில் இடிந்த மூன்று கோபுரங்கள்!

ஐம்பது வருடங்களுக்கு முன் கட்டப் பட்ட அனல் மின் நிலையம் அது. முப்பத் தாறு வருஷம் உழைத்துவிட்டு, அது ஓய்ந்து போனது. அதே இடத்தில், புதிய மின் உற்பத்தி நிலையம் உருவாக்கத் திட்டமிடப் பட்டது. உடனே மொத்த இடமும் தரை மட்டமாக்கப்பட்டு விட்டது என்றாலும், பெரும் சவாலாக இருந்தவை மின் உற்பத்தி நிலையத்தின் மூன்று ராட்சச 'கூலிங் டவர்கள்' (கோபுரங்கள்). அறுபதடி உயரம். நாற்பதடி விட்டம். எப்படி அவற்றை இடிப்பது என்று அனைவரும் மண்டையைப் பிய்த்துக் கொள்ள, 'அதை நாங்கள் செய்து கொடுக்கிறோம்' என்று முன் வந்தவர் மோகன் ராமனாதன். சென்னைக் காரர். நாற்பதாண்டு கட்டட அனுபவமுள்ள குடும்பத்தின் மூன்றாவது தலைமுறைக்காரர்.

மோகனும் அவரது குழுவினரும் அந்த கோபுரங்களைச் சென்று பார்த்தனர். பதினைந்து நாட்களில், பலவிதமான கணக்குகளைப் போட்டு, இடிக்கத் தயாரானார்கள். குறிப்பிட்ட சுபமுகூர்த்த வேளையில், ஏழே ஏழு விநாடிகளில் மூன்று கோபுரங்களும் சிதைந்து கீழே விழுந்தன! அதுவும் எப்படி? கோபுரத் தின் அடிப்பகுதியை ஒட்டியே. சுற்று வட்டாரத்தில் எந்தவித பாதிப்பையும் ஏற்படுத்தாமல்.





• மோகன் ராமனாதன்

இப்படி, மூன்று மின் உற்பத்தி நிலைய கோபு ரங்கள் தரைமட்டமானது வேறு எங்கு மில்லை. சென்னையில்தான்! (பேசின் பிரிட்ஜ்).

# இடி மன்னன்!

## இது எப்படி சாத்தியமானது?

''கோபுரங்களை நுணுக்கமாய் ஆராய்ந்து, தரைமட்டத்திலிருந்து ஆறு அடி உயரத்துக்குள் மிகச் சரியாகக் கணக்கிடப்பட்ட அளவில் வெடி மருந்து வைத்து, அதை வெடிக்கச் செய்தேன். முதலில் ஒரு பக்கம் வெடித்தவுடன், அதற்கு எதிர்ப்புறத்தில் ஒரு சில மைக்ரோ செகண்டுகள் வித்தியாசத்தில் மருந்து வெடிக் கும். இதை யடுத்து, கால்களை மாறி மாறி அசைத்தபடி மனிதன் உட்காருவது போல, மொத்த கோபுரமும் ஸ்லோ மோஷனில் தரை யில் இறங்கி விடும். இதற்கு 'இம்பல்ஷன் டெக்னா லஜி' என்று பெயர். இந்த மூன்று கோபு ரங்களையும் மனி தர்களைக் கொண்டு இடிக்க வேண்டுமென்றால், ஐம்பது பேர் வேலை செய்ய, ஆறுமாத மாவது பிடித்திருக்கும். நாங்கள் அரை நிமிடத்தில் முடித்து விட் டோம்!

"நான், இந்த வேலைக்காக, 'கன்ட்ரோல்டு டெமாலிஷன் இன்கார்பரேட்' என்கிற அமெரிக்க நிறுவனத்தின் தொழில் நுட்பத்தைப் பயன் படுத்தினேன். அந்த அமெரிக்கக் கம்பெனி சராசரியாய் வாரம் ஒரு இடிபாடு நடத்திக் கொண்

டிருக்கிறது" என்கிறார் மோகன்.

இவர் சென்னை ஐ.ஐ.டி.யில் சிவில் இஞ்சினியரிங்கும், அதன் பின் அமெரிக்காவில் எம்.பி.ஏ .வும் படித்தவர்.

இந்த சிவில் இஞ்சினியர் வழக்கமான கட்டடம் கட்டும் பணிகளை எடுத்துக் கொள்வ தில்லை. ஆனால், தொழிற்சாலைகள் கட்டிக் கொடுப்பதில் நிபுணர். டி.வி.எஸ் உட்பட, இவருக்குப் பல கஸ்டமர்கள்.

மோகனுடைய அனுபவங்கள் பல வித்தியாசமானவை; சுவையானவை.

## ஆஸ்பத்திரிக்கு 'அறுவை சிகிச்சை'!

சென்னையின் பிரபல மருத்துவமனை ஒன்று பழைய கட்டடத்தில் இயங்கி வந்தது. அங்கே, புதிய கட்டடம் கட்டத் தீர்மானிக்கப்பட்டது. புதிய கட்டடத்தின் பிளான்படி, பழைய கட்டடத்தின் ஒரு பகுதியில் பத்தடி அகலத்துக்கு இடிக்கப்பட வேண்டும். மிக உயர்ந்த கட்டடத்தினை, முழுமையாக இடிக்கப் பயன்படுத்தும் இம்பல்ஷன் டெக்னாலஜி, இங்கே பயன்படாது! சுத்தி வைத்து இடித்தாலும், ஏற்படும் வைப்ரேஷனும் சப்தமும் அங்குள்ள நோயாளிகளை பாதிக்கும். என்ன செய்வது? இங்கே 'டையமண்ட் கட்டிங்' என்ற டெக்னாலஜியைப் பயன்படுத்தினோம். மிகவும் சக்தி வாய்ந்த வைர முனை கொண்ட 'அறுவை'க் கருவியால், எதுவரை இடிக்க வேண்டுமோ, அங்கே கத்தியால் வெண்ணெய் வெட்டு வது போல, சாதுர்யமாய் வெட்டினோம். நோயாளி களுக்கு எந்தவித பாதிப்பும் இல்லை.



• பணி இடத்தில் மோகன்

## 'ஒட்ட வைக்க'வும் தெரியும்!

ஒரு சர்க்கரை ஆலை, தனது உற்பத்தியை இரண்டு மடங்காகப் பெருக்கத் திட்டமிட்டது. புதிய இயந்திரங்கள் வந்து இறங்கின. பழைய இயந்திரங்கள் அகற்றப் பட்டன. பழைய இந்திரம் இருந்த ஐந்தடி நீளம், ஐந்தடி அகலம், நான்கடி உயரம் கொண்ட மேடையை, புதிய இயந்திரத்தின் அளவுக்கேற்பப் பெரிதாக்க வேண்டும். பழைய மேடையை அஸ்திவாரத்துடன் இடித்து அகற்றி விட்டு, புதிய அளவுக்கேற்ப மேடை அமைப்பதுதான் வழக்கம். ஆனால், நான் அந்த சர்க்கரை ஆலையில் ஒரு புதிய முயற்சியை செயல்படுத்தினேன். பழைய மேடையை சிதைக்காமல், புதிய மெஷினுக்குத் தேவையான அதிகப்படியான மேடையின் பகுதிகளை மட்டுமே கட்டினேன். நவீன தொழில் நுட்பத்தின் மூலமாக, பழைய மேடையையும், புதிதாகக் கட்டப் பட்ட பகுதியையும், பலமாக இணைத்தேன். இதனால் புதிய மிஷின் விரைவில் செயல் படத் தொடங்கி, வருவாய்க்கு வழி செய்தது. பழைய மேடையை இடிக்கிற காலமும் செலவும் மிச்சம் ஆனது. இதைக் கேள்விப்பட்ட பின், விஸ்தரிப்புப் பணி மேற்கொள்ள விரும்பிய பல சிமெண்ட், கெமிகல் தொழிற்சாலைகள் என்னை அணுகின.

## கூரையைப் பொத்துக் கொண்டு...!

சென்னையில் ஒரு நிறுவனம் தனது தலைமை யகத்துக்கான மூன்று மாடிக் கட்டடம் கட்டியது. ஏறத்தாழ முழுக் கட்டடமும் கட்டி முடிக்கப்பட்டு விட்ட நிலை. திடீரென்று, மூன்றாவது மாடியில் ஒரு 'தோட் டம்' அமைக்க விரும்பினார்கள். அதற்கென, மொட்டைமாடி, நேரடியாக சூரிய வெளிச்சம் தேவைப் பட்டது. கான்கிரீட் மேற்கூரையில், சுத்தி போன்ற ஆயுதங்களால் அடித்து ஓட்டை போடுவது டேஞ்சர். எங்களை அணுகினார்கள். 'டயமண்ட் டிரில்லிங்' முறையில் தேவையான சைசில், பிசிறு இல்லாமல், மிக நுணுக்கமாக மூன்று துளைகள் போட்டுக் கொடுத்தேன். அந்த நிறுவனத்தினர் அசந்து போனார்கள்.

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**
படங்கள் : **ப்ரவீன்குமார்**



# "சும்மா பார்த்துட்டுத் தரக்கூடாதா?"

● விஜி

"எப்பவும் நான்தான் கடைக்குப் போகணும்; எப்பவும் அவளுக்குப் பிடிச்ச சானல்தான் பார்க்கணும்; எப்பவும் அவளுக்குத்தான் முதல்ல சாக்லேட் தருவீங்க... இல்லையா...? எனக்கு மட்டும் எல்லாம் லாஸ்ட், ஆனா நான்தான் எல்லாத்துக்கும் விட்டுக் கொடுக்கணும்..."

– சின்ன எதிர்ப்பைக் கூட வெளிப்படுத்தாமல் தங்கைக்கு விட்டுக் கொடுக்கும் மூத்தவன், இத்தனை குமுறலை மனத்தில் வைத்துள்ளான் என்பது தெரிய வரும் திடீர்க் கணத்தில் என்ன செய்வது...?

முதல் வேலையாக நமது கோபத்தையும் அதிர்ச்சியையும் அடக்கியாக வேண்டும்!

தங்கையின் முன்னிலையிலேயே அண்ணன் கேட்கும் இந்தக் கேள்விக்குப் பதில் சொல்வது கத்திமேல் நடக்கும் வித்தைதான்.

மூத்தவனின் துக்கமும் வருத்தமும் பொறாமை கலந்து வெளிப்படுகிறபோது இளையவளின் பெருமையும் பெருமிதமும் சற்றுக் கூடவே செய்யும். இருவித 'நெகடிவ்' உணர்வுகளையும் வளர்த்தாமல் இருவருக்குமே நியாயம் வழங்கியாக வேண்டும்.

"இல்லை கண்ணா...! கொஞ்சம் யோசிச்சுப் பாரு... நேத்து உனக்குப் பிடிக்கும்னுதானே சப்பாத்தி பண்ணிக் கொடுத்தேன்..."

"எப்பவாவது ஒரு சமயம்தான் எனக்குன்னு செய்வீங்க... ஆனா நிறைய தடவை எல்லாமே தீபாவுக்குத்தான்..."

"அவ உன்னைவிட ரொம்ப சின்ன குழந்தை இல்லையா...? அதனால்தான் சில சமயம் அவளுக்காக அதிகமா பண்ண வேண்டியிருக்கு... பாரு, அவளால ரோடை கிராஸ் பண்ணி கடைக்குப் போய் பிரெட் வாங்கிட்டு வர முடியுமா...?"

"முடியாது... பைசா கொடுத்து கரெக்டா சில்லறை வாங்கவும் தெரியாது..."

"அதனாலதான் உன்னை அனுப்பறேன். அவளும் உன் மாதிரி ஆகிறபோது அவளையும் அனுப்புவேன்..."

இதற்குமேல் வாதிட முடியாது என்பதால் புகார் வேறு திக்கு நோக்கித் திரும்பும்:

"ஆனா, அவ எப்பவும் என் ஜியாமெட்ரி பாக்ஸைத் திறந்து எல்லாத்தையும் எடுத்து எடுத்துப் பார்க்கறா..."

இந்தப் புகார் வெளிப்படும்போது, என்ன சொல்ல...?

அ) "போனால் போகுது; அவ சின்னவதானே. தெரியாம செய்யறா. விட்டுடு."

ஆ) "எனக்குக் கிடைக்கற மாதிரி ஏன்



உன் பொருளை வைக்கறே...? பத்திரமா வைக்கக் கத்துக்கோ..."

இ) "போதும்! நீ கணக்குல மார்க் வாங்கற லட்சணத்துக்கு ஜியாமெட்ரி பாக்ஸ் வேற..."

மேற்படி மூன்று பதில்களுள் எது சரி...? எதுவும் சரியில்லை என்பதே சரி!

மூத்த குழந்தையின் பொறுப்புகளையும் விட்டுக் கொடுக்க வேண்டிய எல்லையையும் நிர்ணயிக்கும்போதே இளைய குழந்தையின் வரம்பையும் தீர்மானித்துத் தெளிவுபடுத்திவிட வேண்டும்.

"இதோ பார்! அண்ணாவுடைய ஜியாமெட்ரி பாக்ஸை நீ எடுக்கக் கூடாது."

"நான் சும்மா பார்த்துட்டு வைச்சுடுவேன்."

"இல்லைம்மா! அவ காம்பஸ்ஸை அகட்டி அகட்டிப் பார்த்துக்கிட்டே யிருக்கா..."

"சும்மா பார்க்கறதுக்குக் கூட இனிமே நீ அதை எடுக்கக் கூடாது. இப்போ உனக்கு அதையெல்லாம் சரியா உபயோகிக்கத் தெரியாத வயசு... இன்னும் கொஞ்சம் பெரியவளானதும் நீயும் கத்துக்கலாம்."

இப்படிச் சொல்வதோடு இதைக் கடைப்பிடிக்கவும் செய்வதால் வயதுக்கும் பொறுப்புக்கும் இடையேயுள்ள தொடர்பு இரு வழிகளில் உறுதிப்பட்டுப் போகிறது.

குறிப்பிட்ட வயதை எட்டும் வரையில் செய்யக் கூடாதவை சில உண்டு; குறிப்பிட்ட வயதை எட்டிய பிறகு செய்தே ஆக வேண்டியவையும் உண்டு.

வயது குறைவாய் இருப்பதால் சலுகைகள் மட்டுமே அனுபவிக்க முடியாது. அந்த வயதுக்கு உரிய விதிகளைக் கடைப்பிடித்தாக வேண்டும்.

– இதையெல்லாம் வாக்கியம் வாக்கிய மாகச் சொல்லிப் புரியவைக்க முடியாது. நடைமுறையில்தான் சுட்டிக்காட்டியாக வேண்டும். இத்தனையையும் மீறி, மீண்டும் மீண்டும் அதே ரகமான வாக்குவாதமும் சண்டைகளும் வரத்தான் செய்யும். ஒவ்வொரு முறையும் பொறுமை காப்பதற்காக நிறைய பிரார்த்தனை செய்யலாம்!

(அடுத்து சந்திக்கும் வரை...)

# தேர்வு நேரம்: மாணவர்களுக்கு சில டிப்ஸ்

● படிக்கும் அறையில் உங்கள் கவனத்தை திசை திருப்பக்கூடிய வகையில் காமிக்ஸ் புத்தகங்கள், W.W.F அட்டைகள், இப்படி எது இருந்தாலும் அதையெல்லாம் வேறு ஏதாவது இடத்தில் வைத்து விடுங்கள். படிப்பின் நடுவே சபலம் தோன்றி அவற்றைப் புரட்டிப் பார்க்காமல் இருக்கலாம்.

● சிலருக்கு வானொலியை ஒலிக்க விட்டுக்கொண்டே படித்தால்தான் படிப்பு ஏறும் என்பார்கள். வீணை, மாண்டலின் போன்ற மெல்லிய இசையைக் குறைந்த வால்யூமில், ஒலிநாடாவில் ஓடவிட்டு, படிப்பது சிலருக்கு ஏற்புடையதாக இருக்கும்தான். ஆனால் பாட்டுக்கள், நாடகங்கள் போன்றவை நிச்சயம் கவனத்தைச் சிதறடிக்கும். வேண்டாம்.

● வீட்டில் ஒரு கருப் பலகையை வாங்கி வைத்துக் கொள்வது நல்லது. அறிவியல் பாடங்களில் படம் வரைந்து பார்க்கவும், கணிதப் பாடத்தில் சூத்திரங்கள் சரியா என்பதை உறுதி செய்து கொள்வதற்கும் பெரும் பயனாக இருக்கும்.

● விடியற்காலையில் படித்தால்தான் மனத்தில் பதியும் என்பதுண்டு. இதற்கு முக்கியக் காரணம் அப்போது நிலவும் அமைதிதான். மற்றபடி உங்களுக்கு நிம்மதியாகப் படிக்க உகந்த நேரம் இரவா, அதிகாலையா என்பதை ஆராய்ந்து, அந்த நேரத்தில் அதிகம் படிக்கவும்.

● தேர்வுக்கு ஒருமாதம் முன்பிலிருந்தே நோயாளிகளிடமிருந்து கொஞ்சம் விலகி இருங்கள். ஜலதோஷம் போன்ற சாதாரண அவஸ்தைகள்கூட, தேர்வுக் காலத்தில் பேரவஸ்தைகளாக மாறி வதைக்கக் கூடும்.

● படிக்கும்போதே சிறு குறிப்புகள் எடுத்துக் கொண்டால், 'தேர்வுக்கு முன்னால் எல்லாப் பாடங்களையும் ஒருமுறை படிக்க முடியாமல் போச்சே' என்ற ஆதங்கத்திலிருந்து தப்பலாம். சிறு குறிப்புகளை தனி நோட்டுப் புத்தகத்தில் எழுதிக் கொள்ள சோம்பல் படுபவர்கள் புத்தகத்திலேயே முக்கியமான வார்த்தைகளை (இவை நினைவுக்கு வந்தால் மொத்த விடையும் நினைவுக்கு வந்து விடும் எனும்படியானது) அடிக்கோடிட்டுக் கொள்ளலாம்.

● இரண்டு மூன்று பேராகச் சேர்ந்துகொண்டு "க்ரூப் ஸ்டடி" என்ற பெயரில் படிப்பதில் சில ஆபத்துகள் உண்டு. பாடம் தொடர்பில்லாத அரட்டை,



தேர்வு பயம் மற்றும் ஆறுதல் ஆகியவற்றில் நேரச் செலவு, ஒருவருக்கு நன்றாகத் தெரிந்த பகுதியையே மற்றவர்களுக்காக மீண்டும் படிக்க வேண்டிய நிர்பந்தம் — இப்படிப் பல.

● கேட்பதற்குச் சிரிப்பு வரலாம். வீட்டில் வேறு யாரும் காது கொடுத்துக் கேட்கத் தயாராக இல்லையென்றால், ஏதாவது குழந்தையிடமோ அல்லது சுவரிடமோகூட நீங்கள் படித்ததை சொல்லிப் பார்க்கலாம். எது நினைவிலிருந்து மறந்து போனது என்பதைக் கண்டுக் கொள்ள முடியும்.

● வானவில்லின் நிறங்கள் எவை என்று கேட்டால் நம்மில் பலரும் "VIBGYOR" என்ற வார்த்தையைக் கொண்டு அதன் ஏழு நிறங்களையும் கூறி விடுவோம், வரிசைக் கிரமமாக! இதே உத்தியை நிறைய பாயிண்டுகளை நினைவில் கொள்ள வேண்டிய பதில்களுக்கும் பயன்படுத்

தலாமே.

● தேர்வுக்குப் படிக்கும்போது முடிந்த வரை பகல்வேளையிலே படிப்பது நல்லது. இரவில் கொசுத்தொல்லை அதிகமாக இருக்கக் கூடும் என்பதோடு, மின் வெட்டு ஏற்படவும் வாய்ப்பு உண்டு. வீட்டில் ஒரு எமர்ஜென்ஸி விளக்கு கட்டாயம் இருக்க வேண்டும். முடியாதவர்கள் லாந்தர் விளக்கில் மண்ணெண்ணெய் நிரப்பப்பட்டு இருக்கிறதா என்பதை உறுதி செய்து கொள்ள வேண்டும். தவிர மெழுகுவர்த்தி, தீப்பெட்டி போன்றவற்றை வாங்க அப்போது ஓட வேண்டாமே.

● தேர்வுக்கு ஒருவாரம் முன்பிலிருந்தாவது வெளியிடங்களில் சாப்பிடுவதைத் தவிர்ப்பது நல்லது. காய்ச்சி வடிகட்டிய நீரை மட்டுமே அருந்துங்கள்.

# சாய்ஸ் விடாமல் இதைப் படியுங்கள்!

● மிகச் சிறிய வீடு அல்லது ஃப்ளாட் என்றால், வரும் விருந்தினர்களைப் பெரியவர்கள் போர்டிகோவுக்கோ, மொட்டை மாடிக்கோ அழைத்துச் சென்று, குழந்தைகளின் படிப்புக்கு இடைஞ்சல் இல்லாமல் பார்த்துக் கொள்ள வேண்டியது அவசியம்.

● தேர்வுக்குச் சில நாட்களாவது இருக்கின்றனவென்றால் பாடங்களைப் படிக்கும்போதே அவற்றில் ஏற்படும் சந்தேகங்களை ஒரு தனி நோட்டுப் புத்தகத்தில் குறித்து வைத்துக்கொண்டு, அவற்றிற்கான விளக்கங்களை ஆசிரியர், பெற்றோர் அல்லது நண்பர்களிடமிருந்து பெறலாம்.

● தேர்வுக்கு முன் 'படிப்பு விடுமுறை'யில், ஒரேயடியாக வயிறு முட்டச் சாப்பிட வேண்டாம். ஒருவித மெத்தனம் பரவும். சிறிது சிறிதாகச் சாப்பிடுவது (அதிக அளவில் அது திரவமாக இருக்கட்டும்) நல்லது. அடிக்கடி சோர்ந்து போனால் க்ளுகோஸ் போன்றவற்றை நாடலாம்.

● தேர்வு மற்றும் அதற்கு முந்தைய கால கட்டத்தில் ஓய்வு என்பது (இரவில் தூங்கும் நேரத்தை விட்டுவிட்டால்) கண் அயர்வதோ, டீ.வி பார்ப்பதே கூடாது. அவ்வளவாகப் பிடிக்காத சப்ஜெக்டிலிருந்து பிடித்த சப்ஜெக்டைப் படிப்பதே ஓய்வு என்பதாகும்!

● எதிர்மறை சிந்தனைகளை ஒரு போதும் வளர்த்துக் கொள்ள வேண்டாம். வீட்டில் இருப்பவர்கள் ''நீ என்னத்த எக்ஸாம் எழுதிக் கிழிக்கப் போறியோ!'' என்றெல்லாம் அமில வார்த்தைகளைக் கொட்டினால்கூட ''என்னால் சாதிக்க முடியும்'' என்ற முழு நம்பிக்கையோடு தேர்வு அறைக்குள் நுழையுங்கள்.

● தடையில்லாமல் எழுதும் பேனாக்கள் மிக முக்கியம். பப்ளிக் எக்ஸாம்களில் அது இங்க் பேனாவா, பால் பாயிண்ட் பேனாவா என்பது பற்றித் தேர்வாளர்கள் கவலைப்படுவதில்லை. விலையுயர்ந்த, ஆனால் விரல்களுக்கு






ஒத்துப் போகாத பேனாவை சிலர் தேர்ந்தெடுத்து விடுவது சோகம்.

● எந்தக் கேள்விக்கும் பதிலளிப்பதற்கு முன் அதை முழுமையாகப் படித்துப் பாருங்கள். நண்பர் ஒருவரின் அனுபவம் இது. "ஏதாவது மூன்றிற்கு விடை எழுதுக" என்ற தலைப்பில் கேள்வித் தாளில் முதல் பக்கத்தின் அடி பாகத்தில் ஐந்து சாய்ஸ் கொடுத்திருந்தார்கள். அவற்றில் மூன்றை எப்படியோ சமாளித்து எழுதிவிட்டு கேள்வித்தாளின் அடுத்தப் பக்கத்தைத் திருப்பிய நண்பருக்கு அதிர்ச்சி. அங்கே அதே கேள்விக்கு நண்பருக்கு மிக நன்றாக விடை தெரிந்த மேலும் இரண்டு சாய்ஸ்கள் கொடுக்கப்பட்டிருந்தன.

● "ஐந்து கேள்விக்கு விடையெழுதச் சொன்னால் அதற்கு மேல் எழுதக் கூடாது. அப்படி எழுதினால் அதை மதிப்பிட மாட்டார்கள். சொல்லப் போனால் தண்டிக்கும் விதமாக மார்க்கைக் குறைப் பார்கள்" என்று சிலர் பயமுறுத்துவார்கள். கவலைப்படாதீர்கள். சாய்சுக்கு அதிகமாகவே ஓரிண்டு கேள்விகளுக்கான பதிலை எழுதுங்கள். கருணையுள்ள மதிப்பீட்டாளர் என்றால் அதிக மதிப்பெண் பெறும் ஐந்து விடைகளைக் கணக்கெடுத்துக் கொள்வார்கள். ஆனால் ஒன்று! சிறிய விடைகளுக்கு மட்டும் இந்த டெக்னிக்கைப் பயன்படுத்துங்கள்.

● நிறைய பக்கங்கள் எழுதினால் அதிக மதிப்பெண்கள் என்று நினைத்துக் கொண்டு தேவையில்லாததை எல்லாம் திணிப்பதோ, ஒரு பக்கத்துக்கு ஏழெட்டு வரிகள்தான் என்று எழுதுவதோ சரியல்ல. பல விடைத்தாள்களை அடுத்தடுத்து திருத்தி சோர்ந்து போயிருக்கும் தேர்வாளர், பாயிண்டுகளை பளிச்சென்று நறுக்சுருக்காக எழுதும் மாணவனுக்கே சந்தோஷத்தோடு முழு மதிப்பெண்ணையும் வழங்குவார். 'இலக்கிய நயம் தேவைப்படும் மொழி'க் கேள்விகள் விதி விலக்கு)

● சாய்ஸ் உள்ள கேள்விகளில் முழுமையாகப் புரியாத எந்தக் கேள்வியையும் தேர்ந்தெடுக்க வேண்டாம். "ஒரு நதியின் சுய சரிதை" என்ற கேள்விக்கு விடையாக ஒரு நதியின் கதையைக் (நதி தானே கூறுவதுபோல் இல்லாமல்) கண்டு வியப்பதுபோல எழுதிய காரணத்தால் அதற்கான மொத்த மதிப்பெண்ணையும் ஒரு மாணவன் இழக்க நேரிட்டது.

● ஒரு தேர்வு முடிந்ததும், அதில் எவ்வளவு மதிப்பெண் வரும் என்பதை உறுதி செய்து கொள்ள சக மாணவர்களோடு நாம் எழுதிய பதில்களை ஒப்பிட்டுப் பார்ப்பது இயல்புதான். ஆனால் இந்த போஸ்ட்மார்டத்தை வீடு வந்த பிறகுகூட தொடர்ந்து செய்வது அடுத்தத் தேர்வுக்குப் படிக்கும் நேரத்தைக் குறைத்து விடும். எல்லா சுய மதிப்பீடுகளையும் மொத்தத் தேர்வு முடிந்த பிறகு வைத்துக் கொள்ளலாமே.

● தேர்வுக்கூடத்துக்குச் செல்லும்போது காற்று நன்றாகப் புகக் கூடிய பருத்தி உடையையே அணிந்து செல்லுங்கள். ஆண்களென்றால் அரைக்கைச் சட்டையே போதும். மறக்காமல் ஒரு சிறு துண்டையோ, கைக்குட்டையையோ எடுத்துச் சென்றால் வியர்வை, விடைத் தாளில் படுவதைத் தவிர்க்கலாம். சீனியர் மாணவிகள் மாதத்தின் அசௌகரியமான நாட்களுக்கான ஏற்பாடுகளோடு சென்றால் முழு கவனமும் தேர்விருக்குமாறு பார்த்துக் கொள்ளலாம்.

● சரித்திரம், பூகோளம் ஆகிய தேர்வுகளுக்குப் பயிலும்போது, உலக அல்லது நாட்டு வரைபடங்களை வாங்கி, இடங்களை அவற்றில் சரியாகக் குறிக்க முடிகிறதா என்பதை உறுதி செய்து கொள்ள வேண்டும். இதைப் பின்பற்றிப் பார்த்தால்தான் இதன் அருமை புரியும்.

● தேர்வுத்தாளில் உங்கள் கையெழுத்து (அழகானதோ, இல்லையோ) தெளிவாக இருக்கட்டும். குறைந்தது உங்கள் வரிகள் கிட்டத்தட்டவாவது நேர்க்கோட்டில் அமையட்டும்.

● தேர்வு மணி அடித்த பிறகும்கூட பத்து நிமிடங்களுக்கு அரக்கப் பரக்கப் படித்துவிட்டு தடதடவென்று பாய்தோடி வந்து வியர்வை பொங்க விடைத்தாளை எடுப்பது தவறு. பதற்றம், சீராகச் செயல் பட வைக்காது என்பதோடு, குறிப்பிட்ட நேரத்துக்கு முன்பே விடைத்தாளில் பதிவு எண் போன்ற விபரங்களை எழுத அனுமதிப்பார்கள் என்பதால் அந்த நேரச் சலுகையையும் இழந்து விடுவீர்கள்.

● தேர்வு எழுதத் தொடங்கிய கொஞ்ச நேரத்திலேயே பாத்ரூம் போக வேண்டுமென்ற உணர்வு அழுத்தமாக ஏற்பட்டால், வெட்கம் பார்க்காமல் தேர்வாளரின் அனுமதியுடன் முடித்துக் கொள்வது நல்லது.

● முந்தைய தேர்வுகளில் உங்களது எந்த பலவீனங்கள் வெளிப்பட்டன? எந்தெந்த மாதிரிக் கேள்விகளுக்கு நீங்கள் குறைவான மதிப்பெண்கள் பெற்றீர்கள் என்பதைப் பற்றிய சுய பரிசோதனை மிக முக்கியம்.

● தேர்வுக்குச் செல்லுமுன் லைட்டாக எதையாவது சாப்பிட்டுவிட்டுச் செல் லுங்கள். வெற்று வயிறு, ஹவுஸ்புல் வயிறு இரண்டுமே இரண்டு விதங்களில் ஆபத்து.

● "எனக்குத் தெரிந்த எல்லா விடை களையும் எழுதுவதற்குள் பெல்லடிச் சிடுச்சு" என்று அடிக்கடி சொல்கிற ரகம் என்றால் அந்த மாணவனுக்கு எழுத்தில் வேகம் போதாது என்று அர்த்தம். படிப்பதோடு, வேகமாக எழுதும் பயிற்சியும் தேவை.

● டிராஃபிக் ஜாம், சரியில்லாத சாலைகள், பஸ்/ ஆட்டோ வேலை நிறுத் தம் என்று பல்வேறு திடீர் இடைஞ்சல்கள் தோன்றலாம். எனவே தேர்வு மையத்துக்கு அரைமணி நேரமாவது முன்னால் செல்லும்படி திட்டமிட்டு செயல்படுவது நல்லது.

யோசனைகள்: **ஜி.எஸ்.எஸ்.**

# விளையாட்டுத் துறைக்கு உதவலையே பட்ஜெட்!

## - 'ஹாக்கி' பாஸ்கரனின் ஆதங்கம்!

(டி.வி. விமர்சனம்தாங்க!)

**ஸ்டார் டி.வி.யில் அமெரிக்காவிலுள்ள வீருகளுக்கிடையே நடந்த கூடைப்பந்துப் பந்தயங் களை ரசித்துப் பார்த் தேன். என்ன வேகமான அசைவுகள்! என்ன அற் புதமான தொழில்நுட் பச் சிறப்பு! இதை நம் கூடைப்பந்து வீரர்கள் அல்லது கூடைப் பந்துப் பயிற்சியாளர்கள் பார்த் திருந்தால் நன்றாக இருக்குமே என்று தோன்றியது. கேமிராக்காரர்களும் விளை யாட்டு விஷயத்தை நன்கு அறிந்தவர்களாக இருந்தனர். எதைப் பார்க்க நினைக் கிறோமோ, அதைத் தவறாமல் காண்பித்தனர்.**



**● சன் டி.வி.யில் 'குடும்பம்', 'சக்தி' போன்ற தொடர்களுக்கிடையே எவ்வளவு விளம்பரங்கள்! இரவு பத்து மணிக்கு உட் கார்ந்து சீரியல்களைவிட விளம்பரங்களை அதிகம் பார்த்துக் கொண்டிருப்பது பெரும் கொடுமை.**

**● இந்த வார நியூஸில் உப்பு சப்பே இல்லை. அதுவும் தமிழ்நாடு தொடர்பான செய்திகள் – டி.டி., சன், ராஜ் போன்ற எல்லா சானல்களிலும் மிகக் குறைவு என்று பட்டது. ஒருவேளை தமிழகம் பரபரப்பான நியூஸே இல்லாமல் அமைதிப்பூங்காவாகி விட்டதா?! தவிர, என்னதான் டி.வி.யில் நியூஸ் கேட்டாலும் நாளிதழில் அவற்றைப் படிக்கும் சுகம் வருவதில்லை எனக்கு.**

**● பட்ஜெட் கண்ணோட்டங்களைக் கண்டேன். மொத்த நிதியில் ஒரு சதவீதம்கூட விளையாட்டுத் துறைக்கு ஒதுக்கவில்லை என் பதை அறியும்போது வேதனையாக இருக் கிறது! கிரிக்கெட் பேட் மற்றும் டென்னிஸ் ராக்கெட்டைப் பணம் கொடுத்து வாங்க முடியாத நிலையில்தான் இந்தியாவில் திறமை மிக்க பல இளைஞர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்கு உதவும் வகையில் பட்ஜெட் ஏதாவது வழி செய்திருக்க வேண்டாமா?**



# அட, இது சூப்பர் சமாசாரம்!

அண்மையில், ஒரு சினிமா டைரக்டர் வீட்டுக்கு டெலிபோன் செய்து, வீட்டிலிருந்த பெண்மணியிடம் ஆபாசமாகப் பேசிய ஒரு மர்ம ஆசாமியைப் போலீஸ் பிடித்தது. அந்த நபர், வெகு சுலபமாகப் பிடிபட உதவியாக இருந்தது ஒரு சின்னஞ்சிறு உபகரணம். இதற்கு 'கிளிஃப்' என்று பெயர்.

'Calling line identification facility' என்பதன் சுருக்கமே 'கிளிஃப்'. இந்தக் கருவியை டெலிபோனுடன் இணைத்து விட்டால் போதும். எங்கேயிருந்து போன் வந்தாலும், அந்த 'எண் என்ன' என்பதை இக்கருவி காட்டிவிடும். மேற்கூறிய டைரக்டர் விஷயத்தில், மர்ம ஆசாமி டெலிபோன் பண்ணியபோது, அவன் எந்த டெலிபோனிலிருந்து பேசினான் என்று இக்கருவி காட்டிவிட, போலீஸ் அந்த எண்ணுக்குரிய விலாசத்தில் போய், ஆபாசமாய்ப் பேசிய மர்ம ஆசாமியை 'லபக்'கி விட்டது.

"நம் வீட்டு டெலிபோன்களில் இக்கருவியை இணைத்துக் கொள்ள, டெலிபோன் இலாகா சமீபத்தில்தான் அனுமதி வழங்கியுள்ளது. ஆனாலும் இந்த பிரத்யேக வசதி பற்றி மக்களில் பல பேருக்குத் தெரியவில்லை" என்கிறார் 'கிளிஃப்' கருவிகளை விற்பனை செய்து வரும் சூர்யா டெலிகாம் நிறுவனத்தைச் சேர்ந்த ஜெயகுமார்.

"இந்தக் கருவி என்ன விலையாகிறது?"

"நாலைந்து மாடல்கள் இருக்கின்றன. விலை ஆயிரத்து இருநூறு ரூபாயிலிருந்து, இரண்டாயிரம் வரை ஆகிறது. இதன் சிறப்பம்சம் என்னவெனில், டெலிபோன் வரும்போது அந்த நெம்பரைக் காட்டுவது தவிர, நூற்று அறுபது டெலிபோன் கால்கள் வரை மெமரியில் வைத்துக் கொள்ளும்! நாம் வீட்டில் இல்லாதபோது, யாராவது போன் செய்தால், அந்த நம்பரும் இதில் பதிவாகி விடும். ஒரே நபர் இரண்டு மூன்று தடவை நாம் இல்லாதபோது நம்முடன் தொடர்பு கொள்ள முயன்றிருக்கிறார் என்றால், இன்ன எண்ணிலிருந்து இத்தனை தடவை போன் வந்தது என்று கூட இது சொல்லி விடும்.

"ஆட்களைக் கடத்திக் கொண்டு போய், பணம் பறிக்கும் ஆசாமிகள் இனி டெலிபோனில் பணம் கேட்டு மிரட்டினால் பாவம்! மாட்டிக் கொள்ள வேண்டியதுதான்!"

இக்கருவியைப் பயன்படுத்த விரும்பினால், டெலிபோன் இலாகாவிடம் எழுத்து மூலம் விண்ணப்பித்து, அனுமதி பெற வேண்டும். அப்போது கட்ட வேண்டியது ஐம்பது ரூபாய். அதன் பின் மாதாந்திரக் கட்டணமாக ஐம்பது ரூபாய். ○

— பாரதி

## நீதிபதி ஏ.எஸ்.பி. அய்யர் நூற்றாண்டு :

**பாலக்காட்டில் மிக எளிய குடும்பத்தில் பிறந்து, சிறு வயதிலேயே தந்தையை இழந்தவர் ஏ.எஸ்.பி. அய்யர். ஆனால் அசாத்திய புத்திசாலித்தனம், துணிச்சல் உள்ளவர். படிக்கும்போது பல பரிசுகளை வென்று, டாடா ஸ்காலர்ஷிப் பெற்று, லண்டன் போய் ஐ.ஸி.எஸ். பட்டம் வாங்கியவர். சட்டத்தில் லாங்டன் தங்கப் பதக்கம் வென்றவர். அத்தனை இளம் வயதில், ராயல் சொசைடி ஆஃப் இங்கிலீஷ் லிட்ரேச்சர் அமைப்பின் ஃபெலோஷிப் பெற்றவர். நீதிபதி வி.ஆர். கிருஷ்ணய்யர், அவரை நினைவுகூர்ந்து எழுதிய கட்டுரை இது : (நன்றி : த ஹிந்து, ஜனவரி 23, 1999) :**

ஆகஸ்ட் 1922-ல் ஒரு நாள், இந்திய ஹை கமிஷனர் சர் வில்லியம் மெயர், ஆக்ஸ்ஃபோர்டுக்கு வந்தார். இந்திய சுதந்தரப் போராட்டத்துக்கு ஆதரவு தெரிவிக்கும் மாணவர்கள் அங்கே நிறையப் பேர் படித்துக் கொண்டிருக் கிறார்கள் என்று அவருக்குத் தெரியும். அவர்களிடையே உரை நிகழ்த்த அவர் விரும்பினார். 'இளம் நண்பர்களே!' என்று ஆரம்பித்தார் மெயர். 'இங்கிலாந்துக்கு ஆறு பெண் குழந்தைகள் - ஆஸ்திரேலியா, நியுசிலாந்து, கனடா, தென்னாப்பிரிக்கா, அயர்லாந்து, இந்தியா. இதில் ஐந்து மகள்களுக்கு இங்கிலாந்து அம்மா சுயாட்சி உரிமை கொடுத்து விட்டாள். இந்தியாவுக்கும் கூடிய சீக்கிரம் சுயாட்சியோ, சுதந்தரமோ கொடுக்கப் பட்டுவிடும்!' என்றார். அய்யரின் பக்கத் தில் உட்கார்ந்திருந்த இன்னொரு மலை யாளி மாணவர், "அய்யர், அவனுக்குச் சரியான பதிலடி நீதான் கொடுக்கணும்!" என்றார். உடனே அய்யர் எழுந்து, "நண்பர் களே, அம்மாவை விட 4000 வருடம் மூத்த பெண் இருப்பது பற்றி இப்போதுதான் நான் கேள்விப்படுகிறேன்!" என்று சொன் னதும் கூட்டத்தில் ஒரே சிரிப்பு.

கூடவே வந்திருந்த சர் ஹென்றி ஸ்டோனிடம், 'யார் இந்த இளைஞன்?' என்று கேட்டிருக்கிறார் வில்லியம் மெயர். ஸ்டோன் விசாரித்து விட்டு, 'மலபாரி லிருந்து ஐ.ஸி.எஸ். படிக்க வந்திருப்பவன்' என்றார். 'சரிதான்! இந்தக் கணக்கில் இன் னும் 25 வருடங்கள் கூட நம் ஐ.ஸி.எஸ். படிப்பு தாக்குப்பிடிக்காது!' என்றாராம். ஐ.ஸி.எஸ். படிக்க இங்கிலாந்துக்குப் போகத் தேவையே இல்லாமல், அவர் சொன்ன படியே, சரியாக 25 வருடங்களில் இந்தியா வுக்குச் சுதந்தரம் கிடைத்து விட்டது!

அய்யருடைய பியூன் அன்னப்பா ஓய்வு பெற்றார். அவருக்கு அய்யர் தம் பங்களாவில் ஒரு பிரிவு உபசார விருந்து கொடுத்து கௌரவித்தார். ஆனால் நெகிழ்ந்து போயிருந்த பியூன் அன்னப்பா, அத்தனை விருந்தாளிகள் முன்னிலையில், தம் எஜமான் முன்பு உட்காரவே மறுத்து விட்டார். அய்யர் விடவில்லை. 'அன் னப்பா, காலம் மாறிக் கொண்டு வருகிறது. இனியும் மாறும். நீங்கள் 35 வருடங்கள் இங்கே உழைத்திருக்கிறீர்கள். நானோ நாலு வருடம்தான். என்னை விட மூத்தவர் நீங்கள். எங்களுடன் உட்கார்ந்து விருந்தைச் சாப்பிடுங்கள்!' என் றார்.

# காந்திஜியைத்

இந்தச் சம்பவம் பரபரப் பாகப் பேசப்பட்டது. ஒரு வக்கில் சொன்னார் : 'இந்த இளம் கலெக்டர் கூடிய சீக்கிரம் எசமான் - வேலையாள், நிலப்பிரபு - குத்தகைக்காரன், வக்கில் - கட்சிக்காரர், இங்கிலீஷ்காரன் - இந்தியன் என்ற எல்லா வேறுபாடுகளையும் தகர்த்து விடுவார் போலிருக்கிறது!' ஏ.எஸ்.பி. அய்யர், தமது ஆங்கிலேய எஜமான்களிடம்



ஏ.எஸ்.பி. அய்யர்

குழைந்து கும்பிடும் போட மாட்டார். ஆனால் ஒரு கடைநிலை ஊழியரிடம் கூடப் பரிவுடன் நடந்து கொள்ளுவார்.

எங்கெல்லாம் அய்யர் பதவி வகித்தாரோ, அங்கெல்லாம் ஒரு கலாசார அமைப்பை ஏற்படுத்தினார். வேதங்கள், குரான், பைபிள் ஆகியவற்றிலிருந்து இறைவணக்கத்துடன்தான் அந்தக் கூட்டங்களைத் துவங்குவார். கேரளத்தில் ஈழவ சமுதாய முன்னேற்றத்துக்கு அமைதியாகப் பாடுபட்ட நாராயண குரு மீது அபார பக்தியும், மரியாதையும் வைத்திருந்தார் அய்யர்.



# தட்டிக்கேட்டவர்!

**ம**காத்மா காந்தி என்றாலே பிரிட்டிஷ் அதிகாரிகளுக்கு வெறுப்பு. ஓர் இளம் இந்திய ஐ.ஸி.எஸ். அதிகாரி அவரைப் போய்ப் பார்த்து விட்டு வருவதற்குத் துணிச்சல் வேண்டும். அய்யருக்கு அந்தத் துணிச்சலைத் தந்தது அவரது தேசபக்திதான். பூனாவுக்குப் போய், நேச்சரோபதி இன்ஸ்டிட்யூட்டில் தங்கியிருந்த மகாத்மாவைப் பார்க்கப் போனார்கள் அய்யரும் அவர் மனைவியும்.

தென்னாப்பிரிக்காவில் இருந்தபோதே, மகாத்மாவுக்குத் தமிழர்கள் மீது நிறைய அன்பு உண்டு. இந்தியிலும் தமிழிலும் அவர் மனைவியும் அவரும் ஆட்டோகிராஃப் வாங்கிக் கொண்டார்கள். இந்தி கையெழுத்துக்கு ஐந்து ரூபாய். தமிழ்க் கையெழுத்துக்குப் பத்து ரூபாய் தரவேண்டும் என்றார் காந்திஜி. 'மகாத்மாஜி, இந்திக் கையெழுத்துக்கு 5 ரூபாய்தான் வாங்குகிறீர்கள். தமிழுக்கு மட்டும் ஏன் தண்டனை? இத்தனைக்கும், இந்தியை விட மூத்த மொழி அல்லவா தமிழ்?' என்றார் அய்யர். 'அச்சா!' என்றார் காந்திஜி. ஆங்கிலத்தில் கையெழுத்துப் போட்டுத் தரும்படி கேட்டார் அய்யர். 'நீ இந்தியன். இந்திய மொழி கையெழுத்துப் போதும் உனக்கு' என்றார் காந்திஜி. அய்யர் விடவில்லை. 'அமெரிக்கர்களுக்கு மட்டும் ஆங்கிலத்தில் கையெழுத்துப் போட்டுக் கொடுக்கிறீர்கள். தமிழ், இந்தி போலவே ஆங்கிலமும் எனக்குப் பிடித்த மொழி. எல்லா மொழிகளும் ஆண்டவனிடமிருந்து அல்லவா வந்ததாக நம் முன்னோர்கள் சொல்லியிருக்கிறார்கள்! ஆண் – பெண், மேல்சாதி – கீழ்சாதி என்று வித்தியாசம் பார்க்காத மகாத்மா, மொழிக்கு மொழி வித்தியாசம் பார்க்கலாமா?' என்று கேட்டார் அய்யர். முதலில் குஜராத்தியில் கையெழுத்துப் போட்டு, அதன் மேலே ஆங்கிலத்திலும் கையெழுத்துப் போட்டார் காந்திஜி! அதற்குத் தனியே பத்து ரூபாய் கொடுத்தார் அய்யர்!

தமிழில் : **எஸ்.வி.என்.**

# படகில் ஒரு

**3**

தனபாக்கியம் 'ஆயா' என்று அதிர்ந்து போய்ப் போட்ட கூச்சல் ஆயாவை ஆவேசப்படுத்தி விட்டது.

''என்னாடி? இப்ப நான் என்னா சொல்லிட்டேன்னு இந்தக் கூவு கூவுறே? வவுறு என்னா ஒன்னைக் கேட்டுக்கினு பசிக்குதா? ஒடம்பும் அப்படித்தான். நாலு சம்சாரிங்க இருக்கற தாவு இது. இதுல அந்த அறியாப் பையன் வேற வந்துனு, போய்னு இருக்கான். ராவுல இங்கயே படுக்கறவன். ஒனக்கும் அவனுக்கும் நடுவுல எதுவும் இல்லடியம்மா. நீ சொல்றே. நான் நம்பறேன். அல்லாரும் நம்பிடுவாங்களா? திருடித் தின்னா தப்பு. நாலு பேருக்கு நடுவுல தெகிரியமா தின்னு பாரு. 'பாவம் பசி. அதுவுந்தான் இன்னா பண்ணும்'னு சொல்லுவாங்க. இன்னா நான் சொல்றது? நல்லா யோசனை பண்ணு.''

ஆயா மேலும் மேலும் எதையாவது பேசிக்கொண்டேயிருந்திருப்பாள். செந்தில் வந்துவிட்டான். கூடவே முத்துக்குமாரும்.

''யெம்மோவ் பசிக்குது. எனக்கும் அப்பாவுக்கும் சோறு போடு'' என்று அலறினான் செந்தில், உள்ளே நுழைந்ததும் நுழையாததுமாய்.

தப்பிச் செல்லும் பாம்பு போல, ஆயா குடிசைச் சுவரோரமாக நடந்து வெளியேறினாள்.

இரவு முழுவதும் சரியான தூக்கமில்லாததால் மறுநாள் சீக்கிரமே மீன் ஏலத்திற்குப் போய்விட்டாள் அவள். அன்றைக்கு மீனவர்களுக்குக் கொழுத்த வேட்டை. பெரிய பெரிய வஞ்சிர மீன்கள் சிக்கியிருந்தன. ஏலம் எடுக்கும் இடத்திலும் கூச்சல், குழப்பம் இல்லை. தனபாக்கியம், பிச்சைமுத்து அண்ணனிடம் மீன் வாங்கினாள். தூக்க முடியாத அளவுக்குக் கூடை பாரமாயிருந்தது.

''தங்கச்சி. வலைல கடல் குதிரை ஒண்ணு வுழுந்துதும்மா. இந்தா வெச்சிக்க. என் அதிஸ்டத்தை ஒனக்குக் குடுக்கறேன்'' என்று பிச்சைமுத்து அண்ணன் விரல் நீளம் இருந்த தலைப்பகுதியும், வால் பகுதியும் வளைந்த ஒரு கடல் குதிரையை அவளிடம் தந்தான்.

தனபாக்கியம் சற்று சந்தோஷமாக ஹோட்டலை நோக்கி நடந்தாள்.

நேற்று இரவிலிருந்தே அவள் நெஞ்சில் சின்னதாய் ஒரு சந்தோஷம் குறுகுறுத்துக் கொண்டிருந்தது. ஆப்பக்கார ஆயா அப்படி ஒரு எண்ணத்தை விதைத்து விட்டுப் போன பிறகு அவளால் முத்துக்குமாரின் முகத்தை நேருக்கு நேர் நிமிர்ந்து பார்க்க முடியவில்லை. பார்க்க நேர்ந்தால் அவளை அறியாமல் ஒரு வெட்கம் சூழ்ந்தது. கூடவே ஒரு பயமும் சேர்ந்துகொண்டது.

மனைவியை இழந்த ஆண்கள் யாரும் இன்னொரு பெண்ணின் கையைப் பற்றுவதேயில்லையா? அப்படிக் கைப்பற்றுகிறவனை எல்லாம் இந்தச் சமுதாயம் ஒதுக்கி வைத்து விடுகிறதா? அதே நியாயம் தானே பெண்ணுக்கும் இருக்க முடியும்?

வேலுச்சாமியுடன் அவள் வாழ்ந்த வாழ்க்கை அப்படி என்ன ஓர் உன்னதமான வாழ்க்கையா, அதையே சாகும்வரை நினைத்துக்கொண்டிருப்பதற்கு.

முத்துக்குமார் ஒரு நாளும் எல்லை மீறிய பேச்சையோ, எல்லை மீறிய சைகையையோ வெளிப்படுத்தியதில்லை. அவன் சின்ன வயதில் இருந்து அன்புக்கு ஏங்கியவன். செந்திலிடம் அந்த அன்பை அனுபவிக்கிறான். சுற்றி இருக்கும் மக்களிடம் அந்த அன்பைப் பெறுகிறான். அதற்கு நன்றிக்கடனாக ஒரு நாயைப் போல இந்தக் குப்பத்தையே சுற்றிச் சுற்றி வருகிறான்.

ஆப்பக்கார ஆயா சொன்னதுபோல் அவனைக் கட்டிக்கொண்டால் என்ன



சுபா

தப்பு?

உடலுக்கு வேண்டி இருக்கிறதோ இல்லையோ, மனத்திற்கு வேண்டி இருக்கிறது. அவனுடைய அன்பு முழுக்க அவளுக்கே அவளுக்கு சொந்தமாகிப் போகும் என்ற நினைப்பே அவளிடம் சிலிர்ப்பை ஏற்படுத்தியது.

**த**ன்னை மீறிய சிந்தனை காரணமாக, வழக்கமாக மீன் விற்கும் ஹோட்டலை நெருங்கி விட்டதைக்கூடக் கவனிக்காமல் அதைக் கடந்து சென்றாள்.

"ஏய் தனம்" என்று மிரட்டிய குரல் அவள் சிந்தனையை அறுத்தது.

"என்னா, நீ பாட்டுக்குப் போய்க்கிட்டே இருக்கியே. மனசுல யாரைப் பத்தின நெனைப்பு?" என்று ஹோட்டல்கார பாண்டியன் நக்கலாகக் கேட்டான்.

முத்துக்குமாரைப் பற்றிய நெனைப்பு என்ற பதில் உள்ளூர ஓடியதால் அவள் முகத்தில் வெட்கம் படர்ந்தது. அந்த நினைப்பை அவன் கண்டு பிடித்துவிட்டான் என்பதற்காகப் பாண்டியன் மேல் கோபம் வந்தது. கோபத்தைக் காட்டாமல் மவுனமாய் நின்றாள்.

"சரி, சரி, ஐஸ் ரூமுக்கு வா" என்று சொல்லிவிட்டு அவளை முந்திக்கொண்டு முன்னால் போய் ஓர் அவசர வேலையைக் கவனித்துவிடும் பாவனையுடன் அவளை உரசி நடந்தான் பாண்டியன்.

"எதுக்கு இப்படி இடிச்சித் தள்ளிக் கிட்டுப் போறே?" என்று சட்டென்று கோபம் துளிர்த்தக் குரலில் கேட்டாள்.

"கூடையை யார் எறக்கறது? பாரம் தாங்காம கூடையைச் சரியவிட்டா ரூமே நாறிப் போவும். என் வேலை போய்டும். அப்புறம் நீயா எனக்குச் சோறு போடுவே?"

**பொ**துவாக அந்த அறையில் ஒன்றிரண்டு வேலைக்காரர்கள் இருப்பார்கள். இன்றைக்கு யாருமே இல்லை. அவள் உள்ளே நுழைந்ததும் கதவு தானாக மூடிக்கொண்டது.

தனபாக்கியம் பாட்டிலில் சிக்கிய ஈ போல் உணர்ந்தாள்.

"சீக்கிரம் மீனை எடுத்து வச்சிக்கினு துட்டைக் குடு. நான் போவணும்" என்று பரபரப்பாய் சொன்னாள்.

"என்னா அவசரம் தனம்? மொதல்ல கூடையை எறக்கறேன் இரு" என்று சொல்லிவிட்டு அவள் சற்றும் எதிர்பாராத வகையில் இரு கைகளையும் கூடையில் வைத்து, இறக்குவது போன்ற பாவனையுடன், அவளை சுவர் மேல் தள்ளி ஓர் அழுத்து அழுத்தினான் பாண்டியன்.

தனபாக்கியம் திமிறிப் பார்த்தாள். அவன் அழுத்தம் அதிகரித்தது.

"அண்ணே... வேணாண்ணே...

ஒன்னைக் கையெடுத்துக் கும்பிட றேண்ணே."

"ஒடனே அண்ணாத்தையாய்ட்டேனா! நான் ஒன்னைத் தங்கச்சியா நெனைக் கலியே."

தனபாக்கியத்திற்கு என்ன செய்வ தென்றே புரியவில்லை. பாண்டியனுடைய அண்மை அவளை நெருப்பாகத் தகித்தது.

அவளது கூடையில் இருந்த வஞ்சிர மீன்களின் குண்டுக் கண்கள் அவளைப் பார்த்து விழித்தன. ஒவ்வொரு மீனும் இரண்டு கிலோ, மூன்று கிலோ எடை இருக் கும். அவற்றில் ஒரு மீனை எடுத்துப் பாண்டினைத் தாக்கினால்?

அவள் கை மீன்களில் ஒன்றைப் பற்றிய நேரம் அறைக்கதவு திறக்கும் சத்தம் கேட்டது.

பாண்டியன் விலகினான்.

**உ**ள்ளே முத்துக்குமார் நுழைந்தான். கூடவே ஒரு வெள்ளைக்காரன். அவர் களுடன் சேர்ந்து ஹோட்டல் முதலாளி யும்.

தனபாக்கியத்திற்கு அளவிலாத ஆச்சரியமாய் இருந்தது. இப்படி ஒரு தற் செயல்கூட தன் வாழ்க்கையில் நிகழ முடியுமா?

முத்துக்குமாரும் அவளைப் பார்த்து விட்டு ஆச்சரியத்தில் கண்களை அகலமாக விரித்தான்.

"இந்த வெள்ளைக்காரன் அவங்க ஊர்ல ஓட்டலு வெச்சி நடத்தறானாம். அதனால சமைக்கிற எடம், கோழி - மீனு வக்கிற எடமெல்லாம் பாக்கணும்னு சொன்னான். அதான் மொதலாளியோட கூட்டிக்கிட்டு வந்தேன். நீ என்ன, மீனு கொடுக்க வந் தியா?'' என்று முத்துக்குமார் வெகு இயல்பாகப் பேசினான். தனபாக்கியம் வாயடைத்துப் போய் நின்றிருந்தாள்.

''பாண்டியா, மீனை வாங்கிப்போட்டு அந்தம்மாகிட்ட சீக்கிரம் பணத்தைக் குடுத்து அனுப்பு'' என்று ஹோட்டல் முதலாளி பாண்டியனை விரட்டினார்.

தனபாக்கியம் முத்துக்குமாரைப் பார்த்து ஒரு தலையசைப்பின்மூலம் விடை பெற்றுக் கொண்டாள்.

எவ்வளவு பெரிய சுழலில் இருந்து முத்துக்குமார் அவளைக் காப்பாற்றி இருக்கிறான்! மிகச்சரியாகக் கொட்டுவாயில் வந்து சேர்ந்தான். அன்றைக்கு அவளிடம் வந்து சேர்ந்த கடல் குதிரைதான் காரணமா?

**மா**லை முத்துக்குமார் வேலையை முடித்துவிட்டுத் திரும்பி வந்தபோது தனபாக்கியத்தால் அவனை நிமிர்ந்துகூடப் பார்க்க முடியவில்லை. குற்ற உணர்வாய் இருந்தது.

பாண்டியனிடம் அவள் சிக்கித் தவித்த போது, அறையில் முதலில் நுழைந்தவன் அவன்தான். அவளையும், பாண்டியனையும் எந்தக் கோலத்தில் பார்த்தான் என்று புரியவில்லை. ஒருவேளை அவளை அவன் தப்பாக நினைத்துவிட்டால்?

அவனிடம் நடந்ததைச் சொல்லி விட வேண்டும் போல் இருந்தது. எதற்கு அவனிடம் தன்னைப் பற்றிச் சொல்லத் துடிக்கிறோம் என்றுதான் அவளுக்குப் புரியவில்லை.

அன்றிரவு செந்தில் சீக்கிரமே தூங்கி விட்டான்.

முத்துக்குமார் தலை குனிந்து சாப் பாட்டுத் தட்டின் முன்னால் உட்கார்ந் திருந்தான். காலையில் அவளைப் பார்த் ததைப் பற்றி ஒரு வார்த்தை கூடப்

**''சார் உங்க கடையில் எடுத்த வேஷ்டி முதல் முறை தண்ணியில போடும்போது துண்டு ஆயிடுச்சு. இரண்டாம் முறை தண்ணியில போடும்போது கர்சீப் ஆயிடுச்சு!''**

**''சந்தோஷப்படுங்க. நான் வேஷ் டிக்கு மட்டும்தானே பணம் வாங் கினேன்!''**

**— அவினாசி கு. குமார்**





''அந்த ஊர் மக்கள் இலவச வேட்டி சேலை வேண்டாம்னு போராட்டம் பண்றாங்களாமே... அவ்வளவு வசதியாயிருக்காங்களா...?''

''நீங்க வேற! அதுக்கு பதிலா ஜீன்ஸ் பேண்ட்டும், சுடிதாரும் கேக்கறாங்க!''

— தே. இளங்குமரன்

பேசவில்லை. அவனுக்கென்று ஒரு விருப்பு, வெறுப்பு இருப்பதையே தனபாக்கியத்தால் உணரமுடியவில்லை.

கடு சோற்றை அவன் தட்டில் சரித்தாள். எவ்வளவோ தடுக்கப் பார்த்தும் இயலாமல் கண்ணில் பொங்கிய நீர் திரண்டு அவனுடைய மணிக்கட்டில் ஒரு பொட்டாக விழுந்தது. உடனே அவனை நிமிர்ந்துப் பார்க்கச் செய்தது. சாப்பிட்டு விட்டு எழுந்து வாசலுக்கு வந்தான்.

''அதுக்குத்தான் நான் மீனு விக்கப் போகாதேன்னு சொன்னேன்'' என்றான் அவன் மெல்லிய குரலில்.

''அந்தப் பாடையில போறவன்தான் எம் மேல நாய் உழறா மாதிரி வுழுந்தது.''

''எனக்குத் தெரியும் தனம்...''

''அந்தப் பெரியபாளையாத்தா மேல சத்தியமா சொல்றேன்யா... எம் பையன் மேல சத்தியமா சொல்றேன். எம் மேல எந்தத் தப்பும் இல்ல.''

''அதான் தெரியும்னு சொன்னேனே தனம். நாளைலேர்ந்து நீ மீனு விக்கப் போவாதே. என் வூட்டுல சாப்புடறதுக்கு ஒம் மனசு கேக்காது. இந்த சங்கு, சிப்பி எல்லாம் கோத்து மாலை செய்ஞ்சி விக்கற கடை ஒண்ணு காலியாவுது. நீ அந்தக் கடைல உக்காந்து வியாபாரத்தைக் கவனிக்கறியா சொல்லு. ஏற்பாடு பண்றேன்.''

''ஆயா...'' என்று அழைத்தாள் தனபாக்கியம்.

சாலையில் போய்க்கொண்டிருந்த ஆப்பக்கார ஆயா திரும்பி, கடையில் உட்கார்ந்திருந்த தனபாக்கியத்தைப் பார்த்து அதிசயித்தாள்.

''இன்னாடி பொண்ணே. ஒரு ராவுக்குள்ள மொதலாளியாய்ட்டியா? நீ இன்னா பண்றே இங்கே?''

''அவருதான் ஆயா இங்க இட்டாந்து ஒக்கார வைச்சாரு. தெரிஞ்சவங்க கடையாம். காலி பண்ணினு போவச் சொல்லொ இவராண்ட வுட்டுட்டுப் போனாங்களாம்.''

''அவருன்றே, இவருன்றே, யாருடி அந்த சொவரு?''

''அதான் ஆயா. நம்ப ஊட்ல இல்ல?''

''முத்துக்கொமாருப் பையனா?''

''ஆமா ஆயா... ஒக்காரு. டீ குடிக்கிறியா? வடைகூட சூடா இருக்கும். டேய் பையா, ஆயாவுக்கு ஒரு வடையும், டீயும் குடுரா.''

ஆப்பக்கார ஆயா கண்ணெதிரில் சங்கு மாலை. ஐம்பது ரூபாய் வியாபாரம்.

''பெரி மன்ஷியாயிட்டேன்னு சொல்லு.''

''அதெல்லாம் இல்ல ஆயா. நான் எப்பவும் அதே தனபாக்கியந்தான். அன்னிக்கு நீ ஒண்ணு சொன்னியே. ஞாபகம் இருக்குதா ஆயா?'' என்று சற்றே வெட்கம் பூசின குரலில் கேட்டாள் தனபாக்கியம்.

''என்னாத்தைச் சொன்னேன்?''

''போ ஆயா'' என்றாள் தனபாக்கியம் வெட்கத்துடன். ''ஆயா... நீயே அந்தாளைக் கேட்டுச் சொல்றியா?'' என்று மெல்லியக் குரலில் வினவினாள்.

''என்னான்னு?''

''ஒன் தலைன்னு. புரியாத மாதிரி பேசறதைப் பாரு. சரியான திருட்டுக் கொட்டு. அந்தாளை கட்டிக்க எனக்கு இஷ்டம்னே வச்சிக்கோ. அதுக்கு என்னைக் கட்டிக்க இஷ்டமா, இல்லியான்னு தெரிய வேணாமா? எனக்குக் கேக்கறதுக்கு வெக்கமா இருக்குது. நீ கேட்டுச் சொல்றியா ஆயா?''

''வஞ்சிரம் தானா வலைல வந்து வுழுந்தா யாருதான்டி வேணாம்னு சொல்லப் போறாங்க?''

''ஐய... கேட்டுச் சொல்லு ஆயான்னா...''

(தொடரும்)

# பொன்னியின் செல்வன்

ஐம்பத்து மூன்றாம் அத்தியாயம்

## அபய கீதம்



இளவரசர் அருள்மொழி வர்மர் பார்த்திபேந்திரனுடைய கப்பலுக்குப் போய்ச் சேரும் வரையில், தொண்டைமான் நதியின் முகத்துவாரத்தில் நின்றவர்கள் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

கப்பலில் இளவரசர் ஏறிக்கொண்ட உடனே அவரை ஏற்றிச் சென்ற படகு திரும்பியது.

சேநாதிபதி பூதி விக்கிரம கேசரி குதூகலம் அடைந்திருந்தார் என்று அவருடைய முகக் குறி காட்டியது.

''ஆண்டவன் நம் கட்சியில் இருக்கிறார்; சந்தேகமில்லை. இளவரசரின் திருமேனியில் உள்ள சங்கு சக்கர சின்னங்கள் பழுதாகப் போய் விடுமா? பார்த்திபேந்திரன் அவரைப் பத்திரமாகக் காஞ்சி கொண்டு போய்ச் சேர்த்து விடுவான். நாமும் நம் படைகளுடன் தஞ்சையை நோக்கிப் புறப்பட வேண்டியதுதான்!'' என்று தமக்குத் தாமே சொல்லுகிறவர் போல் கொடும்பாளூர் வேளார் உரத்துச் சொல்லிக்கொண்டார்.

உடனே பக்கத்தில் நின்ற ஆழ்வார்க்கடியானைப் பார்த்தார்.




கல்கி கலெக்ஷன்

அமரர் கல்கி

"வைஷ்ணவனே! நீ இங்கு நிற்கிறாயா? அதனால் பாதகம் இல்லை. முதன்மந்திரியின் அந்தரங்க ஒற்றனுக்குத் தெரியாதது என்ன இருக்கிறது? சரி நீ என்ன செய்யப் போகிறாய்? மாதோட்டத்துக்கு என்னுடன் வரப் போகிறாயா?" என்று கேட்டார்.

"இல்லை, ஐயா! முதன்மந்திரி எனக்கு இட்ட இன்னும் ஒரு வேலை நான் செய்ய வேண்டியிருக்கிறது..."

"அது என்ன, அப்பா?"

ஆழ்வார்க்கடியான் சற்றுத் தூரத்தில் ஊமை ராணியும் பூங்குழலியும் நின்ற இடத்தை நோக்கினான்.

"அந்தப் பெண்களைப் பற்றிய விஷயமா?" என்றார் சேநாதிபதி.

"அவர்களில் ஒருவரைப் பற்றியதுதான். இலங்கையில் இத்தகைய ஊமை ஸ்திரீ ஒருத்தியைப் பார்க்க நேர்ந்தால் அவளை எப்படியாவது தஞ்சாவூருக்கு அழைத்து வரும்படி முதன்மந்திரி கட்டளையிட்டிருக்கிறார்."

"நல்ல வேலை உனக்குக் கொடுத்தார். அதைக்காட்டிலும் இலங்கைக் கடல்களில் அடிக்கும் புயற்காற்றுகளில் ஒன்றைப் பிடித்துக்கொண்டு வரும்படி உனக்குச் சொல்லியிருக்கலாம். அந்த ஊமை ஸ்திரீயைப் பிடித்துக்கொண்டு போவது அவ்வளவு சுலபமாயிருக்கும். அவள் யாரோ தெரியவில்லை. நம் இளவரசரிடம் மிக்க அபிமானம் வைத்திருக்கிறாள். உனக்கு ஏதாவது அவளைப் பற்றித் தெரியுமா?"

"அவள் ஊமை என்பதும் பிறவிச் செவிடு என்பதும் தெரியும். அவளை அழைத்துச் செல்வதைக் காட்டிலும் புயற்காற்றைக் கூண்டில் அடைத்துக் கொண்டு போவது சுலபம் என்றும் தெரியும். ஆயினும் என் எஜமானர் சொல்லியிருக்கிறபடியால் ஒரு பிரயத்தனம் செய்து பார்ப்பேன்."

"இந்த ஓடக்காரப் பெண்ணுக்கும் அவளுக்கும்கூட சிநேகம் போலிருக்கிறது. இரண்டு பேரும் ஜாடைகளினால் பேசிக் கொள்வதைப் பார்! அந்தப் பெண்ணை இங்கே கூப்பிடு! அவளுக்கு ஓர் எச்சரிக்கை செய்ய வேண்டும்...!"


ழ்வார்க்கடியான் அந்தப் பெண்களின் அருகில் சென்று பூங்குழலியிடம் சேநாதிபதி அழைப்பதைக் கூறினான். பூங்குழலி ஊமை ராணியை விட்டுப் பிரிந்து சேநாதிபதியை அணுகினாள்.

"இதோ பார், பெண்ணே! நீ வெகு புத்திசாலி! நல்லசமயத்தில் வந்து முக்கியமான செய்தி சொன்னாய். சோழ குலத்துக்குப் பெரிய உதவி செய்தாய். இதை நான் என்றும் மறக்க மாட்டேன். தக்க சமயத்தில் தகுந்த பரிசில் கொடுப்பேன்!" என்றார்.

பூங்குழலி "வந்தனம், ஐயா! எனக்குப் பரிசில் எதுவும் தேவையில்லை" என்று பணிவுடன் சொன்னாள்.

"தேவையில்லை என்றால் யார் விடுகிறார்கள்? இந்தக் குழப்பமெல்லாம் கொஞ்சம் அடங்கட்டும். பிறகு, பிறகு... சோழ நாட்டுச் சைன்யத்தில் வீராதி வீரனாகப் பார்த்து உனக்குத் திருமணம் செய்து வைக்கிறேன். உனக்கு வாய்க்கின்ற கணவன் அற்ப சொற்பமானவனாய் இருந்தால் போதாது. பீமசேனனாக இருக்க வேண்டும். இல்லாவிட்டால் அவனைக் கண்ணிலே விரலைக் கொடுத்து ஆட்டி வைத்து விடமாட்டாயா?" என்று சேநாதிபதி கூறிப் புன்னகை புரிந்தார்.

பூங்குழலி தரையைப் பார்த்தபடி நின்றாள். அவள் உள்ளத்தில் கோபம் பொங்கியது. ஆனால் அதை அச்சமயம் காட்டிக் கொள்ள விரும்பவில்லை. இந்த முரட்டுக் கிழவரிடம் சண்டை பிடிப்பதில் பயன் என்ன? கோபத்தை அடக்கிக் கொள்ள முயன்றாள்.

"ஆனால் ஒரு விஷயத்தை மட்டும் ஞாபகம் வைத்துக்கொள்! இளவரசருக்கு ஏதோ உதவி செய்து விட்டபடியால், அவர் பேரில் பாத்தியதை கொண்டாடலாம் என்று எண்ணாதே!

கடலில் வலை போட்டு மீன் பிடிப்ப தோடு நிறுத்திக் கொள்! இளவரசரை வலை போட்டுப் பிடிக்கலாம் என்று ஆசைப்படாதே! ஜாக்கிரதை பெண்ணே! இனி அவர் அருகில் நெருங் கினாலும் உனக்கு ஆபத்து வரும்!'' என்றார் சேநாதிபதி. அவருடைய குரல் அப்போது மிகக் கடுமையாக இருந்தது. அவருடைய ஒவ்வொரு வார்த்தையும் காய்ச்சிய ஈயத்துளியை விடுவதுபோல் பூங்குழலியின் காதில் விழுந்தது.

அந்தக் கிழவனாருக்குப் பதிலுக்குப் பதில் காரசாரமான வார்த்தைகளைச் சொல்ல வேண்டும் என்று பூங்குழலி விரும்பினாள். ஆனால் பேச இயல வில்லை. தொண்டையை அடைத்தது. காதில் விழுந்த காய்ச்சிய ஈயத்துளிகள் கண் வழியாக வெளி வந்தன போல் வெப்பமான கண்ணீர்த் துளிகள் தோன்றிக் கண்களை எரியச் செய்தன.

குனிந்த தலை நிமிராமல் பூங் குழலி திரும்பினாள். கடற் கரைக்கு எதிர்ப்பக்கம் நோக்கி நடந்தாள். நடை மெதுவாக ஆரம்பமாயிற்று. வர வர வேகம் அதி கரித்தது. ஊமை ராணி இருந்த திசையை ஒருகணம் கடைக்கண்ணால் பார்த்தாள். அவள் அருகில் ஆழ்வார்க் கடியான் நின்று ஏதோ அவளிடம் தெரி விக்க முயன்று கொண்டிருப்பதைக் கண்டாள். மனிதர்கள் உள்ள இடத் திலேயே தான் இருக்கக் கூடாது என்ற எண்ணம் அவளுக்குத் தோன்றியது. மனிதக் குரலையே கேட்கப் பிடிக்க வில்லை. ஆ! மனிதர்கள் எத்தனை கொடூரமானவர்கள்? எதற்காக இவ் வளவு குரூரமான சொற்களைப் பேசு கிறார்கள்? எல்லாரும் ஊமைகளாகவே இருந்து விட்டால் எவ்வளவு நன்றா யிருக்கும்?

சிறிது தூரம் காட்டில் புகுந்து சென்ற பிறகு தொண்டைமானாற்றின் கரையை அடைந்தாள். அந்தக் கரை யோடு உள் நாட்டை நோக்கி நடந்தாள். அவளுடைய படகை விட்டிருந்த இடத்தைக் குறி வைத்து நடந்தாள். ஆம்; சீக்கிரம் அந்தப் படகைப் போய்ச் சேர வேண்டும். படகில் ஏறிக் கொள்ள வேண்டும். தன்னந்தனியாகக் கடலில் செல்ல வேண்டும். மனிதர்களுடைய குரல் காதில் விழ முடியாத நடுக்கட லுக்கே போய் விட வேண்டும். துடுப் பைச் சும்மா வைத்து விட வேண்டும். அலைகளில் மொத்துண்டு படகு மிதந்து மிதந்து போகவேண்டும். தானும் அதில் போய்க் கொண்டிருக்க வேண்டும். எல்லையில்லாத கடலில் முடிவில்லா மல் போய்க் கொண்டிருக்க வேண்டும். அப்போதுதான் அலைபட்ட தன் உள் ளம் அமைதி பெறும். சேநாதிபதியின் வார்த்தைகளினால் நொந்த உள்ளத்தின் வேதனை தீரும். ஆத்திரம் தணிந்து ஆறு தல் உண்டாகும். அந்தப் பொல்லாத கிழவன் என்ன சொன்னான்! "வலை போட்டுக் கடலில் மீன் பிடிப்பதோடு நிறுத்திக் கொள்! இளவரசருக்கு வலை போடாதே!'' என்றான். நானா இள வரசருக்கு வலை போடுகிறேன்! சீச்சி! அந்தக் கிழவனின் புத்தி போன போக் கைப் பார்...! ஆம்; தரையில் வாழும் மனிதர்களைக் காட்டிலும் கடலில் வாழும் மீன்கள் எவ்வளவோ நல்ல ஜந்துக்கள். அவை இப்படியெல்லாம் கொடூரமாகப் பேசுவதில்லை. ஆழ் கடலில் நீந்தியும் மிதந்தும் எவ்வளவு ஆனந்தமாகக் காலங்கழிக்கின்றன! அவற்றுக்குக் கவலை ஏது? துயரம் ஏது? ஆகா! நான் கடலில் வாழும் மீனாகப் பிறந்திருக்கக் கூடாதா? நானும் மீனாகப் பிறந்து இளவரசரும் மீனாகப் பிறந் திருக்கக் கூடாதா? அப்படிப் பிறந்திருந் தால், இந்த உலகத்தின் துயரங்கள், துவேஷங்கள், ஆசாபாசங்கள், கோப தாபங்கள், - இவற்றில் அகப்பட்டுக் கொள்ளாமல் சதா சர்வ காலமும் ஆழ் கடலில் நீந்தி நீந்திப் போய்க் கொண் டிருக்கலாம் அல்லவா? அப்போது தன்னையும் இளவரசரையும் பிரிப் பதற்கோ, வஞ்சகம் செய்வதற்கோ, விஷமமாகப் பேசுவதற்கோ யாரும் இருக்க மாட்டார்கள் அல்லவா...?

இல்லை, இல்லை! அதுவும் நிச்சயமில்லை. அங்கேயும் இந்தப் பொல்லாத மனிதர்கள் வந்து வலை போட்டுப் பிடித்துக்கொண்டு போகப் பார்ப்பார்கள்! இரண்டு மீன்களில் ஒன்றை மட்டும் கொண்டு போனாலும் போவார்கள்! பாதகர்கள்...!

பூங்குழலியின் மனத்தில் பொங்கிய ஆத்திரம், அவளுடைய கால்களுக்கு அளவில்லாத விரைவைக் கொடுத்தது. சூரியன் உச்சி வானுக்கு வந்த சமயம் அவள் படகை விட்டிருந்த இடத்தை அடைந்துவிட்டாள். நல்லவேளை; படகு, விட்டிருந்த இடத்தில் கட்டிப் போட்டபடியே இருந்தது. அவளுடைய ஆருயிர்த் தோழி அந்தப் படகுதான். அவளுடைய அடைக்கல ஸ்தானம் அந்தப் படகுதான். துன்பமும் துரோகமும் சூழ்ந்த இந்தப் பொல்லாத உலகத்தில் தனக்கு அமைதியும் ஆனந்தமும் அளிப்பது அந்தச் சாண் அகலத்துப் படகுதான். அதை யாரும் அடித்துக் கொண்டு போகாமல் விட்டு வைத்தது பெரிய காரியம். இனி எது எப்படியாவது போகட்டும். இளவரசரை அந்தக் கிழச் சேநாதிபதியே காவல் புரியட்டும். கொடும்பாளூர் வீட்டுப் பெண்ணையே அவர் கழுத்தில் கட்டி விடட்டும். அதனால் எனக்கு என்ன? என் படகு இருக்கிறது; துடுப்பு இருக்கிறது; கையில் வலிவு இருக்கிறது; விசாலமான கடலும் இருக்கிறது. சமுத்திர ராஜனே! உன் அருமைப் புதல்வியை வேறு யார் கைவிட்டாலும் நீ கைவிட மாட்டாய் அல்லவா? ''சமுத்திரகுமாரி'' என்று இளவரசர் திருவாயினால் கூறியதைப்



பொய்யாக்க மாட்டாய் அல்லவா?

பூங்குழலி படகில் ஏறிக்கொண்டாள். கடலை நோக்கிப் படகைச் செலுத்தினாள். நதியின் ஓட்டத்தோடு சென்றபடியால் சீக்கிரத்திலேயே தொண்டைமானாற்றின் முகத்துவாரத்தை அடைந்துவிட்டாள். பின்னர் கடலில் படகைச் செலுத்தினாள். சிறிது நேரத்துக்கெல்லாம் சுழிக்காற்று அடிக்கப் போகிறது என்று அவளுக்குத் தெரிந்து போயிற்று. சுழிக்காற்றின் முன் அறிகுறிகளை அவள் நன்கு அறிந்திருந்தாள். முதல்நாள் இரவு சந்திரனைச் சுற்றிச் சாம்பல் நிற வட்டம் காணப்பட்டது. இன்றைக்குப் பகலெல்லாம் ஒரே புழுக்கமாயிருந்தது. மரங்களில் இலை அசையவில்லை. அதோ தென்மேற்கு மூலையில் கரிய மேகத் திட்டுக்கள் கிளம்பி விட்டன. சீக்கிரத்தில் சுழிக் காற்று அடிக்கப்போவது நிச்சயம். கடலின் கொந்தளிப்பு அற்புதக் காட்சியாயிருக்கும். ஆனால் சுழிக்காற்று அடிக்கும்போது கடலில் அகப்பட்டுக் கொள்ளக்கூடாது. பூதத் தீவுக்குப் போய் தங்கியிருப்பது நல்லது. அங்கே தங்கியிருந்தால் சுழிக்காற்றினால் கடலிலே உண்டாகும் அல்லோல கல்லோலத்தை நன்றாய்ப் பார்த்துக் களிக்கலாம். காற்று அடித்து விட்டுப் போன பிறகு, கடலிலும் கொந்தளிப்புச் சிறிது அடங்கிய பிறகு, படகைக் கடலில் செலுத்திக்கொண்டு கோடிக் கரைக்குப் போகலாம். இப்போது என்ன அவசரம்? கோடிக்கரைக்கு இப்போது அந்த மரக்கலம் அநேகமாகப் போயிருக்கும். நல்லவேளை! சுழிக் காற்றில் அது அகப்பட்டுக் கொண்டிராது. இளவரசர் இத்தனை நேரம்



பத்திரமாகப் போய் அங்கே இறங்கியிருப்பார். அல்லது ஒருவேளை மாமல்லபுரத்துக்கே போயிருந்தாலும் போயிருப்பார். எங்கே போயிருந்தால் நமக்கு என்ன? சுழிக்காற்றில் அகப்பட்டுக் கொண்டிருக்க மாட்டார். அந்த வரைக்கும் திருப்தி அடையலாம்.

சுழிக்காற்று தொடங்குவதற்கு முன்னால் அடியோடு காற்று நின்று போயிருந்தபடியால் மரக்கலங்கள் பாய் விரித்திருந்தும் கடலில் போக முடியவில்லை என்பது பூங்குழலிக்குத் தெரியாது. ஆகையால் இத்தனை நேரம் அக்கரை போய்ச் சேர்ந்திருக்கும் என்றே நினைத்தாள். சேநாதிபதி ''இளவரசருக்கு வலை போடாதே!'' என்று சொன்னது அடிக்கடி அவளுடைய மனத்தில் தோன்றித் துன்புறுத்திக் கொண்டிருந்தது. ஆகையால், கோடிக்கரைக்குத் தானும் உடனே போக வேண்டாம் என்று எண்ணினாள். பூதத் தீவிலே தங்கியிருந்து, சுழிக்காற்றின் அட்டகாசங்களை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்துவிட்டுப் பிறகு சாவகாசமாகப் புறப்படத் தீர்மானித்தாள்.

தொண்டைமானாற்றின் முகத்துவாரத்திலிருந்து பூதத் தீவு அதிக தூரத்தில் இல்லை. ஆகையால் புறப்பட்ட ஒரு நாழிகை நேரத்துக்குள் அங்கே போய்ச் சேர்ந்து விட்டாள்.

பூங்குழலி பூதத் தீவைச் சேர்ந்ததற்கும் சுழிக்காற்று அடிக்கத் தொடங்கியதற்கும் சரியாயிருந்தது.

படகைக் கரையில் ஏற்றிக் குப்புறக் கவிழ்த்துப் பத்திரமாய்க் கட்டிப் போட்டுவிட்டுப் பூங்குழலி அத்தீவில் இருந்த ஒரு சிறிய புதிய ஸ்தூபத்தை அடைந்தாள். முதலில் சற்று நேரம் அதன் அடிவாரத்துக் குகை அறையில் காற்றிலும் மழையிலும் அடிபடாதிருந்து பார்த்தாள். அதிகநேரம் அவளால் அப்படி இருக்க முடியவில்லை. வாயு பகவானின் கோலாகலத் திருவிளையாடல்களைப் பார்க்கும் ஆசை உண்டாயிற்று. குகையிலிருந்து வெளிவந்து படிக்கட்டில் ஏறி ஸ்தூபத்தின் உச்சியை அடைந்தாள். அப்போது சுற்றுப்புறத்துச் சூழ்நிலை அவள் உள்ளத்தின் நிலைக்கு ஒத்ததாக இருந்தது. பூதத் தீவில் ஓங்கி வளர்ந்திருந்த நூற்றுக்கணக்கான தென்னை மரங்கள் தலைவிரி கோலமாக ஊழிக்காலத்தில் சம்ஹாரமூர்த்தியைச் சுற்றி நின்று பூத கணங்கள் ஆடுவதுபோல் ஆடின. கடல் அலைகள் அத்தென்னை மரங்களின் உயரம் எழும்பி இமய மலையின் பனிச் சிகரங்களைப் போல் ஒரு வினாடி காட்சி அளித்து மறுவினாடி நூறு கோடி நுரைத் துளிகளாகச் சிதறி விழுந்தன. சுழன்று சுழன்று அடித்த காற்றின் சத்தமும் அக்காற்றில் சுழன்று ஆடிய மரக் கிளைகளின் சத்தமும் அலைகளின் பேரொலியும் இடையிடையே கேட்ட இடி முழக்கமும் சேர்ந்து திக்குத் திகாந்தங்கள் எல்லாம் இடிந்து தகர்ந்து விழுகின்றன என்று எண்ணச் செய்தன. வானத்தை வெட்டிப் பிளப்பதுபோல் அவ்வப்போது தோன்றிக் கப்பும் கிளையும் விட்டுப் படர்ந்து ஓடி மறைந்த மின்னல்கள் ஒருவினாடி நேரம் கொந்தளித்த அலைகடலையும், பேயாட்டம் ஆடிய மரங்களையும், வெளிச்சம் போட்டுக் காட்டிவிட்டு மறுவினாடி கன்னங்கரிய காரிருளில் ஆழச் செய்தன.

வ்வளவு அல்லோல கல்லோலங்களையும் பார்த்துக் கொண்டு பூங்குழலி வெகு நேரம் நின்றாள். அவள் உடம்பு காற்றில் ஆடிய மரங்களைப் போல் ஆடியது. அவள் கூந்தல் அவிழ்ந்து காற்றில் பறந்தது. மழை அவள் உடலை நனைத்தது. இடி முழக்கம் அவள் செவிகளைப் பிளந்தது. மின்வெட்டு அவள் கண்களைப் பறித்தது. இதையெல்லாம் அவள் பொருட்படுத்தவில்லை. வெகு நேரம் அக்காற்றிலும் மழையிலும் அவள் நின்றாள். அவள்

உள்ளம் வெறி கொண்டு கொந்தளித்தது. தன்னைச் சுற்றிலும் நடைபெறும் அற்புதக் கோலாகலமெல்லாம் தான் பார்த்துக் களிப்பதற்காகவே நடப்பதாக எண்ணிப் பெருமிதத்துடன் அனுபவித்துக்கொண்டிருந்தாள்.

இடையிடையே அவளுக்கு இளவரசர் அருள்மொழி வர்மரின் நினைவு வந்து கொண்டிருந்தது. அச்சமயம் அவர் கோடிக்கரை சேர்ந்து பத்திரமான இடத்தில் தங்கியிருப்பார் என்று எண்ணினாள். ஒருவேளை தன் பெற்றோர் வீட்டிலே கூடத் தங்கியிருக்கலாம். அல்லது நாகைப்பட்டினம் சென்று அங்கே இராஜ மாளிகையில் தங்கியிருக்கலாம். ஒருவேளை கடலில் கப்பலிலேயே இருந்திருப்பாரோ? இருந்தால்தான் என்ன? அவர் ஏறிச் சென்ற பெரிய மரக்கலத்தை எந்தச் சுழிக்காற்றுத்தான் என்ன செய்து விடும்? அவரைப் பாதுகாக்க எத்தனையோ பேர் சுற்றிலும் சூழ்ந்திருப்பார்கள். தன்னைப் பற்றி அவர் ஞாபகப்படுத்திக் கொள்ளுவாரா? 'அந்தப் பேதைப் பூங்குழலி இச்சமயம் எங்கிருக்கிறாளோ?' என்று எண்ணிக் கொள்வாரா? ஒருநாளும் மாட்டார். அவருடைய சகோதரி அனுப்பிய வந்தியத்தேவனைப் பற்றி நினைத்துக் கொள்வார். கொடும்பாளூர்க் கோமகளைப் பற்றியும் நினைத்துக் கொள்ளலாம். இந்த ஏழைக் கரையர் குலப் பெண்ணை அவருக்கு எங்கே நினைவிருக்கப் போகிறது?

இரவு வெகுநேரம் சுழிக் காற்றின் கோலாகலத்தை அனுபவித்துவிட்டுப் பூங்குழலி ஸ்தூபத்தின் அடிவாரக் குகைக்குச் சென்று கண்ணயர்ந்தாள். தூக்கத்திலும் அவள் அமைதி அடையவில்லை. ஏதேதோ கனவுகள் கண்டு கொண்டிருந்தாள். கடலில் படகில் சென்று வலை வீசுவது போலவும் அதில் இளவரசர் அகப்படுவது போலவும் ஒருதடவை கனவு கண்டாள். மற்றொரு சமயம் அவளும் இளரவசரும் மீன்களாக மாறிக் கடலில் அருகருகே நீந்திப் போவதாகக் கனவு கண்டாள். ஒவ்வொரு கனவின்போதும் நடுவில் விழித்தெழுந்து "இது என்ன பைத்தியக்காரத்தனம்?" என்று எண்ணி மனத்தைத் தெளிவாக்கிக் கொள்ள முயன்று மறுபடியும் உறங்கினாள்.

பொழுது விடிந்து அவள் நன்றாய் விழித்தெழுந்த போது சுழிக்காற்றின் கோலாகலம் ஒருவாறு அடங்கிவிட்டிருந்தது. இடியில்லை; மின்னல் இல்லை; மழையும் நின்று போயிருந்தது. எழுந்து கடற்கரைக்குச் சென்றாள். நேற்றிரவு போல் அவ்வளவு பெரிய அலைகள் இப்போது கடலில் அடிக்கவில்லை. ஆயினும் கடல் இன்னும் கொந்தளிப்பாகவே இருந்தது. முன்னாளிரவு சுழிக்காற்று அத்தீவை என்ன பாடுபடுத்தி விட்டது என்பதற்கு அறிகுறியான காட்சிகள் நாலாபக்கமும் காணப்பட்டன. வேருடன் பெயர்ந்து தரையில் விழுந்து கிடந்த மரங்களும், முடிகள் வளைந்து தாழ்ந்திருந்த நெடிய பெரிய மரங்களும் காட்சி அளித்துக் கொண்டிருந்தன.

பூங்குழலி அக்காட்சிகளையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தபோது கடலில் சற்றுத் தூரத்தில் ஒரு கட்டுமரம் மிதப்பதுபோல் தெரிந்தது. அது கடற்கரையோரத்து அலைகளினால் பலதடவை அப்படியும் இப்படியும் அலைப்புண்ட பிறகு கடைசியாகக் கரையில் வந்து ஒதுங்கியது. அப்போதுதான் அதிலே ஒரு மனிதன் இருப்பதைப் பூங்குழலி கவனித்தாள். ஓடிப் போய்ப் பார்த்தாள். கட்டுமரத்தில் கட்டப்பட்டிருந்த அந்த மனிதன் குற்றுயிராயிருந்தான். அவனைக் கட்டு அவிழ்த்துவிட்டு, ஆசுவாசப்படுத்தினாள். அவன் ஈழத்துக் கடற்கரைக் கிராமம் ஒன்றைச் சேர்ந்த வலைஞன், மீன் பிடிக்கப் போன இடத்தில் சுழிக்காற்றில் அகப்பட்டுக் கொண்டதாகக் கூறினான். தன்னுடன் இருந்த தோழனைக் கடல் இரையாக்கிக் கொண்டதாகவும் தான் பிழைத்தது

புனர்ஜன்மம் என்றும் தெரிவித்தான். இன்னும் முக்கியமான ஒரு செய்தியையும் அவன் கூறினான்.

"முன்னிரவு நேரத்தில் கடுமையான சுழிக்காற்று அடித்துக் கொஞ்சம் நின்றது போலிருந்தது. எங்களைச் சுற்றிலும் காரிருள் சூழ்ந்திருந்தது. திடீரென்று ஒரு பேரிடி இடித்தது. அப்போது தோன்றிய மின்னல் வெளிச்சத்தில் இரண்டு மரக்கலங்கள் தெரிந்தன. ஒரு மரக்கலம் தீப்





பிடித்து எரியத் தொடங்கியது. அந்தப் பயங்கர மான காட்சியைச் சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்தோம். அதில் மனிதர்கள் இருந்த தாகவே தெரியவில்லை. சற்றுத் தூரத்தில் இன் னொரு மரக்கலமும் நிற்கக் கண்டோம். அதில் மனிதர்களின் அவசர நடமாட்டமும் தெரிந்தது. பிறகு தீப்பிடித்த கப்பல் கடலில் முழுகி விட்டது. மற்றொரு மரக்கலம் இருட் டில் மறைந்து விட்டது!'' என்று அம்மனிதன் தட்டுத் தடுமாறிக் கூறினான்.



இதைக் கேட்டவுடனே பூங்குழலிக்கு இள வரசரை ஏற்றிச் சென்ற கப்பல் அவற்றில் ஒன்றாயிருக்குமோ என்ற ஐயம் உதித்தது. அப்படி இருக்க முடியாது என்று நிச்சயம் அடைந்தாள். கடலில் எத்தனையோ கப்பல்கள் வந்து கொண்டும் போய்க் கொண்டுமிருக்கும். அதைப் பற்றி நமக்கு என்ன கவலை? ஆனாலும் தீப் பிடித்த கப்பலில் இருந்



தவர்களில் சிலர் கடலில் விழுந்திருக்கக் கூடும். இந்தக் கட்டு மரத்து வலை ஞனைப் போல் அவர்களில் யாராவது கையில் அகப்பட்டதைப் பிடித்துக் கொண்டு தத்தளிக்கக் கூடும். அவர்களுக்கு ஏன் நாம் உதவி செய்யக் கூடாது? படகில் ஏறிச் சென்று அப்படித் தத்தளிக்கிறவர்களை ஏற்றிக் கொண்டு வந்து ஏன் கரை சேர்க்கக் கூடாது? பின்னே, இந்த ஜன்மம் எதற்காகத்தான் இருக்கிறது?

அவ்வளவுதான்; இந்த எண்ணம் தோன்றியதோ, இல்லையோ, பூங்குழலி படகைக் கட்டவிழ்த்து நிமிர்த்திக் கடலில் தள்ளி விட்டாள். தானும் ஏறிக் கொண்டாள். அவளுடைய இரும்புக் கரங்களின் பலம் முழுவதையும் உபயோகித்துத் துடுப்பை வலித்தாள். கரையில் வந்து மோதிய அலைகளைத் தாண்டி அப்பால் போகும் வரையில் மிகக் கடினமான வேலையாயிருந்தது. அப்புறம் அவ்வளவு கஷ்டமாக இல்லை. வழக்கம் போல் சர்வ சாதாரணமாக அவளுடைய கரங்கள் துடுப்பை வலித்தன. படகு உல்லாசமாக ஆடிக் கொண்டு மெள்ள மெள்ள நகர்ந்து சென்றது.



பூங்குழலியின் உள்ளத்தில் குதூகலம் பொங்கியது. அவள் படகிலே வழக்கமாகப் பாடும் பழைய கீதம் தானாகவே புதிய உருவம் கொண்டது. அலைகளின் இரைச்சலை அடக்கிக் கொண்டு அந்தக் கீதம் அவளுடைய கம்பீரமான இனிய குரல் வழியாக வெளி வந்து நாற்றிசையும் பரவியது: –

*"அலைகடல் கொந் தளிக்கையிலே*
*அகக்கடல்தான் களிப்பதுமேன்?*
*நிலமகளும் துடிக்கையிலே*
*நெஞ்சகந்தான் துள்ளுவதேன்?*
*நடன கலை வல்லவர்போல்*
*நாட்டியந்தான் ஆடுவதேன்?"*

பாய்மரக் கட்டையைப் பிடித்துக்கொண்ட இளவரசரும் வந்தியத்தேவனும் அலை கடலில் மொத்துண்டு மொத்துண்டு மிதந்து கொண்டிருந்தார்கள். அன்று ஓர் இரவுதான் அவர்கள் அவ்வாறு கடலில் மிதந்தார்கள். ஆனால் வந்தியத்தேவனுக்கு அது எத்தனையோ யுகங்கள் எனத் தோன்றியது. அவன் சீக்கிரத்திலேயே நிராசை அடைந்து விட்டான்; பிழைத்துக் கரையேறுவோம் என்ற நம்பிக்கையை அடியோடு இழந்து விட்டான். ஒவ்வொரு தடவை அலை உச்சிக்கு அவன் போய்க் கீழே வந்த போதும், "இத்துடன் செத்தேன்" என்று எண்ணிக்கொண்டான். மறுபடியும் உயிரும் உணர்வும் இருப்பதைக் கண்டு வியந்தான். அடிக்கடி இளவரசரைப்



பார்த்து "என்னுடைய அவசர புத்தியினால் தங்களையும் இந்த ஆபத்துக்கு உள்ளாக்கினேனே?" என்று புலம்பினான். இளவரசர் அவனுக்கு ஆறுதல் கூறித் தைரியம் ஊட்டி வந்தார். "மூன்று நாள் நாலு நாள்வரையில் கடலில் இதுமாதிரி மிதந்து பிழைத்து வந்தவர்கள் உண்டு" என்று அடிக்கடி சொல்லி வந்தார். "நாம் கடலில் விழுந்து எத்தனை நாட்கள் ஆயின?" என்று வந்தியத்தேவன் கேட்டான். "இன்னும் ஒரு ராத்திரிகூட ஆகவில்லையே?" என்றார் இளவரசர். "பொய்! பொய்! பல நாட்கள் ஆகியிருக்க வேண்டும்" என்றான் வந்தியத்தேவன்.

கொஞ்ச நேரத்துக்கெல்லாம் அவனுக்கு இன்னொரு கஷ்டம் ஏற்பட்டது. தொண்டை வறண்டு போய்த் தாகம் எடுத்தது. தண்ணீரிலேயே மிதந்து கொண்டிருந்தான்; ஆனால் தாகத்துக்குக் குடிக்கத் தண்ணீர் இல்லை. இது பெரிய சித்திரவதையாயிருந்தது. இளவரசரிடம் கூறினான். "கொஞ்சம் பொறுமையாயிரு! சீக்கிரம் பொழுது விடியும்! எங்கேயாவது கரையிலே போய் ஒதுங்குவோம்!" என்றார் இளவரசர். சிறிது நேரம் பொறுத்துப் பார்த்தான்; முடியவில்லை. "ஐயா! என்னால் இந்தச் சித்திரவதையைப் பொறுக்க முடியாது. கட்டை அவிழ்த்து விடுங்கள்! கடலில் முழுகிச் சாகிறேன்!" என்றான். இளவரசர் மீண்டும் தைரியம் கூற முயன்றார். ஆனால் பலிக்கவில்லை. வந்தியத்தேவனுக்கு வெறி மூண்டது. தன்னுடைய கட்டுக்களைத் தானே அவிழ்த்துக் கொள்ள முயன்றான். இளவரசர் அதைப் பார்த்தார். அருகில் நெருங்கிச் சென்று அவனுடைய தலையில் ஓங்கி இரண்டு அறை அறைந்தார். வந்தியத்தேவன் உணர்வை இழந்தான்.

அவன் மறுபடி உணர்வு பெற்ற போது, பொழுது விடிந்து வெளிச்சமாயிருப்பதைக் கண்டான். அலைகளின் ஆரவாரமும் சிறிது அடங்கியிருந்தது. சூரியன் எங்கேயோ உதயமாகியிருக்க வேண்டும். ஆனால் எங்கே உதயமாகியிருக்கிறது என்று பார்க்க முடியவில்லை.

இளவரசர் அவனை அன்புடன் நோக்கி, "தோழா! சமீபத்தில் எங்கேயோ கரை இருக்க வேண்டும். தென்னை மரம் ஒன்றின் உச்சியைச் சற்று முன் பார்த்தேன். இன்னும் கொஞ்சம் பொறுமையாயிரு!" என்று சொன்னார்.

"இளவரசே! என்னைக் கைவிட்டு விடுங்கள்! தாங்கள் எப்படியாவது தப்பிப் பிழையுங்கள்!" என்றான் வந்தியத்தேவன்.

"வேண்டாம்! அதைரியப்படாதே! உன்னை அப்படி நான் விட்டுவிட மாட்டேன்...! ஆகா! அது என்ன! யாரோ பாடுகிற குரல் போல் தொனிக்கிறதே!" என்றார் இளவரசர்.

ஆம்; அப்போது அவர்களுடைய காதில் பூங்குழலி படகிலிருந்து பாடிய பாட்டுத்தான் கேட்டது.

***"அலைகடல் கொந் தளிக்கையிலே***
***அகக்கடல் தான் களிப்பதுமேன்?"***

என்ற கீதம் அவர்களுடைய காதில் அபயகீதமாகத் தொனித்தது. உடற் சோர்வும் மனச் சோர்வும் உற்று முக்கால் பிராணனை இழந்திருந்த வந்தியத் தேவனுக்குக்கூட அந்தக் கீதம் புத்துயிர் அளித்து உற்சாகம் ஊட்டியது.

"இளவரசே! பூங்குழலியின் குரல்தான் அது! படகு ஓட்டிக் கொண்டு வருகிறாள். நாம் பிழைத்துப் போனோம்!" என்று சொன்னான்.

சிறிது நேரத்துக்கெல்லாம் படகு அவர்கள் கண்ணுக்குத் தென்பட்டது. நெருங்கி நெருங்கி அருகில் வந்தது. பூங்குழலி "இது உண்மையில் நடப்பது தானா?" என்று சந்தேகித்துச் செயலிழந்து நின்றாள். இளவரசர் வந்தியத்தேவனைக் கட்டு அவிழ்த்து விட்டார். முதலில் தாம் படகிலே தாவி ஏறிக்கொண்டார். பின்னர் வந்தியத்தேவனையும் ஏற்றி விட்டார். பூங்குழலி கையில் பிடித்த துடுப்புடனே சித்திரப் பாவையைப் போல் செயலற்று நின்றாள்.

(தொடரும்)

# (இரண்டாம் பாகம் முற்றியது)



நம் நாட்டு உயர்தரப் பள்ளிக்கூடங்களில் எஸ்.எஸ்.எல்.சி வகுப்பில் (அதாவது ஆறாம் படிவத்தில்) படிக்கும் மாணவர்களுக்காக ஆங்கிலப் பாடப் புத்தகம் வருஷந்தோறும் தொகுக்கப்படுகிறது. இந்தத் தொகுப்பு நூலில் ஆப்ரஹாம் லிங்கனின் **கெட்டிஸ்பர்க் சொற்பொழிவு** சில சமயம் இடம் பெறுவதுண்டு.

ஆப்ரஹாம் லிங்கன் அமெரிக்காவின் ஜனாதிபதிகளில் கீர்த்தி மிகப் பெற்றவர். அமெரிக்காவிலிருந்து அடிமை முறையை ஒழித்து லட்சக்கணக்கான நீக்ரோ அடிமைகளை விடுதலை செய்தவர். இதன் பொருட்டு அமெரிக்காவில் நடந்த உள்நாட்டு யுத்தம் சரித்திரப் பிரசித்தமானது. அந்த விடுதலைப் போருக்குத் தலைமை வகித்த ஆப்ரஹாம் லிங்கனும் உலக சரித்திரத்தில் அழியாத இடம் பெற்று அமரர் ஆனவர். நம் பாரத நாட்டில் காந்தி மகானை ஒரு

# ஏட்டுக் கல்விப் பித்தர்களுக்கு...

வெறியன் சுட்டுக் கொன்றதுபோல் அமெரிக்காவில் ஆப்ரஹாம் லிங்கனையும் வெறியன் ஒருவன் சுட்டுக் கொன்றான்.

ஆப்ரஹாம் லிங்கன் ஜனாதிபதி ஆவதற்கு முன்னும், ஜனாதிபதி பதவி வகித்த போதும் பற்பல சொற்பொழிவுகள் நிகழ்த்தியதுண்டு. அவற்றில் பல உலகத்தின் மிகச் சிறந்த வசன இலக்கியங்களாகத் திகழ்ந்து வருகின்றன. அவருடைய சொற்பொழிவுகளிலெல்லாம் மிகச் சிறந்தது கெட்டிஸ்பர்க் சொற்பொழிவு. நீக்ரோ அடிமைகளின் விடு

**அமரர் கல்கி**

தலைக்காக நடத்திய யுத்தத்தில், அடிமை ஒழிப்புக் கட்சியில் நின்று போராடி உயிர் நீத்தவர்களுக்கு கெட்டிஸ்பர்க் என்னுமிடத்தில் ஞாபகச் சின்ன சமாதி எழுப்பப்பட்டது. அந்த இடத்தில் அச்சந்தர்ப்பத்தில் ஆப்ரஹாம் லிங்கன் நிகழ்த்திய பிரசங்கந்தான் 'கெட்டிஸ்பர்க் சொற்பொழிவு' என்று பெயர் பெற்றது.

சுமார் இருபத்தைந்து வரிகளும் பன்னிரெண்டே வாக்கியங்களும் அடங்கிய இந்தச் சொற்பொழிவைக் குறித்து ஆங்கில மொழியில் பல பெரிய ஆராய்ச்சிப் புத்தகங்கள் எழுதப்பட்டிருக்கின்றன.

அதையெல்லாம் காட்டிலும், நமது நாட்டு ஆறாம் படிவ மாணாக்கர்களின் ஆங்கில பாடப் புத்தகத்திலும் அந்தச் சொற்பொழிவு இடம் பெறுகிறதென்றால், அது எவ்வளவு மகிமை பொருந்தியதாயிருக்கும் என்று சொல்ல வேண்டியதில்லையல்லவா?

"எண்பதும் ஏழுமான ஆண்டுகளுக்கு முன்னால் நம் தந்தையர்கள் இந்தக் கண்டத்தில் ஒரு புதிய ஜாதியை சிருஷ்டித்தார்கள்..." என்னும் அந்தச் சொற்பொழிவின் ஆரம்ப வார்த்தைகளைக் கேட்கும்போதே அமெரிக்கர்கள் ரோமாஞ்சனம் அடைவார்கள்.

சரி; அந்த அற்புதமான சொற்பொழிவைப் பற்றி ஆராய்ச்சி செய்வது இங்கே நமது நோக்கம் அன்று. அதை நிகழ்த்திய மகா புருஷரான ஆப்ரஹாம் லிங்கனின் வாழ்க்கை வரலாற்றில் ஒரு பகுதியை எடுத்துக்காட்டவே விரும்புகிறோம்.

**அ**மெரிக்க ஜனாதிபதி பதவி தேர்தலுக்கு ஆப்ரஹாம் லிங்கன் நிற்பதென்று தீர்மானிக்கப்பட்டபோது, அவருடைய வாழ்க்கை வரலாறு தேவை என்று அவருடைய நண்பர்கள் வற்புறுத்தினார்கள். அதன்பேரில் ஆப்ரஹாம் லிங்கன் தமது சுய சரிதத்தைத் தமது கைப்படச் சுருக்கமாக எழுதிக் கொடுத்தார். ஆனால் மூன்றாவது மனிதரைப் பற்றி எழுதுவதைப்போல் எழுதினார். அவர் கைப்பட எழுதிய அந்தச் சுய வரலாறு அவருடைய கையெழுத்தில் எழுதியபடியே இன்றும் அமெரிக்காவில் பாதுகாக்கப்பட்டு வருகிறது.

ஆப்ரஹாம் லிங்கன் தமது இளம் பிராயத்தைப் பற்றித் தாமே எழுதியிருப்பதைக் கீழே தந்திருக்கிறோம்:-

**"ஆப்ரஹாமின் எட்டாவது வயதில், 1816-ம் வருஷம் இலையுதிர் காலத்தில், அவனுடைய தகப்பனார் இண்டியானா மாகாணத்துக்குச் சென்றார். கெண்டக்கியில் ஏற்பட்ட நிலத் தகராறு காரணமாக அவர் இண்டியானாவுக்குப் போக நேர்ந்தது. அங்கே அடர்ந்த காட்டுப் பிரதேசத்தில் குடியேறினார். காட்டில் நெருக்கமாக இருந்த மரங்களை வெட்டி அப்புறப்படுத்தி நிலத்தைச் சாகுபடிக்குப் பண்படுத்துவது முக்கியமான முன்னணி வேலையாக இருந்தது. ஆப்ரஹாம் எட்டு வயதுச் சிறுவனாயிருந்தாலும் வளர்ச்சி பெற்றிருந்தான். அவன் கையில் உடனே ஒரு கோடாரி கொடுக்கப்பட்டது. அதுமுதல் இருபத்து மூன்றாம் வயது வரையில் ஆப்ரஹாம் அந்த மிக உபயோகமான கருவியை இடைவிடாமல் கையாண்டு வந்தான். உழவு, அறுவடைக் காலங்களில் அந்தந்த வேலைகளையும் செய்தான். இடையில் ஏபிஸிடி சொல்லித் தந்த பள்ளிக்கூடங்களுக்குச் சில தினங்கள் சென்றான். பள்ளிக்கூடம் சென்ற நாட்களையெல்லாம் கணக்கிட்டால் ஒரு வருஷத்துக்கு மேற்போகாது. காலேஜ் அல்லது அகாடமி கட்டடத்துக்குள் அவன் நுழைந்ததேயில்லை. அவன் கற்ற கல்வியெல்லாம் வேலை செய்த நேரம் போக ஒழிந்த நேரங்களில் அவனே படித்துத் தெரிந்துகொண்டவைதான். இருபத்து மூன்றாவது வயதில் தகப்பனாரைப் பிரிந்த பிறகு அவன் ஆங்கில இலக்கணம் கற்றான். அவ்வளவு நன்றாகக் கற்கவில்லை. இப்போது பேசவும் எழுதவும்**

தெரிந்திருக்கும் அளவுக்கு மட்டுமே கற்றான்...

பத்தொன்பதாம் பிராயத்தில் ஆப்ர ஹாம் கூலிக்குப் படகு ஓட்டிக் கொண்டு போனான். அவனும் படகின் சொந்தக்காரன் மகனுமாக அப்பிர யாணத்தைச் செய்து முடித்தனர்...

இருபத்தோராவது வயதில் ஆப்ர ஹாம் தன்னுடைய தந்தையுடனும் குடும்பத்தாருடனும் இண்டியானாவை விட்டு இல்லினாய் மாகாணத்துக்குப் போகும்படி நேர்ந்தது. காளை மாடுகள் பூட்டிய வண்டிகளில் அவர்கள் பிரயா ணம் செய்தார்கள். ஒரு வண்டியை ஆப்ரஹாம் ஓட்டிச் சென்றான். ஸங் காமன் நதிக்கரையில் அவர்கள் குடி யேறினார்கள். இங்கே மரக் கட்டை களினால் வீடு கட்டிக் கொண்டார்கள். மேலும் பல மரக் கட்டைகளைப் பிளந்து பத்து ஏக்கரா நிலத்துக்கு அம்மரப் பிளாச்சுகளைக் கொண்டு வேலி எடுத்தார்கள். பிறகு, அதே வருஷத்தில் விதை விதைத்துத் தானியம் உற்பத்தி செய்தார்கள். மேற்கூறிய மரப் பிளாச்சுகள் சமீபத்தில் சிறிது பிரசித்தி அடைந்தன. ஆனால் ஆப்ரஹாம் பிளந்த மரப் பிளாச்சுகள் அவை மட்டு மல்ல; முன்னும் பின்னும் இம்மாதிரி எவ்வளவோ மரப் பிளாச்சுகள் ஆப்ர ஹாம் லிங்கன் பிளந்தது உண்டு...!''

உலக சரித்திரத்தில் என்றும் அழி யாத புகழ் பெற்ற ஜனாதிபதி லிங்கனின் இளம் பிராய வாழ்க்கை இவ்வாறு அமைந்திருந்தது. லிங்கன் தம் சுயசரிதக் குறிப்பில் தாம் பிளந்த மரப் பிளாச்சு களைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார் அல்லவா? அதற்கு ஒரு விசேஷக் கார ணம் உண்டு.

ஆப்ரஹாம் லிங்கனை அமெரிக்க ஜனாதிபதி பதவிக்குத் தேர்ந்தெடுக்கும் யோசனை வந்தபோது, அவருடைய எதிரிகள் பரிகசித்தார்கள். "ஆப்ரஹாம் லிங்கனுக்கு என்ன தெரியும்? மரக்கட் டைகளைப் பிளக்கத்தான் தெரியும்!'' என்றார்கள். மேலும் அதை நன்றாய்ப் பிரசாரம் செய்வதற்காக, ஸங்காமன் நதிக்கரை வேலியிலிருந்து இரண்டு பிளந்த மரக் கட்டைகளைக் கொண்டு வந்து, "இவை ஆப்ரஹாம் லிங்கன் பிளந்தவை!'' என்று எழுதித் தொங்க விட்டார்கள்.

இதைக் குறிப்பிட்டுத்தான் ஆப்ரஹாம் லிங்கன் "இன்னும் எத்தனையோ மரக் கட்டைகளை ஆப்ரஹாம் பிளந்து பிளாச்சுகளாகச் செய்ததுண்டு'' என்று எழுதினார்.

அமெரிக்காவில் அக்காலத்தில் வசித்த வர்களில் பெரும்பாலோர் ஏட்டுக் கல்விப் பித்தர்கள் அல்ல. ஆகையால் இளம் பிராயத்தில் உடலுழைத்துப் பாடு பட்டவரான ஆப்ரஹாம் லிங்கனையே ஜனாதிபதி பதவிக்குத் தேர்ந்தெடுத் தார்கள்.

இப்படி உடலுழைப்புக்குப் பெருமை தந்த ஜாதியானபடியாலேதான் இன் றைக்கு அமெரிக்கர்கள் எல்லாத் தொழில்களிலும், எல்லா அறிவுத் துறை களிலும் முன்னணியில் நிற்கிறார்கள்.

நமது நாட்டின் மெக்காலே கல்வி முறையின் அடிமைப் பரம்பரையில் வந்துள்ள ஏட்டுக் கல்விப் பித்தர்களுக் கெல்லாம் ஆப்ரஹாம் லிங்கனின் மேற் கூறிய இளம் பிராய வரலாற்றைச் சமர்ப்பணம் செய்கிறோம்.

மங்களூரில் மகாநாடு கூடி, "அரை நாள் ஏட்டுக் கல்வியும் அரை நாள் தொழிலும் பயிலும் கல்வித் திட்டம் குழந்தைகளுக்குத் தீங்கு பயப்பது'' என்று தீர்மானம் செய்தார்களே, அந்த ஆசிரியர் சிகாமணிகளுக்கும் சமர்ப் பணம் செய்கிறோம்.

தந்தையின் தொழிலை மகன் கற்றுக் கொள்வது கேவலம் என்றும், பெற் றோர்களுக்கு அவர்களுடைய வேலை யில் குழந்தைகள் உதவி செய்வது பாதகம் என்றும் சொல்லும் மகா மேதாவிகளை யும் லிங்கனின் இளம் பிராய வரலாற்

''அடுத்தபடியா பிரதமர் என்ன பண்ண போறாராம்?''
''நட்பை பலப்படுத்த டெல்லி டு போயஸ் கார்டன் பஸ் விடப் போறாராம்!''

– தஞ்சை தாமு



றைப் படிக்கும்படி கேட்டுக் கொள்கிறோம்.

ஆப்ரஹாம் லிங்கனுடைய வரலாறு ஒரு தனிப்பட்ட அபூர்வமான உதாரணம் அல்ல. இதிகாச புராணங்களிலிருந்து இக்கால சரித்திரம் வரையில் அம்மாதிரி எத்தனையோ உதாரணங்கள் எடுத்துக் காட்டும்படி இருக்கின்றன.

ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா இளம் பருவத்தில் பள்ளிக்கூடம் போகவில்லை; மாடு மேய்க்கப் போனார். ஆனால் பிற் காலத்தில் பீஷ்மர், துரோணர் முதலியவர்களாலும் போற்றப்பட்ட இணையற்ற இராஜ தந்திரியாக விளங்கினார்.

திருவள்ளுவர் கைத்தறி நெசவுத் தொழில் செய்து ஜீவனம் நடத்தினார். அத் தொழிலை அவர் பள்ளிக்கூடத்தில் கற்கவில்லை. அவரை வளர்த்த தகப்பனாரிடந்தான் கற்றிருக்க வேண்டும். ஆனால் ஒப்புயர்வற்ற திருக்குறள் என்னும் தமிழ் மறையை அவர் அருளினார்.

வைஷ்ணவ சமயத்தின் ஆச்சாரிய புருஷர்களில் முதன்மை பெற்ற ஸ்ரீ வேதாந்த தேசிகர் செருப்புத் தைக்கும் தொழில் கூடக் கற்றுத் தேர்ந்தார். ஆயினும் படிப்பவர்கள் தலை கிறுங்கும்படியான தத்துவப் பொருள்களை அற்புதமாக எழுதி வைத்து விட்டுப் போனார்.

இப்படிப்பட்ட உதாரணங்கள் முற் காலத்திலும் இந்த நாளிலும் எவ்வளவோ உண்டு. நம் ஏட்டுக் கல்வியாளர்களையே அவர்களுடைய வரலாறுகளை எழுதச் சொன்னால், அபாரமாக எழுதித் தள்ளி விடுவார்கள்.

ஆயினும், நம் குழந்தைகளுக்கு ஏட்டுக் கல்வியுடன் கைத்தொழில் திறமையும் அளிக்கும் கல்வித் திட்டத்தை எதிர்க்கிறார்கள்.

''ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவாது!'' என்ற பழமொழியை மெய்ப்பிக்க இதைக் காட்டிலும் வேறு என்ன உதாரணம் வேண்டும்?

• • •

இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் பயனாக ஏற்பட்ட பெருந் தீமைகளிலே மிகப் பெரும் தீமை இந்த ஏட்டுக் கல்வி முறை.

காந்தி மகானும் அவருடைய தலைமையை ஒப்புக் கொண்ட நம் தலைவர்களும் அந்த ஏட்டுக் கல்வி அடிமைத் தனத்திலிருந்து முதலில் விடுதலை பெற்றார்கள். அதற்கு அறிகுறியாகவே கைராட்டை சுற்றினார்கள். அதனாலேயே அவர்களுடைய தலைமையில் நடந்த போராட்டத்தில் இந்தப் பாரத புண்ணிய பூமி வெற்றியடைந்து அரசியல் சுதந்தரம் அடைந்தது.

சுதந்தர இந்தியாவில் ஏட்டுக்கல்வி அடிமைத்தனத்திலிருந்து விடுதலை பெற்ற புதிய சமுதாயத்தைச் சிருஷ்டிக்க வேண்டும். அப்போதுதான், நம் தலைவர்கள் நமக்குத் தேடித் தந்த சுதந்தரத்தை நாம் பாதுகாத்துக் கொண்டு எல்லாத் துறைகளிலும் முன்னேற்றமடைய முடியும்.

அத்தகைய புது சமுதாயத்தைச் சிருஷ்டிப்பதற்கு உகந்தது சென்னை இராஜ்யத்தில் அமுலுக்கு வரப்போகும் புதிய கல்விமுறை.

அதைக் கிராமங்களிலே மட்டுமின்றி நகரங்களிலும் அமுலுக்குக் கொண்டு வர வேண்டும் என்று காங்கிரஸ் பொதுக்காரியதரிசி ஸ்ரீ அகர்வால் கூறுவதை நாம் முற்றிலும் ஆதரிக்கிறோம். ●

**(கல்கி, ஜூன் 7, 1953)**

'அதிதி' - ஒரிசா மாநிலத்தில், புவனேஸ்வர் நகரில் சிறப்பாகத் தொண்டாற்றி வரும் சமூக சேவை அமைப்பு. பெண்கள் கல்வி, சுய தொழில் போன்றவை தவிர, பெண் சிசுக்கொலைத் தடுப்பு, வரதட்சணைக் கொடுமையால் பாதிக்கப்பட்ட பெண்களுக்கு மறுவாழ்வு போன்ற பணிகளிலும் அக்கறை காட்டி வருகிறது. இதனை நடத்திக் கொண்டிருப்பவர் ஒரு தமிழ் நாட்டுப் பெண் மணி. பெயர், விஜி சீனிவாசன். எல்லா வகையிலும் பின்தங்கிய மாநிலமான ஒரிஸாவில், தம் அமைப்பு செயல்படும் விதம் பற்றிப் பேசினார் விஜி. பதறச் செய்யும் அவரது அனுபவங்களை நம்முடன் பகிர்ந்து கொண்டார்:


• 'அதிதி' அமைப்பால் மீட்கப்பட்ட சில குழந்தைகள்

# மனைவியைக் கொளுத்திய மகாபாவி!

ஒரிஸாவில் படிப்பறிவு குறைச்சல் என்பதால், அங்கு குடும்பக்கட்டுப்பாடு என்பது கடைபிடிக்கப்படுவதேயில்லை. அதிலும், ஆண் குழந்தைகள் வேண்டும் என்பதற்காகத் தொடர்ந்து குழந்தை பெற்றுக் கொள்ளுகிறார்கள். நாலைந்து பெற்ற பின்னரும், பெண்ணாகவே பிறந்தால், கோபத்தில் பெண் சிசுவைக் கொன்று விடுகிறார்கள்!

ஒரு கணக்கெடுப்பு நடத்திய போது சுமார் முப்பத்து இரண்டு சதவீதத்தினர், தங்களுடைய ஆண் குழந்தைகளை விட பெண் குழந்தைகளுக்குக் குறைவாகவே உணவு கொடுப்பதாக ஒப்புக்கொண்டார்கள். அதே போல, உடம்பு சரியில்லை என்றால் அறுபது சதவீதம் பேர், பெண் குழந்தைகளுக்கு வைத்தியம் பார்ப்பது இல்லை! பெண் குழந்தைகளுக்கு கல்வி அவசியமில்லாத ஒன்று என்று கருத்து தெரிவித்தனர்.


• விஜி சீனிவாசன்

• வரதட்சணையும், பெண் சிசுக் கொலைக்கு முக்கியக் காரணம். ஆஸ்பத்திரிகளில் பெண் சிசுக்களைப் பெற்றோர் விருப்பப்படிக் கொல்லாமல், என்னிடம் கொண்டு வந்து கொடுக்கும் செவிலியருக்கு நான் நூறு ரூபாய் வரை பணம் கொடுப்பது உண்டு. ஒருமுறை ஒரு நர்ஸ், தான் குழந்தையைக் கொல்லாமல், 'அதிதி' இல்லத்தில் கொண்டு போய் விட்டு விடப் போவதாய்ச் சொல்லிவிட்டாள். அந்தக் குழந்தையின் தாய், 'வேண்டாம்! நாங்களே குழந்தையைக் கொல்லாமல் வளர்க்கப் போகிறோம்' என்று சொல்லிவிட்டாள். நாங்கள் வேறு வழியின்றி திரும்பி விட்டோம். ஆனாலும் சந்தேகம். இரண்டு நாட்கள் கழித்துப் போய் விசாரித்தபோது, அந்தக் குழந்தை 'வயிற்றுப் போக்கு' வந்து இறந்து விட்டது என்றார்கள். சே! அந்த நர்ஸ் மட்டும் விஷயத்தைச் சொல்லாமல் இருந்திருந்தால், குழந்தை பிழைத்திருக்குமே' என்று ரொம்ப ஆதங்கமாக இருந்தது.

• இன்னொரு தடவை, ஒரு குடும்பத்தில் ஒரு பெண் குழந்தை பிறந்தபோது, அதற்கு பதிலாக, அதன் அக்காவான இரண்டு வயதுப் பெண்ணைத் தீயிட்டுக் கொல்ல முயன்றனர் அதன் பெற்றோர். காரணம், அந்தப் பெண் ஊமை. கொல்லுவது என்று முடிவெடுத்தபின் புது



• உதடுகளால் வரையப்பட்ட ரஜினி!



• வேலாயுதம்

## உதடுகள் உதவியால் ஓவியம்!

**உ**தடுகளில் பேனாவைக் கவ்விக் கொண்டு படம் வரைகிறார், சுப. கனக வேலாயுதம். இந்த 23 வயது மதுரை இளைஞருக்கு சாதிக்கும் ஆசைகள் அநேகம்! இப் போது உதடுகள், கை வேகத்தில் லாவகமாகப் படம் போடுகின்றன!

அகில இந்திய சமாதான ஒருமைப்பாட்டுக் கழக மாநாட்டில் இவரது ஓவியங்களைக் கண்ட ஈராக் நாட்டு தூதர் முகமது அலி ஹபீ பாராட்டு, பாராட்டென்று பாராட்டித் தள்ளியிருக்கிறார். அதே மாநாட்டில் பாராட்டித் தள்ளிய மற்றொரு வி.ஐ.பி. – திலகவதி ஐ.பி.எஸ்.

திரையுலகில் சிவாஜி, விஜயகாந்த், விஜய், ஜேசுதாஸ், குஷ்பு... என்று பல வி.ஐ.பிக்கள் தமது ஓவியங்களைப் பார்த்து வியந்து பாராட்டியதாகக் குறிப்பிடும் வேலாயுதம், பெரிய மருது, சேனாதிபதி போன்ற படங்களில் உதவி கலை இயக்குநராகவும் பணியாற்றியிருக்கிறார்.

— 'கிரண்நியூஸ்' சேதுராமன்

சிசுவுக்கு பதிலாக, ஊனமான பெரிய உயிரைக் கொல்ல முயன்ற அவர்கள் மனோபாவத்தை என்னவென்பது? அந்த இரண்டு வயதுக் குழந்தையைத் தீக்காயங்களுடன் கொண்டு வந்து, சிகிச்சையளித்துக் காப்பாற்றினோம்!

● ஒரு குடும்பத்தில், வரதட்சணைக் கொடுமை. மருமகளை இரவோடு இரவாக தீயிட்டுக் கொளுத்தி விட்டனர். விடிந்ததும் சடலத்தைப் புதைத்துவிடும் திட்டத்துடன், வீட்டில் ஓரமாய் துணியில் சுற்றி வைத்து விட்டனர்.

இதைக் கண்டுபிடித்துவிட்ட எங்கள் வாலண்டியர் ஒருவர், இரவோடு இரவாகக் கிளம்பி என்னை வந்து சந்தித்து, விஷயத்தைச் சொல்லி விட்டார். நாங்கள் உடனே விரைந்து சென்று சடலத்தைக் கைப்பற்றினோம். ஆனால் அதிர்ஷ்டவசமாக, அந்தப் பெண்ணுக்கு உயிர் ஊசலாடிக் கொண்டிருந்தது தெரியவர, தீவிர சிகிச்சையளித்துக் காப்பாற்றி விட்டோம்.

● குழந்தைத் திருமணமும் அங்கே சகஜம். 'அதிதி' மூலம் சுமார் நாநூறு இடங்களில் முறைசாராக் கல்வி மையங்கள் அமைத்து, பெண் குழந்தைகளுக்குக் கல்வி கற்பித்து வருகிறோம். இதனால், அங்கு வந்து கல்வி கற்கும் சிறுமிகளுக்குத் திருமண ஏற்பாடுகள் நடைபெறும்போது, அவர்களே தங்கள் டீச்சரிடம் சொல்லிவிடுவார்கள். உடனே அந்த டீச்சர், சம்பந்தப்பட்ட குடும்பத்தினரிடம் பேசி, திருமணத்தைத் தடுத்து விடுவார். இது போல சுமார் முப்பது பாலர் திருமணங்கள் நிறுத்தப்பட்டது பெரிய விஷயம்.

● ஓர் இளைஞன் எங்கள் அமைப்புக்கு வந்து, நாங்கள் வரதட்சணை கொடுமை சம்பந்தமான கேஸ்களில் எத்தனை தூரம் வெற்றி பெற்றிருக்கிறோம்? எத்தனை கணவன்மார்கள், அவர் குடும்பத்தினர் தண்டனை பெற்றிருக்கிறார்கள் என்பது பற்றியெல்லாம் அனுதாபத்துடன் கேட்டான்.

நாங்களும், போதிய சாட்சியில்லாமை, பெண்ணின் குடும்பத்தினர் காம்ப்ரமைஸ் செய்து கொண்டு விடுவது போன்ற இடர்பாடுகள் பற்றியும், வழக்குகள் பல வருடங்களுக்கு இழுத்தடிக்கப்படுவது பற்றியும் சொன்னோம். அன்று இரவு, அந்த இளைஞன் என்ன செய்தான் தெரியுமா? தன் மனைவியைத் தீயிட்டுக் கொளுத்தி விட்டான். விஷயம் அறிந்து போலிசில் புகார் கொடுத்து, வழக்கு நடந்து கொண்டிருக்கிறது. ●

— கௌதம்

படம் : ஸ்ரீஹரி

சாருகேசி

# காரணம்

**ப**ஸ்ஸை விட்டு இறங்கும்பொழுது வெயில் தகித்தது. 'கோடை தொடங்குவதற்கு முன்னாலேயே இப்படியா!' என்று நினைத்துக் கொண்டான் நாராயணன்.

கூடவே இறங்கிய கிராமத்து மக்களின் கேள்விக்குறியான பார்வையைத் தவிர்த்து, சாலை ஓரமாக இருந்த பஸ் நிறுத்தத்தில் ஓரமாக நின்று பார்த்தான்.

ஊரில் சந்தை போலும். மர நிழலில், மாடுகள். சம்பந்தமே இல்லாத வண்ணக்கலவைகளில், மலிவான ஆடைக் குவியல்கள், காய்கறிகள், பழக்குலைகள்...

தோளில் தொங்கிய காமிராவை எடுத்துக் கையில் வைத்துக்கொண்டான். குறிப்பு நோட்டுப் புத்தகத்தைத் தூக்கி ஃபோட்டோ க்ரோமேடிக் கண்ணாடிக்கு மேல், வெயிலுக்கு மறைவாகப் பிடித்துக்கொண்டான்.

கிராமத்துக்கு உள்ளே நுழைந்து, மலைப் பாதையை நோக்கிப், பேச்சிற சாலையில் நடந்தபோது காசி எதிர்ப்பட்டான். சென்னையில் ஒருமுறை அறிமுகமான சமூக ஊழியன்...

"ஒரு கார்டு போட்டிருந்தா பஸ் ஸ்டாண்டுக்கே வந்திருப்பனே சார்!"

"எப்படியும் நீ இங்கதான் இருப்பேன்னு தெரியும் காசி. அதான் புறப்பட்டு வந்திட்டேன். எங்க கிளம்பிட்டே?"

"எங்கியும் இல்லே. சந்தை நடக்குது இல்லே! யாருக்காவும் ஏதாவும் உதவி தேவைப்படும். அதான்... பரவால்ல. நீங்க வந்திட்டீங்க. இனி போவம் ஊட்டுக்கு."

அதிகம் பச்சைச் செழிப்பு இல்லாத கிராமம். 'ஒரு நாளைக்கு மேல நம்மால இங்கே இருக்க முடியாதுடா சாமி' என்று நாராயணனுக்குத் தோன்றிற்று. கிழக்கே தன்பாத், மேற்கே ராஜஸ்தானத்து ஜெய்சால்மர், வடக்கே ராய்பரேலி என்று சுற்றி வருகிற பத்திரிகைப் பிழைப்பு...

"**வா** காசி, போகலாம்!"

மலையிலிருந்து சின்னச் சுமையாகத் தலை நிறைய விறகுகளையும், சுள்ளிகளையும் சுமந்து கொண்டு, மூச்சு வாங்க வந்த பெண்கள், 'க்ளிக் க்ளிக்' என்று நாராயணன் புகைப்படம் எடுத்த போது, வெட்கத்துடன் சிரித்துக்கொண்டே விரைந்தார்கள்.

"காசி, நிறுத்து... நிறுத்து அவங்களை!"

"நா... மாதம்மா, முத்துலட்சுமி... நில்லுங்க. ஐயா உங்கள ஏதோ கேக்கணுமாம்" என்று காசி கூவினான்.

தயங்கித் தயங்கி நின்றார்கள் அவர்கள்.

"விறகு வெட்டிட்டு வர்ீங்களே, காட்டை அழிச்சிட மாட்டீங்க, கொஞ்ச நாள்ள?"

"சுள்ளி நெறயக் கெடக்கும். பொறுக்கிட்டு வருவோம். இதெல்லாம் ஊஞ்சா மரங்க. நிறையவே வளந்து நிக்குது. இத்த வச்சுத்தான் நாங்க கஞ்சியோ கூழோ குடிக்கணும் சாமி. நாங்க வெட்டியா காடு அழிஞ்சிடப் போவுது?"

"அதுலயும் காவல்காரர் பிடிச்சுக்கிட்டா கோடாலியையும் அருவாளையும் புடுங்கி வச்சுக்கிடுவாரு. இவங்க நூறு, நூத்தம்பது கொடுத்தாத்தான் திருப்பிக் கொடுப்பாரு!"



என்றான் காசி.

"எத்தனை தூரம் போவீங்க காட்டுல?"

"அது போவம், எட்டு மைல் பத்து மைல்."

"என்ன சாப்புடுவீங்க?"

எல்லாரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர்.

"கேவரகுக் கஞ்சியக் குடிச்சுப்புட்டுப் போவம். கூடவே புள்ளைங்க வந்தா கூட்டிக்கிடறதுதான்!"

"எப்பத் திரும்புவீங்க? இந்த வேளைக்கித் தானா?"

"இல்லீங்க. இன்னிக்குக் கிராமத்துல சந்தைங்கறதால சீக்கிரம் திரும்பிட்டோம். இல்லேன்னா அஞ்சு மணி ஆறு மணி ஆவும்."

அவர்கள் சுமையோடு, வியர்வை சொட்ட நிற்பதைப் பார்க்க நாராயணனுக்குப் பரிதாபமாய் இருந்தது.

"அவ்வளவுதானா? எல்லாம் கேட்டுட்டீங்களா சார்?"

"ஒன்னே ஒன்னு கேக்கணும் காசி. அவங்க போகட்டும். நீயே பதில் சொல்லு!"

பெண்கள் மெல்லத் தயங்கித் தயங்கி நடக்கத் தொடங்க, நாராயணன் கேட்டான்:

"இங்க நிறைய பெண் சிசுக்கொலை உண்டாமே, நிஜமா காசி?"

காசி நின்றான். "எல்லாரும் குடும்பக் கட்டுப்பாடு செய்துக்கிட்டிருக்காங்க. இப்பக் குறைஞ்சிருக்கு. இல்லேன்னா, தொண்டைல நெல்லை வச்சுத் தள்ளிருவாங்க. எருக்கம்பாலைக் கொடுத்துருவாங்க. ஈரத் துணியில சுத்திக் வைத்துப் போட்டுருவாங்க."

"எத்தினி நாளா இல்லே?"

"ஒரு வருசமான்னே சொல்லலாம். நெறய எடுத்துச் சொன்னப்புறம் புரிஞ்சுக்கிட்டாங்க. டாக்டரும் காரணம்!"

காசியின் குடிசை வந்தது. பெரிய குடிசை. வாசலில் போர்டு. சிறுவர்களும், சிறுமிகளும் கூடிக் கூடிப் பேசிக்கொண்டு ஆரவாரமாய் இருந்தவர்கள், காசியையும் நாராயணனையும் கண்டதும் நிறுத்திவிட்டு அமைதியானார்கள்.

"எப்படி காசி உனக்கு இந்த மாதிரி பட்டிக் காட்டுல அநாதை ஆசிரமம் நடத்தத் துணிச்சல் வந்தது? எப்படி எல்லாருக்கும் சோறு போடறே? ஆச்சரியமா



இருக்கே!"

"ஏதோ கெடக்கிற வருமானத்துல எல்லாத் துக்கும் ரெண்டு வேளைக்கு கூழோ கஞ்சியோ கொடுத்துடறேன். இவங்களும்தான் பாவம், எங்க போவாங்க? அப்பனும் ஆத்தாளும் சாராயம் குடிச்சுச் செத்தவங்க. ஏதோ படிப்பும் சொல்லிக் கொடுத்து, ஒரு தொழிலக் கத்துக் குடுத்தா எப்படியும் பிழைச்சுக்குவாங்க இல்லே!"

"சாராயம் உண்டா?"

"தாராளமா. அதெல்லாம் பெரிய மனுசங்க, போலீஸ், ஆளும்கட்சி பாதுகாப்போட, அதி காரமா செய்யுற தொழில்!"

"அப்ப இந்தச் சுமையத் தூக்கிட்டுப் போன பொம்பளைங்களோட ஊட்டுக்காரருங்க எல்லாத்துக்கும் அந்தப் பழக்கம் உண்டா?"

"பழக்கம் உண்டாவா! சம்பாதிக்கற அம்பது ரூபாயக் குடிச்சே தீத்துருவாங்க. பாவப்பட்டப் பொம்பளைங்கதான் கெடைக்கிற முப்பது ரூவாக் கூலில அரை வயத்துக்கானும் குடும்பத்துக்கு ஆக்கிப் போடறாங்க!"

"பிரைமரி ஹெல்த் சென்டர் போகணும் காசி. இவங்களோட ஹெல்த் பத்தி விசாரிக்கணும். அப் புறம்தான் நான் ரிப்போர்ட் கம்ப்ளீட் பண்ண முடியும். பக்கத்து ரெண்டு ஊரும் நேத்தே முடிச்சிட்டேன்..."

சற்றுத் தூரத்தில் தெரிந்த மஞ்சள் பெயின்ட் அடித்த, ஆஸ்பெஸ்டாஸ் முன்கூரை வேய்ந்த கட்டடத்தை நோக்கி நடந்தபோது, வெளியே ஓர் அலுவலர் தடியான ரெஜிஸ்தரில் ஏதோ குறித்துக் கொண்டிருந்தார்.

நாராயணனைக் கண்டதும் எழுந்து நின்று ஒரு சல்யூட் அடித்தார். எல்லாம் பாண்ட்டும் சட்டையும் செய்கிற வேலை.

"ரெண்டு நாளா சரியான காச்சல்... ஊசி ஒண்ணு போடணும் டாக்டர்!"

"ஊசி வேணாம்மா. மாத்திரை தரேன். சரியாயிடும்."

அந்தக் குரல்!

"டாக்டரம்மா இருக்குறாங்களா?" என்று கேட்டான் காசி.

"ஸ்டோர்ஸ்ல மருந்துக செக் பண்ணிட் டிருக்காங்க. உள்ள உக்காருங்க. வந்திருவாங்க."

டாக்டரின் அறை சுத்தமாக இருந்தது. மேசையில் அன்றைய ஆங்கில தினசரி. ஸ்டெத்.

சட்டென்று காசி எழுந்து நின்றான், டாக்டர் உள்ளே நுழைந்தவுடன்.

"ஹாய்! அருணா...! நீயா? நீயா இங்க டாக்டரா இருக்கே?" – நாராயணன் சுத்தமாய் அதிர்ந்து போயிருந்தான்.

அருணாவின் உதட்டில் லேசான புன்னகை மலர்ந்தது.

'ஐயோ, இந்த முகத்துக்குத்தான் எத்தனை பேர் அடிமையாகக் கிடந்தார்கள்! இந்தப் புன்னகை காணக் கிடைக்குமா என்று எத்தனை கண்கள் ஏங்கித் தவித்திருக்கின்றன!'

"ஐ நெவர் எக்ஸ்பெக்டட் யு ஹியர்!" என்றான் நாராயணன், அதிர்ச்சியிலிருந்து மீளாமல்.

"நைதர் டிட் ஐ" என்றாள் அருணா. அதே புன்னகை.

"நீ எம்எம்சில ஹவுஸ் சர்ஜனா இருந்தது தெரியும். 'இந்த அழகை வச்சுட்டு இந்த உல கத்தையே ஆட்டிப் படைப்பேன்'னு சொல் லியிருக்கியே! என்னால நிஜமா நம்பவே முடி யலே அருணா. நீயா... நீயா இங்க...?"

"ஏன், வரக்கூடதா? காரணம் இருந்தா கட்டாயம் வரலாம்!"

"அதான் என்ன காரணம்? இங்க யாரு இருப்பா? நியூரோல எம்.டி. பண்ணி யு.எஸ், யு.கேன்னு ஓடிடப் போறேன்னு சொல்லிட் டிருந்தே?"

காசி உள்ளேயே இருப்பதா, வெளியே போவதா என்று தயங்கிக்கொண்டிருந்தான். டாக்டரை, நாராயணனுக்கு முன்பே தெரியுமோ? இந்த டாக்டரம்மாதான் இங்கே பெண் சிசுக் கொலை நின்றுபோகக் காரணம் என்று நாரா யணனுக்குத் தெரியுமோ? ஒருநாள்கூட வீடு போகாமல் பதினைந்து மணி நேரம் ஆஸ் பத்திரியே கதி என்று கிடக்கிறவள் அருணா என்ற விவரம் தெரியுமோ?

"எப்படி இங்கே போஸ்டிங் அக்சப்ட் பண்ணினே அருணா? என்னால ஒரு நாளைக்கு மேல இங்கே இருக்க முடியும்னு தோணலியே!"

கல்லூரி அழகிப் போட்டியில் வென்றது, மாடலிங் செய்தது, ஃபெமினா கான்ட்டெஸ்ட் டில் வென்றது, குரூப் டேட்டிங்கில் கொம்மாளம் அடித்தது எல்லாம் மட்டுமே நாராயணனுக்குத் தெரிந்திருந்தது.

"உனக்குத் தெரியாது நாராயண்! ஒகே எக்கல்லூருக்கு பிக்னிக் வந்தபோது, பக்கத்துல இருந்த இந்தக் கிராமத்தைத் தாண்டிப் போக முடியாம எங்க டூரிஸ்ட் பஸ் பழுதாச்சு.

"அந்த ஒரு நாள் முழுக்க, ஒண்ணு பின்னால ஒண்ணா, அங்கொண்ணும் இங்கொண்ணுமா, கண் முன்னாலேயே மௌனமா நான் பார்த்த சிசுக் கொலைக் காட்சியும் விசாரிச்சுத் தெரிஞ்சுக்கிட் டதும் என்னை அப்படியே உலுக்கி எடுத்தது. சென்னை திரும்பறவரை என் மனசே என் வசம் இல்லே. துடிச்சுப் போயிட்டேன். தூக்கத்துலகூட அப்பப்ப அலறிட்டு எழுந்தேன். லண்டன் போகணும், யுஎஸ்போய் நியூரோ பண்ணணும்னு இருந்த என் ஆசையை எல்லாம் என் நினைப்புலேர்ந்தே துடைச்சு எறிஞ்சேன். போஸ் டிங் கிடைச்சா இந்தப் பக்கம்தான் வந்து ஒர்க் பண்றதுன்னு வைராக்கியமா இருந்தேன். எல்லாருக்கும் ஆச்சரியமாகத்தான் இருந்தது. இதை மாத்திக் காட்டினாத்தான் ரணம் ஆறும்போல இருந்தது... இப்ப, மனசு நிறைவா இருக்கு. நான் எடுத்த முடிவுல எனக்கு இப்ப எந்தவித வருத்தமும் இல்லே!"

நாராயணன் திகைப்பிலிருந்து மீளாமல், அவளையே பார்த்துக் கொண்டிருந்தான்.

## – சொல்கிறார், சமயச் சொற்பொழிவாளர் சுகி.சிவம்

ஓர் அரசியல் கட்சி தொடங்கி நடத்த வேண்டும் என்பதுதான் என் கல்லூரிக் காலக் கனவாக இருந்தது. தமிழகத்தின் எந்த ஒரு கட்சியுடனும் ஒத்துப் போக முடியாத மனநிலையில் இருந்தேன். தலைவர்கள் சில சமயங்களில் சரியாகவும் பல சமயங்களில் தவறாகவும் நடந்து கொள்வதாக எனக்குத் தோன்றியது. யாரையும் என் தலைவராக ஏற்க மறுத்த மனத்துக்குத் 'தனிக்கட்சி' ஆசைதான் உகந்ததாக இருந்தது.

அப்போது சட்டக் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தேன். படிப்பு முடிந்ததும் கட்சி தொடங்குவதுதான் என் திட்டம். அதற்கு முன்னோட்டமாக, கல்லூரியிலேயே 'Non Political Students movement' என்றொரு இயக்கம் தொடங்கினேன்.

கல்லூரித் தேர்தலில் இவ்வியக்கம் சார்பில் ஒரு மாணவனையும் நிற்க வைத்தோம். வலுமிக்க கட்சிப் பின்னணிகளுடன் தேர்தலில் நின்ற மாணவர்களை ஓரம் கட்டி என் இயக்கத்தைச் சேர்ந்த மாணவனே ஜெயிப்பான் என்கிற அளவுக்கு இயக்கம் வலுப்பெற்றிருந்தது. மாணவர்களின் ஒட்டுமொத்த ஆதரவும் எனக்கிருந்தது.

ஆனால், தேர்தல் நாளன்று வேட்பாளராக நின்ற மாணவன் சில பெண்களுடன் ஊர் சுற்றப் போய் விட்டான்!

அவன் ஒருத்தனின் நடவடிக்கையால் இயக்கத்துக்கே தலைகுனிவு ஏற்பட்டதை என் வாழ்நாள் முழுவதும் மறக்க முடியாது.

அப்போதுதான் முடிவு செய்தேன், கட்சி வேண்டாம் என்று. ஒரு கட்சி என்று தொடங்கினால் பலர் செய்கிற தவறுக்கு நாம் பொறுப்பேற்க வேண்டி வரும். தவிர, கூட்டம் சேர்ப்பதிலான நடைமுறைச் சிக்கல்கள் என் இயல்புக்கு ஒவ்வாதவை என்று நினைத்தேன்.

என்ன செய்வது? தனிமனிதனாகத்தான் செயல்பட வேண்டும். ஆனால் நானே ஓர் இயக்கமாகவும் மாற வேண்டும். அதற்கென்ன வழி? சமயச் சொற்பொழிவு





மேடையைத் தவிர வேறெதுவும் எனக்கு உகந்ததாகத் தோன்றவில்லை. வாரியார் ஞாபகம் வந்தது. வாரியார் ஒரு தனி மனிதர்தான். ஆனால் அவரே ஓர் இயக்கம் போலவும் செயல்பட்டுக் கொண்டிருந்ததைக் கண்டேன். அந்தக் கணம் முடிவெடுத்தேன்.

பள்ளி நாட்களில் எனக்குத் தமிழாசிரியராக இருந்து, இலக்கிய ஆர்வமூட்டிய திரு. சிதம்பரம் சுவாமிநாதன் ஒரு சமயச் சொற்பொழிவாளராகவும் இருந்நது, என் முடிவுக்கு ஒரு காரணமாயிருக்கலாம்.

எப்போதும் உயர்ந்த விஷயங்களைச் சிந்திப்பது; தன்னைப் பற்றியும் தான் சார்ந்திருக்கும் துறையைப் பற்றியும் உயர்ந்த அபிப்பிராயம் கொள்வது – இவையே இளமையிலிருந்து என் இயல்பாக இருந்து வந்திருக்கிறது. உயர்ந்த விஷய்ங்களைப் பற்றி நாம் தொடர்ந்து சிந்தித்தால், அத்தகைய விஷயங்களே நம்மை ஈர்க்கும் என்பது நித்ர்சனம். இதுவும் நான் ஒரு சமயச் சொற்பொழிவாளனாக வேண்டும் என்று முடிவெடுத்ததற்குக் காரணமாயிருந்திருக்கலாம்.

சட்டம் படித்து முடித்து விடுவது; ஆனால் சட்டத் தொழில் செய்வதில்லை. மாறாக சமயப் பணிதான் நமக்கு உகந்தது என்று தீர்மானித்துக் கொண்டேன்.

# ஜெயித்த கதை!

நிறைய படிக்க ஆரம்பித்தேன். அனைத்துச் சொற்பொழிவாளர்களின் பேச்சுகளையும் தவறாமல் கேட்கத் தொடங்கினேன். கல்லூரிப் பேச்சுப் போட்டிகளில் கலந்து கொள்ள ஆரம்பித்தேன்.

இந்தக் காலத்தில்தான் அவ்வை நடராஜன் அவர்களின் அறிமுகமும் நெருக்கமும் எனக்குக் கிடைத்தது. அவரது கூட்டங்களுக்குச் சென்று கேட்பது மட்டுமல்லாமல், ஓய்வு நேரங்களில் அவர் வீட்டுக்கும் போக ஆரம்பித்தேன்.

திரு. அவ்வை நடராஜன் இலக்கிய மேடைகளில் தன்னிகரற்ற பேச்சாளராக விளங்கினார். பட்டிமன்றங்கள் மூலம் மாநிலத்தின் மூலை முடுக்குகளிலெல்லாம் அறிமுகமாகி

யிருந்தார்.

அவர் வீட்டுக்கு நான் போக ஆரம்பித்தபோது புதுவிதமான அனுபவம் ஒன்று எனக்குக் கிடைத்தது.

பேச்சாளர்கள் பலர் வாய்ப்புக் கேட்டு அவருக்கு அடிக்கடி கடிதமெழுதுவார்கள். அவ்வை, அக்கடிதங்களைப் படித்து இலேசாகச் சிரிப்பார். அந்தச் சிரிப்பில் கிண்டல் கலந்திருக்கும்.

இது என்னை நிலைகுலையச் செய்வதாயிருந்தது. நான் ஒரு முடிவு செய்தேன்.

நமக்கான அங்கீகாரம் கட்டாயம் வரும். தாமதமாக வருமோ? அதனாலென்ன? தாமதமாக வந்தாலும் நிலைத்து நிற்கும். ஆனால் வாய்ப்புக் கேட்டு யாருக்கும் கடிதம் மட்டும் எழுதி விடக் கூடாது என்று முடிவு செய்து கொண்டேன்.

ஏதோ ஒரு கதையில் நா. பார்த்தசாரதி எழுதுவார்: 'மாலைக்காகக் கூட அவன் தலையைக் குனிய மாட்டான்'

இந்த கம்பீரம் என்னுடையதாக வேண்டும் என்று விரும்பி ஏற்றுக் கொண்டேன்.

இதெல்லாம் எப்போது? படித்துக் கொண்டிருந்த காலத்திலேயே. சொற்பொழிவுத் துறையினுள் காலெடுத்து வைப்பதற்கு முன்பே எனக்காக விதிமுறைகளை வகுத்துக் கொண்டேன்.

இன்று வரை இதைக் கடைபிடிக்கிறேன்.

இதனாலெல்லாம் என்னை ஆணவமிருந்தவன் என்று சிலர் சொல்வார்கள். கூர்ந்து கவனித்தால், இது ஆணவமல்ல என்பது புரியும். என் மீதும் நான் மேற்கொண்ட பணியின் மீதும் எனக்கிருந்த உயர்ந்த அபிப்பிராயமே என்னை வழி நடத்திச் சென்றிருக்கிறது; உயர்த்தி வந்திருக்கிறது.

தமிழகத்திலுள்ள மடாதிபதிகளுக்கொரு கூட்டமைப்பு இருந்தது. குன்றக்குடி அடிகளார் அதற்குத் தலைவராக இருந்தார். அந்தக் கூட்டமைப்புக்கு ஓர் இளைஞர் பிரிவு அமைக்க வேண்டும் என்று விரும்பினார், அடிகளார்.

சொற்பொழிவு, இலக்கியம், கலையார்வமுள்ள கல்லூரி மாணவர்களை அழைத்தார்.

சட்டக் கல்லூரியிலிருந்து நான் போயிருந்தேன். அனைவரும் கூடி விவாதித்தோம். என்ன செய்யலாம், எப்படிச் செய்யலாம் என்று ஆராய்ந்தோம்.

விவாதம் முடிந்ததும் அடிகளார், "இது வரை விவாதித்த விஷயங்களைச் சுருக்கமாகத் தொகுத்து யாராவது பேச முடியுமா?" என்று கேட்டார்.

நான் எழுந்தேன். அதுவரை விவாதித்தவற்றைச் சுருக்கமாக விளக்கி விட்டு, "இது வரை என்ன செய்தோம் என்று சொன்னேன். இனி என்ன செய்ய வேண்டும் என்று கூறுகிறேன்'' என்று ஆரம்பித்தது தான் தாமதம்.

அடிகளார் அசந்து போய்ப் பார்த்தார்.

கூட்டம் முடிந்ததும் அனைவரையும் அனுப்பி விட்டு, "நீ இரு. இந்த அமைப்பை நீ முன்னின்று நடத்துகிறாயா?'' என்று கேட்டார்.

ஒப்புக் கொண்டேன். அமைப்புக்கு 'இந்து இளைஞர் பேரவை' என்று பெயர் வைக்கலாம் என்று சொன்னேன்.

அவருக்கு அதில் விருப்பமில்லை. 'இந்து' வரவேண்டாம் என்று அவர் நினைத்தார்.

ஆனால் நான் உறுதியாக நின்று வாதாடினேன்.

"இந்து என்பது மதக் குறியீடல்ல. அது நாடு தழுவிய ஓர் அடையாளம். இதுதான் சரியான பெயராக இருக்க முடியும்!" என்று வாதிட்டு அவரை ஒப்புக் கொள்ளச் செய்தேன்.

முதல் சந்திப்பு. மிகப் பெரிய சிந்தனாவாதியுடன் வாதிட்டு, என் கருத்தை அவர் ஏற்கும்படிச் செய்து விட்டதில் அடிகளாருடன் மேலும் நெருக்கமாக முடிந்தது.

குன்றக்குடி அடிகளார் போலொரு சிந்தனாவாதி மலர்வது வெகு அபூர்வம். எந்த விஷயத்தை எப்படிச் சிந்திப்பது என்பதை அவரிடம்தான் கற்றேன். அவர் அதிகம்



''நீ பொய் சொல்கிறாயாமே.''

''ஆமாங்க சார்!''

''பொய் சொன்னால் உன்னை என்ன செய்வேன் தெரியுமா?''

''தெரியும் சார்! சேல்ஸ்மேன் வேலை காலியாக இருக்கிறதே. அதில் என்னை அமர்த்திவிடுவீர்கள்!''

– 'சிரியுங்கள்' நூலிலிருந்து மலர்சூர்யா



''மாப்பிள்ளை ரொம்ப மாடர்ன்னா!''

''எப்படி கண்டு பிடிச்சீங்க...?''

''காசி யாத்திரையில் குடைக்குப் பதில் ரெயின்கோட்டு போட்டுட்டு போனாரே..''

– இரா. திலீப்

படிக்க மாட்டார். ஆனால் ஏராளமாகச் சிந்திப்பார்.

ஒரு புத்தகத்தை வாங்கினாரென்றால் அதன் ஒவ்வொரு பக்கத்தின் அருகிலும் வெற்றுத்தாள் ஒன்றை இணைத்துப் புதிதாக பைண்டு செய்து விட்டுத்தான் படிக்க ஆரம்பிப்பார்.

எதற்காக அந்த இணைப்புத் தாள்?

படிக்கும்போதே தமக்குத் தோன்றும் கருத்துகளை அதில் எழுதிக் கொண்டே வருவதற்கு! எதிலும் புதுமை; எல்லாவற்றிலும் தனித்துவம் என்பதே அவரது சித்தாந்தமாயிருந்தது.

அவருடன் பழக ஆரம்பித்தபோது இது எனக்கு இனிய அதிர்ச்சியாகவும், வியப்புக்குரியதாகவும் இருந்தது. என் வாழ்வில் அவரைச் சந்தித்ததை ஒரு மைல் கல்லாகக் கொண்டால், அங்கிருந்துதான் என் பயணம் தொடங்கியது.

பட்டிமன்றங்களில் பேச ஆரம்பித்திருந்தேன். அடிகளாரைப் போலவே திரு.கி.வா. ஜகந்நாதனின் அறிமுகமும் நெருக்கமும் அப்போது கிடைத்தது.

இருவருடனும் சமகாலத்தில் பழகிய போது அடிப்படையில் இருவருக்குமிருந்த வேறுபாடு உடனே புரிந்தது.

அடிகளார், எந்த ஒரு விஷயத்தை எடுத்தாலும் அதன் மூலம் சமுதாயத்துக்கு என்ன உபயோகம் என்கிற ரீதியிலேயே ஆராய்ந்து பேச ஆரம்பிப்பார்.

கி.வா.ஜவோ முற்றிலும் மாறுபட்டவராக, இலக்கியங்களிலும் இதர விஷயங்களிலுமுள்ள அழகியலை மட்டுமே பிரதானமாக நோக்குவார்.

கம்பராமாயணத்தை இருவரும் பேசினார்களென்றால், 'ராமாயணம் சமூகத்துக்குச் சொல்லும் செய்தி என்ன' என்றே அடிகளார் பேசுவார். கி.வா.ஜவோ கம்பனின் கவியுள்ளத்தில் அமிழ்ந்து, மூழ்கி மூழ்கி முத்தெடுப்பார்; நயங்கள் சொல்வார்.

இந்த இரண்டு ஜாம்பவான்களுடனேயே பெரும்பாலான நேரங்களைக் கழிக்க ஆரம்பித்தாலும் என் தனித்துவத்தை இழந்துவிடக் கூடாது என்பதில் எச்சரிக்கையாக இருந்தேன்.

எது என் தனித்துவம்? முன்னதாக நான் அதனைத் தீர்மானித்திருந்தேன்.

கிவாஜவின் இலக்கிய அழுத்தம். அடிகளாரின் சமூகப் பார்வை. இரண்டுக்கும் மேலாக நகைச்சுவை உணர்ச்சி. இப்படிக் கலந்து, பயிற்சி செய்து எனக்கான பாணியை உருவாக்கிக் கொள்வதில் மும்முரமாயிருந்தேன்.

பெங்களூரில் ஒரு பட்டிமன்றம். அடிகளார் தலைமை. ராமாயணம்தான் விஷயம். (தலைப்பு மறந்து விட்டது.)

நான் ஓரணிக்குத் தலைமைப் பொறுப்பேற்றிருந்தேன். எதிரணியில் ஒரு பேச்சாளர், பேச்சு சுவாரசியத்தில் சீதையைப் பற்றித் தரக்குறைவாகப் பேசிக் கொண்டு போனார்.

எனக்கு மிகவும் அதிர்ச்சியாகவும் பதற்றமாகவும் இருந்தது.

அடிகளாரிடம், ''என்ன இப்படிப் பேசுகிறார்? நீங்கள் தக்க பதில் தர வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டேன்.

அந்தப் பேச்சாளரின் கீழ்த்தரமான உரை அதிர்ச்சியளித்ததென்றால், அடிகளார் அதனைக் கண்டுகொள்ளாமல் விட்டது பேரதிர்ச்சியாக இருந்தது. தவிரவும், அவரது பேச்சை ஊக்குவிக்கும்விதமாக அமைந்து விட்டது, அடிகளாரின் பேச்சு.

அந்தக்கணம், என் வாழ்வின் மிக முக்கியமானதொரு முடிவை எடுத்தேன். இனி பட்டிமன்றங்களில் பேசுவதில்லை. நடுவராக இருக்கலாமே தவிர, அணியில் நின்று பேசுவதில்லை.

வாய்ப்புக்காகப் பலர் முண்டியடித்துக் கொண்டிருந்த காலகட்டம் அது. 'பேச்சு தான் நம் தொழில்' என்று படித்த சட்டப் படிப்பை உதறி விட்டு, நான் மேடைக்கு வந்த ஆரம்பக் கால கட்டமும் கூட! முப்பது வயதுதான் எனக்கு அப்போது.

கண்டிப்பாக அது புத்திசாலித்தனமான முடிவு அல்ல என்பதை நான் அறிவேன்.

மேடைப் பேச்சில் என் எதிர்காலமே இருண்டு போயிருக்கக்கூடும்தான். ஆனாலும் நான் உறுதியாக இருந்தேன்.

என்னை விட, அந்தப் பேச்சாளரை விட, அடிகளாரை விடவும் சிதை முக்கியம். பேச்சு சுவாரசியத்துக்காக உயர்ந்ததொரு தத்துவத்தை இழிவுபடுத்தலாமோ?

நான் விரும்பி ஏற்றுக் கொண்ட துறையின்பால் எனக்கிருந்த உயர்ந்த அபிப்பிராயமே என்னை அப்படியொரு முடிவெடுக்கச் செய்தது. அன்றைக்கு நான் சமரசமாகிப் போயிருந்தால் இன்று வரை தலைகுனிந்தே வாழ்ந்திருக்க வேண்டும் என்று நம்புகிறேன்.

இன்னொரு சம்பவம். கோவையில் ஒரு கண் மருத்துவமனை திறப்பு விழா. 'திருவாசகத் தேன்' என்கிற தலைப்பில் என்னைப் பேசக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். நிகழ்ச்சியைத் தலைமையேற்று நடத்தி ஆசி வழங்க வந்திருந்தவர், காஞ்சி மடப் பீடாதிபதி ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள்.

எனக்கு முன்னதாக மூன்று பேர் கருத்தேயில்லாமல் முக்கால் மணி நேரத்துக்கும் மேல் பேசி, கூட்டத்தினரின் பொறுமையைச் சோதித்து விட, அடுத்து நான் பேச இருந்தேன்.

எதிர்பாராவிதமாக, தாம் அவசரமாக வேறொரு இடம் செல்ல வேண்டுமென்றும் எனக்கு முன்னதாகப் பேசி விடுவதாகவும் சொன்னார், ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள்.

அவர் ஆசியுரை வழங்கி விட, கூட்டத்தில் சலசலப்பு எழ ஆரம்பித்து விட்டது.

முக்கியப் பிரமுகர் பேசிவிட்டால், பிறகு யாரும் மேற்கொண்டு பேச்சுக் கேட்க இருக்க மாட்டார்கள்.

சுவாமிகள் பேசி முடித்து இறங்கியதும் என்னைப் பேசச் சொன்னார்கள், அமைப்பாளர்கள். நான் மறுத்து விட்டேன். திட்டத்தில் மாறுதல் பற்றி முன்பே அறிவிக்காதது மட்டுமின்றி, சுவாமிகளுக்குப் பின் நான் பேச வந்து வெறும் மைதானத்துக்கா பேசுவது?

முடியவே முடியாது என்று நான் மறுத்தும் கேளாமல் மைக்கில், "சுகிசிவம் பேசுவார்" என்று அறிவித்து விட்டார்கள்.

வேறுவழியில்லாத இக்கட்டு சூழ, நான் எழுந்து சென்றேன். மைக் முன்னால் நான் பேச நிற்கிறேன். ஆனால் கூட்டம் கலைய ஆரம்பிக்க, சலசலப்பும் பேச்சும் கூக்குரலும் எழ, சட்டென்று நான் ஒரு முடிவெடுத்தேன். கடுமையான முடிவுதான். ஆனாலும் அது அவசியம்தான் என்று நம்பினேன்.

மைக் முன் சென்று அதட்டும் தொனியில், "மரியாதையா உட்காருங்க" என்றேன்.

கூட்டத்துக்கு வாயடைத்து விட்டது. நான் தொடர்ந்து பேசினேன் : "சுவாமிகளுக்கு மரியாதை காட்டினீர்கள். திருவாசகம் அவரை விட உயர்ந்தது. அதன் மேல் மரியாதை உள்ளவர்கள் உட்காருங்கள். இல்லாதவர்கள் அமைதியாக எழுந்து போங்கள்!" என்று எச்சரித்தேன்.

இப்படியொரு சொல்லை எதிர்பாராத கூட்டம் வியந்து அமர்ந்தது. நான் திரும்பிப் பார்த்தேன். கிளம்பிக் கொண்டிருந்த சுவாமிகளும் அமர்ந்து விட்டிருந்தார். அரை மணி நேரம் அமர்ந்து பேச்சைக் கேட்டு விட்டுத்தான் அவர் கிளம்பினார்.

இப்போதும் சொல்கிறேன். இது ஆணவமல்ல! என் பணியின் மீது நான் கொண்டிருந்த உயர்ந்த அபிப்பிராயத்தின் வெளிப்பாடே அது! தனிமனிதர்களை விட பாரம்பரியமான தர்மம் உயர்ந்ததல்லவா?

முழு நேரப் பேச்சாளனாகிச் செயல்படத் தொடங்கிய ஆரம்பக் காலம் அது. வினோதமான ஒரு மன நெருக்கடிக்கு ஆளாகியிருந்தேன்.

பல கூட்டங்களில் அடுத்தடுத்துப் பேசும்போது, சொன்ன விஷயத்தையே திரும்பத் திரும்பச் சொல்கிறோமோ என்கிற சந்தேகம் உண்டாயிற்று. சந்தேகம் வந்ததும் என்னையே நான் கூர்ந்து கவனிக்க ஆரம்பித்தேன். ஆம்! உண்மைதான். ராமாயணம் என்றால் ஒரே கதைதான். ஓரிடத்தில் சொன்னதைத்தான் அடுத்த இடத்திலும்



"நம்ம கட்சிக்கு ஒரு நல்ல கொள்கை பரப்புச் செயலாளரைத் தேர்ந்தெடுக்கணும்..."

"முதல்ல ஒரு நல்ல கொள்கையை தேர்ந்தெடுங்க. அப்புறமா அதுக்கு செயலாளரை தேர்ந்தெடுப்பது பற்றி யோசிக்கலாம்!"

– சூரம்பட்டி சத்யா முருகவேல்

"நீங்க எழுதிக்கிட்டு வர மர்மக் கதையோட முக்கியமான சஸ்பென்ஸ் என்னன்னு எனக்குத் தெரியும்!"

"என்ன சொல்றீங்க?"

"கதையோட மூலம் கன்னடம் தானே?"

– யமுனா ரெங்கநாதன்



சொல்லியாக வேண்டும். ஆனால் எனக்கிது அலுப்புத் தருவதாகவும் புதிதாக ஏதாவது செய்தாக வேண்டுமோ என்கிற பரபரப்பை உண்டுபண்ணுவதாகவும் இருந்தது.

கி.வா.ஜ சொல்வார் : "ஒருநாளைக்கு ஒரு செய்யுள் மனப்பாடம் செய். ஐந்து பக்கங்கள் எழுதிப் பார்."

இந்த 'எழுதிப் பார்' என்ற கட்டளைக்குள் ஒரு சூட்சுமம் இருக்கிறது.

ஒரு விஷயத்தைப் பேசுவதை விட எழுதிப் பார்த்தால் நம் சரக்கு என்ன என்பது புரிந்து விடும். எழுதும்போது நீட்டி முழக்க முடியாது. சுற்றி வளைத்துக் கொண்டிருக்க முடியாது. நேரடியாக, பட்டவர்த்தனமாக ஒரு கருத்தை எழுதிப் பார்த்து விட்டால், 'அடுத்தது?' என்று தானாகக் கை போய் நின்று விடும். அப்போது எழுத ஒன்றும் தோன்றாவிட்டால், நம் லட்சணம் புரிந்து விடும்.

இந்தப் பயிற்சியை நான் விடாமல் செய்து வந்தேன். நிறையப் பேரின் பேச்சுகளைக் கேட்பது, படிப்பது என்று ஞான விருத்திக்கான வழிகளைத் தேடிக் கொண்டாலும், 'கூறியது கூறல்' பற்றிய தயக்கம் இருந்து கொண்டே இருந்தது.

ஒருநாள் என் தந்தையிடம் இதை வெளிப்படுத்தியபோது , பளிச்சென்று தெளிவு உண்டாகும்விதமாக ஒரு கருத்தைச் சொன்னார்.

"மேடைப் பேச்சு என்பது என்ன? ஒரு கலை. திரும்பத் திரும்பச் செய்வதன் மூலம்தான் கலை மெருகேறும். நீ புத்திக்குப் பேசாதே. மனசுக்குப் பேசு. சந்தோஷமாயிருக்கும்."

ஏதோ கதவு திறந்தாற்போலிருந்தது எனக்கு.

அன்றிலிருந்து 'மனசு'க்குத்தான் பேசி வருகிறேன்.

ஒரு கூட்டத்தைக் கண்டதும் இரண்டு விஷயங்களைத் தீர்மானித்துக் கொண்டு விடுவேன்.

இந்தப் பேச்சு இவர்களுக்குப் பயன்படுமா? இது இவர்களைப் போய்ச் சேருமா?

இவற்றைத் தீர்மானித்துக் கொண்ட பிறகே பேச ஆரம்பிப்பது. பேச ஆரம்பித்து விட்டால், 'கூட்டம்' என்பது மறந்து விடும். தனித்தனியே ஒவ்வொருவருடனும் பேசுவது போன்ற உணர்வு வந்தால்தான் பேச்சு வெற்றி என்பது என் தீர்மானம்.

தவிர எங்கே, என்ன பேசுகிறோம் என்பதும் முக்கியம். ஹைஸ்கூலுக்குப் பேசப் போய், "ஆன்மா" என்று தொடங்கினால், ஒரு பேச்சாளரின் தோல்வி அந்த இடத்தில் தொடங்குகிறது என்பேன்.

மிகவும் கஷ்டமான துறை இது. இதில் வெற்றி தோல்வியை நிர்ணயிப்பதற்கே குறைந்தது ஐந்தாண்டுகள் ஆகும். அதுவரை பலர் தாக்குப்பிடிப்பதே கூட இல்லை. வேறொரு தொழிலைப் பிரதானமாகவும் மேடைப் பேச்சை மாலை வேளைக்கெனவும் வைத்துக் கொள்கிற யாரும் இதில் வெற்றிகாண முடியாது. இதில் மட்டுமென்றில்லை. எந்தக் கலையுமே 'பார்ட் டைம்' சமாசாரமாக முடியாது; ஒரு போதும்.

'நான் தோற்க மாட்டேன்' என்று முடிவு செய்து விட்ட பின்பே, சொற்பொழிவுத் துறைக்குள் காலெடுத்து வைத்தேன்.

ஏனென்றால் இந்த 'விஷயம்' தோற்காது. தலையில் விளக்கேந்தி, நம் பொக்கிஷமான சமயச் செல்வங்களைச் சுமந்து சென்று மக்களிடையே சேர்க்கும் பணி இது.

சமயமென்பது உயர்ந்த விஷயங்களின் சங்கமமல்லவா? உயர்ந்த விஷயங்கள் எப்போதேனும் தோற்பதுண்டா?

ஆகவே நானும் தோற்க மாட்டேன் என்று உறுதியாக நம்பினேன். வெற்றிக்கு – வேறெதையும் விட இந்த நம்பிக்கை மிக அவசியம். இது இருந்தால் போதும்; எதுவும் சுலபம்தான்!

சந்திப்பு : **ஔரங்கசீப்**
படங்கள் : **ஸ்ரீஹரி**

# நீங்கள் கேட்டவை — தராசு

● **பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி.**

*? 'ஜெ பாரதி கண்ட புதுமைப் பெண்' என்று பா.ஜ.க. துணைத் தலைவர் மைத்ரேயன் புகழாரம் சூட்டியுள்ளது பற்றி...?*

! அப்படியா! புதுமைப் பெண்தான்; ஆனால் மைத்ரேயன் கண்ட புதுமைப் பெண்!

● **ஜெ. ரஜினி ராம்கி, புனே.**

*? மூன்றாவது அணியில் லீடர்கள் இல்லை; டீலர்கள்தான் உண்டு என்கிறாரே சந்திரசேகர்?*

! முதல் இரு அணிகளில் மட்டும் என்ன வாழ்ந்ததாம்!

● **த. சத்தியநாராயணன், சென்னை – 23.**

*? தமிழக எம்.பிக்களின் எண்ணிக்கை குறைக்கப்பட முயற்சி நடக்கிறதாமே...?*

! 'அப்படியெல்லாம் ஒன்றும் நடக்காது. கு.க. அமலாக்கத்தில் திறம்படச் செயல்பட்டதற்காகத் தமிழகம் பழிவாங்கப்படாது...' என்று பிரதமர் தமக்கு உறுதிமொழி அளித்து விட்டதாக வைகோ முதல்வரை முந்திக்கொண்டு அறிக்கை விட்டிருக்கிறாரே...?

● **ஏ. சுகுமார், காட்டுக்கானூர்.**

*? வாஜ்பாய் இலங்கைக்குப் 'படகுப் பயணம்' செய்து இலங்கைப் பிரச்னையைத் தீர்க்க வேண்டுமென்று பண்ருட்டி ராமச்சந்திரன் கூறியிருப்பது பற்றி...?*

! கிண்டலா!? பஸ் பயணம் போன இரண்டாம் நாளே ஷெரீஃப் மீண்டும் மிரட்ட ஆரம்பித்து விட்டார். இனி ஊசி முனை அளவு கூட நிலம் தரமாட்டோம் என இந்தியப் பிரதமரும் பதிலடி கொடுக்க... ஸ்ரீலங்கா அரசுடன் உள்ள சுமுக நல்லுறவாவது நீடிக்கட்டும் ஐயா!

● **சுகந்தி நாகராஜன், தேவூர்.**

*? மின் பம்பு வைத்து விவசாயம் செய்பவர்கள் யாரும் ஏழைகள் அல்ல... அப்படியிருக்கும்போது, அவர்களுக்கு ஏன் இலவச மின்சாரம்? விவசாயமும் ஒரு தொழில்தானே?*

! விவசாயத்துக்குத் தண்ணீர்தான் மூலப் பொருள். அதை ஒருசிலர் ஏரி, குளம் ஆறுகளிலிருந்து இலவசமாகப் பெறுவார்கள். ஒருசிலர் இருபதடி ஆழக் கிணற்றிலிருந்து எடுப்பார்கள். சிலர் எண்பது அல்லது நூறடி ஆழக் கிணற்றிலிருந்தும் எடுப்பார்கள். தண்ணீரை இலவசமாகப் பெற்றாலும், வெகு ஆழத்திலிருந்து நிறைய செலவு செய்து பெற்றாலும், அதனால் விளைகிற பொருளின் விலையை அவரவர்க்குத் தகுந்த மாதிரி விவசாயிகள் நிர்ணயித்து விட முடியாது. தங்கள் உற்பத்திப் பொருள்களின் விலையை நிர்ணயம் செய்யும் முதலாளிகள் அல்ல விவசாயிகள். எனவே, இலவசம் இல்லாவிட்டாலும் சலுகை காட்டுவதில் தப்பில்லை.



• பிழுங்கிய....



• ஆந்திர....



• பொறுப்பு!



• ....அர் பணிப்பு!



• புதுக் கனவு

● **க. நா. இராஜேஸ்வரன், மொரட்டுப் பாளையம்.**

*? நாராயண தீர்த்தரைப் பற்றிக் கொஞ்சம் சொல்லுங்களேன்?*

! ஆந்திராவிலிருந்து தமிழகத்துக்கு வந்து கண்ணனைப் பாடிய பக்தர். 'தரங்கம்' என்ற ஓசை நயம் மிக்க பாடல்களைப் பாடினார். பக்தி ரசமும் அழகும் மிக்க பாடல்கள். துறவு மேற்கொண்ட தீர்த்தருக்கு அவர் சமாதி அடைந்த திருப்பூந்துருத்தியில் ஆண்டுதோறும் விமரிசையாக ஆராதனை நடத்துகிறார்கள். சமீபத்திய ஆராதனையை இல. கணேசன் தொடங்கி வைத்தார். 'தீர்த்தரும் தியாகய்யரும், ஆந்திரம் தமிழகத்துக்குத் தந்த இரு கவிகள்; காவிரியின் இரு மருங்கிலும் வசித்தவர்கள்; ஒருவர் ராமனைப் பாடினார் மற்றவர் கிருஷ்ணனை...' என்று நினைவூட்டினார் கணேசன்.



• முகங்கோணியவர்



• நகைச்சுவையுணர்வு!

● ச. கல்யாணசுந்தரம்,
திருச்சி – 13.

? பா.ஜ.க.வின் செல்வாக்கு குறைந்து வருகிறதா...?

! ஒரு பக்கம் பஜ்ரங் தள் முதலான அமைப்புகளின் மிரட்டல்; மறுபக்கம் கூட்டணிக் கட்சிகளின் மிரட்டல்; மூன்றாவது நிக்கில் உட்கட்சிப் பூசல் – லேட்டஸ்டாக, மனிதவள மேம்பாட்டுத் துறை அமைச்சரும் இணை அமைச்சரும் சண்டை போட, மொத்தப் பொறுப்பும் இப்போது உமா பாரதி கையில். கட்சியின் செல்வாக்கு என்பது தலைவர்களின் செல்வாக்கையொட்டித்தான் இருக்கும். பா.ஜ.க. தலைவர்களிடையே ஒருமித்த பார்வை இல்லை. அதனால் செல்வாக்கிலும் சரிவுதான்.

● எம். அசோக் ராஜா,
அரவக்குறிச்சிப்பட்டி.

? வாழப்பாடிக்குக் குடலெல்லாம் பல், குருதியெல்லாம் விஷம் என்கிறாரே காளிமுத்து...?

'ஜெ'வுக்கு கோர்ட்டெல்லாம் கேஸ் என்று வாழப்பாடியினர் சொல்ல, ஒரே குழாயடிச் சண்டைதான்!

● மு. அப்துலஜீஸ், வானூர். ❑

? இரயில்வே பிளாட்ஃபாரங்களில் சிகரெட் விற்கத் தடையாமே?

! மறைவாக வைத்து ரகசியமாக அதிக விலைக்கு விற்காமல் காக்க வேண்டும். அதைவிட முக்கியம், ரயில் பயணத்தின் போது 'smoking compartment' என்று ஒரு பெட்டியை ஒதுக்கி, மற்றவற்றில் தடைசெய்து, அதை அமுல்படுத்த டிக்கெட் பரிசோதகருக்கு முழு அதிகாரமும் வழங்க வேண்டும்.

● நீ.சு. பத்மநாபன், நீடாமங்கலம்.

? பீஹாரில் அரசியல் சட்டப் பிரிவு 356 அமுல்படுத்திய விவகாரம் சோனியாவைக் குழப்பத்தில் ஆழ்த்தியிருக்கிறதே...?

! குழப்பத்திலும் குழப்பம், சூப்பர் குழப்பம்! முதலில் பீஹாரில் ஆன ராப்ரி அரசுக்குத் தார்மிக உரிமை இல்லை என்றார்; பிறகு ஆட்சி மாற்றம் தேவையில்லை, முதல்வர் மாறினால் போதும் என்றார்; இப்போது, 'யார் முதல்வராயிருந்தால் என்ன, சிறுபான்மையினர் நலன் காக்கப்பட்டால் சரி' என்கிறார்! நாளொரு பேச்சு, பொழுதொரு மாற்றம்!

● டி. அழகர்சாமி,
மதுரை – 1.

? 'என்னிடம் உறுதி அளித்தபடி ரயில்வே பட்ஜெட் இல்லை' என வருத்தப்படுகிறாரே ஜெயலலிதா?

! தாம் சொன்னபடி FERA வைத் திருத்தவில்லை என்பது அடுத்த வருத்தமாகி விடும்!

● ஆர். இராமசாமி,
ஸ்ரீவில்லிபுத்தூர்.

? பீஹார் ஆட்சிக் கலைப்புத் தீர்மானம் பாராளுமன்றத்தில் நிறைவேறியதைப் பற்றி...?

! எங்கே நிறைவேறியதாம்...? ராஜ்ய சபாவில் மூக்குடைப்பு என்பதால் வாபஸாகி விடப் போகிறதே!

# பிரதமர் இலங்கைக்குப் பஸ் பயணம் போனால்?

● கே. ஆர். ரவீந்திரன்,
சென்னை – 1.

? மத்திய அரசின் இந்த பட்ஜெட், ஏழை பணக்காரன் வேறுபாட்டைக் குறைக்கும் என வாஜ்பாய் கூறியுள்ளாரே...?

! இத்தனை இக்கட்டான நிலையிலும் வாஜ்பாய் ஜோக் அடிக்கிறாரே! ஆச்சர்யம்தான்!

● எஸ். முரளி,
குறிஞ்சிப்பாடி.

? இந்தத் தடவை மத்திய பட்ஜெட் பகலிலேயே தாக்கல் செய்யப்பட்டதே?

! பகல் கொள்ளையானால் என்ன, இரவில் நடக்கும் கொள்ளையானால் என்ன...? கொள்ளை கொள்ளைதான்! ❍

மேஜை மீது அடுக்கி வைக்கப் பட்டிருந்த கோப்புகளில் இருந்து ஒரு கோப்பை உருவி எடுத்தேன். முதலாளியின் வங்கிக் கணக்குக் கோப்பு அது. நான் கோப்பைப் புரட்டியபோது எதிரில் வந்து நின்றான் சந்தானம்.

''என்ன சந்தானம்? லீவ் வேணுமா? எத்தனை நாளைக்கு?''

"லீவ் கேட்க மட்டும்தான் உங்களைப் பார்க்க வரணுமா?"

"வேறு எதற்கும் வர மாட்டாயே?"

"சம்பளத்தில் முன் பணமா முந்நூறு ரூபாய் வேணும். ஆபீஸில் எல்லாரிடமும் கடன் வாங்கியாச்சு. முதலாளியை விட்டால் வேறு வழி தெரியலை. நீங்க சொன்னால் முதலாளி கேட்பார்'' என்றான் சந்தானம். முகத்தைப் பரிதாப மாக வைத்துக் கொண்டு என்னைப் பார்த் தான்.

அவன் பார்த்த பார்வையில் முதலாளி யிடம் கேட்டு விடுவது என்று முடிவு செய்தேன். முதலாளி வரும் நேரத்தை எதிர்பார்த்துக் காத்திருந்தேன்.

சரியான நேரத்தில் அலுவலகத்திற்குள் நுழைந்தார் முதலாளி.

அவருக்குப் பின்னே வந்த முதலாளியின் கார் ஓட்டுநர், முதலாளியின் சூட்கேஸ், சாப்பாட்டுக் கூடையை அவர் அறைக்குள் வைத்து விட்டு என் மேஜையின் முன்வந்து நின்றான்.

"என்ன வரதன்?"

"ஸார் வருகிற வழியில் ரேடியேட்டரில் இருந்த தண்ணீரெல்லாம் லீக்காகிக் கொட்டிப் போச்சு. ரேடியேட்டரில் எங்கோ ஓட்டை விழுந்து இருக்கு. சரிசெய்யணும். இல்லையென்றால் சாயந் திரம் வீட்டுக்குக் காரில் போவது கஷ்டம்.''

"முதலாளிக்கு இந்த விஷ யம் தெரியுமா?''

"தெரியாது. தெரிந்தால் சத்தம் போடு வார்!"

"ஏன்?''

"இந்த மாதம் முதல் வாரத்தில்தான் முழுசா மூவாயிரம் ரூபாய் காருக்குச் செலவழிச்சேன். இப்ப இந்தச் செலவு வேறா? என்று சத்தம் போடுவார்!''

''அதற்கு நான் என்ன செய்யணும் வரதன்?''

''முதலாளியோட 'மூடு' உங்களுக்கு நல்லாவே தெரியும். அவர் 'செம' மூடில் இருக்கும்போது என் விஷயத்தைச் சொல்லி காரை சரிசெய்ய ஏற்பாடு செய்துடுங்க'' என்று நம்பிக்கையுடன் சென்றான்.

தொலைபேசி அழைத்தது. எடுத் தேன். எதிர்முனையில் என் குரல் கேட்ட தும் – "முதலாளி வந்துட்டாரா?" என்ற கேள்வி வந்தது.

''வந்தாச்சுங்க. லைனை அவருக்குக் கொடுக்கட்டுமா?''

''வேண்டாம். விஷயத்தை நீங்களே சொல்லிடுங்க!''

"சொல்லுங்க!"

"வருகிற ஞாயிற்றுக்கிழமை 21-ஆம் தேதி காலை பத்து மணிக்கு நம்ம சங்க இலக்கிய விழாவில உங்க முதலாளி கலந்துக்கணும். அன்றைக்கு அவருக்கு வேறு ஏதாவது புரோகிராம் இருக்கா?''

''கொஞ்சம் இருங்க. டைரியிலே பார்த்துச் சொல்றேன்!''

என் முன்னே இருந்த டைரியைப் புரட் டினேன்.

"வேறு நிகழ்ச்சி ஏதும் நீங்க சொல்கிற நேரத்தில் இல்லைங்க!''

"நல்லதாப் போச்சு. டைரியிலே குறிச் சுக்க. விஷயத்தைச் சொல்லி நேரத்துக்கு உங்க முதலாளியை அழைச்சுட்டு வருகிற பொறுப்பு உன்னோ டது.''

''சார், நீங் களே அவரிடம் பேசிட்டா ரொம்ப நல்லாயிருக்கும்!'' என்றேன்.

எதிர் முனையில் சிரித்த ஒலிக்கு இடையே, ''உங்கிட்டே சொன்னால் அவரிடம் சொன்ன மாதிரி. உன் திறமை எனக்கு நல்லாவே தெரியும்'' என்று தொடர்பைத் துண்டித்தார்.

இண்டர்காமில் என்னை அழைத்தார், முதலாளி.

மேஜையில் இருந்த கோப்பையும், டைரியையும், குறிப்பு நோட்டையும் எடுத்துக் கொண்டு அவரது அறையை நோக்கி விரைந்தேன்.

அன்று வந்த கடிதங்களைப் பற்றி முதலில் சொன்னேன். வங்கிக் கணக்கைச் சொன்னேன். டெபாசிட் குறித்துச் சொன்னேன். வேகமாகச் சொல்லிக் கொண்டே வந்து சற்று இடைவெளி விட்டேன்.

"அப்புறம்?" என்றார். சிரித்தார். 'கேட்டு விடலாமா?' என்று யோசித்தேன்.

"சொல்லு. ஏன் தயங்கறே?"

"இல்லே ஸார். நான் அப்புறம் பேசிக்கறேன்!"

''பரவாயில்லை சொல்லு!"

"நம்ம ஆபீஸ் பியூன் சந்தானத்திற்கு முந்நூறு ரூபாய் அட்வான்ஸ் வேணுமாம்!"



''அந்தாளுக்கு இதே வேலையா போச்சு. மொத்தக் கணக்கையும் முடிச்சு வீட்டுக்கு அனுப்பு.''

"பாவம் ஸார். பிள்ளைக் குட்டிக்காரன். இப்ப கொடுக்கிற பணத்தை சம்பளத்தில் பிடித்துக் கொள்ளலாம். அவன் கேட்ட பணத்தைக் கொடுத்துடுவோம்!"

"உம்!" என்றார் முதலாளி.

தயக்கமாய் அவரைப் பார்த்தேன். காரின் ரேடியேட்டர் ஓட்டையைச் சொன்னேன். 'காரை முதலில் மாற்ற வேண்டும்' என்று கத்தியவர் – கடைசியாய் ரேடியேட்டர் ஒழுகலை அடைக்க என் பேச்சால் சம்மதித்தார். அடுத்ததாக – இலக்கியக் கூட்ட அழைப்புக்கும் சம்மதம் பெற்றேன். அறையை விட்டு வெளியே வரும் முன் அவரைப் பார்த்தேன். என் திறமையால் மற்றவர்களின் அன்றைய திருப்தி பிரதானமாய்ப்பட – அவரிடம் கேட்டாகவேண்டிய என் நீண்ட நாள் கேள்வி, கொக்கியாகவே நின்று போனது.

**வீ**ட்டில், என் மனைவி சொன்னாள் :

"தினம் கிளிப்பிள்ளைக்குச் சொல்கிற மாதிரி சொல்லி அனுப்பறேன். முதலாளியிடம் கேட்டு முன் பணமாக ஆயிரம் ரூபாய் வாங்கி வாங்க என்று. நான், நகை செய்து மாட்டிக்கவா கேட்கிறேன்? முதன் முதலாக ஊரில் இருந்து வருகிற உங்க தங்கச்சிக் குழந்தைக்குக் காப்பும், கொலுசும் செய்து போடத்தானே கேட்டேன்? முதலாளியைப் பார்த்ததும் வாயைத் திறந்து கேட்கணும். 'உம்'முன்னு உட்கார்ந்துட்டு இருந்தா எந்த முதலாளிக்கு நம்ப பிரச்னை தெரியும்? பேசுவதற்கும் ஒரு திறமை இருக்கு. அந்தத் திறமை உங்களுக்குச் சுட்டுப் போட்டாலும் வராது!" என்றாள்.

நான் பதிலேதும் சொல்லவில்லை. ●

**நாகராஜகுமார்**

# யார் இந்த நாகா?

போட்டோ கேப்ஷன்ஸை கொஞ்சம் வித்தியாசமா எழுதியிருக்காங்க. (சோனாபூரி டேஸ்ட்தான் மாறலை.) மத்தபடி 'ட்ரமண்டஸ் சேஞ்ச்'னு சொல்ல ஒண்ணுமில்லை.

இதுவே பெரிய விஷயம்தானே? But, அதிகாரிகள் லெவல்லேயே 'சிரத்தை கிளாஸ்' எடுக்காம, வாட்ச்மேனைப் பணி நீக்கம் செய்யறது எந்த வகை நியாயம்னுதான் புரியலை. வார்னிங் கொடுத்துட்டு மன்னிச்சி, ஒழுங்கா வேலை பார்க்கச் சொல்லிவிட்டிருக்கலாம். இப்பவும் ஒண்ணும் கெடலை. Better late than never.

• • •

'சாமி, நீ எழுதினதுக்கப்புறம் ட்ரேட் ஃபேர் நிர்வாகிகளை கவர்மெண்ட் ஒரு பிடி பிடிச்சிருக்காம். இப்ப சுறுசுறுப்பா வேலை பார்க்கறாங்களாம். புதுசா சில ஐட்டம்ஸ் வந்திருக்காம். செய்தித்துறை ஸ்டால்ல இருந்தவர் தூங்கிட்டிருந்தார்னு எழுதியிருந்த இல்லை? அவரை வேலையை விட்டே எடுத்துட்டாங்களாம். மறுபடி ஒரு தடவை போய்த்தான் பாரேன்'னு போன் பண்ணிச் சொன்னார், கல்கி அஸிஸ்டெண்ட் எடிட்டர் ஒருத்தர்.

அரசாங்கம் சுறுசுறுப்பா இருக்கறது பெரிய விஷயமில்லையா? ஸோ, லாஸ்ட் வீக் மறுபடி அந்தப் பக்கம் போனேன். சில மாறுதல்கள் சட்டுனு கண்ணுல பட்டுது. எந்த ஸ்டால்லேயும் பொறுப்பாளர்கள் உட்கார்ந்து இல்லை. (சே, சே! நின்னுட்டேவெல்லாம் தூங்கலை.) வர்றவங்களுக்கு எதையாவது விளக்கவோ, அட்லீஸ்ட் நாலு வார்த்தை சும்மா பேசவோ முயற்சி பண்றாங்க. பூம்புகார் எழு நிலை மாடம், கன்யாகுமரில அமையப் போற 133 அடி வள்ளுவர் சிலை மாடல் - இந்த ரெண்டு ஐட்டத்தைப் புதுசா சேர்த்திருக்காங்க.



மக்களுக்கு மர்மதேச ஜுரம் தலைக்கேறின காட்சியை லாஸ்ட் புதன் கிழமை 'கண்டுகளிச்சேன்.' 'கருப்பு யாரு? ராஜேந்திரன்தானே? ஐயோ அந்தப் பையன் ஏன் தண்ணில முழுகறான்? படுத்திருக்கான் பாரு... தண்ணி கொட்டுதில்லே... அப்படியே ரத்தமாயி'டும் பாரு!' - யூகங்கள்! திக் திக் நெஞ்சோட பெரியவங்க, சின்னவங்க, பொடியன்கள் - எங்க எண்பது வயசுப் பாட்டி வரைக்கும் டி.வி.யை விட்டு அரை இன்ச் நகரலை!

நடக்க சாத்தியமே இல்லாத ஒரு வெறும் திகில் கதைன்னு எல்லாருக்கும் தெரியும்தான். But, இந்த நிமிஷம் உலகம் அழியப் போகுதுங்கற மாதிரியான பய உணர்வை விரும்பி விரும்பி அனுபவிச்சுக்கிட்டு, சீரியல்ல மூழ்கறதும், நடுவுல விளம்பரம் வந்ததும் காது கொண்டு கேட்க முடியாத அளவுக்குத் திட்டறதும்... என்ன க்ரேஸுங்கறீங்க?

நான் சீரியல்கள் எதையும் பார்க்கறதில்லை. இந்த ஒரு வாரம் உட்கார்ந்ததுல, ஒரு விஷயம் பளிச்சினு புரிஞ்சது. புத்திசாலி டைரக்டர்களால மக்களை சுலபமா மயக்கி, உட்கார வைக்க முடியும்!

நாகா யாரு, இதுக்கு முன்னாடி என்ன பண்

ணிட்டிருந்தாருன்னு தெரிஞ்சிக்க விரும்பறேன். கனவுல 'கருப்பு' வந்து டிடெய்ல்ஸ் தருமா?

● ● ●

ஒருவழியா ஈரோடு செளந்தர்ராஜன், தன்னோட பொக்கிஷமான 'சத்யவான் சாவித்ரி' புத்தகத்தை (1900 வருஷம் வெளியானது) அனுப்பி வெச்சுட்டார். (அன்பளிப்பெல்லாம் கிடையாதாம். கி.பி.2000க்குள்ள திருப்பித் தந்துடணும்னு கண்டிஷன்.)

புஸ்தகத்தை அனுப்பினவர், தானே அதை சிலாகிச்சி பொடிப் பொடி கையெழுத்துல, ஃபுல்ஸ்கேப்ல நாலுபக்கம் வேற எழுதியிருக்கார். அதைப்படிச்சி முடிக்கவே கி.பி .2000 ஆயிடும் போல இருக்கு. 2001-ல உங்களுக்கு புக்கை ரிட்டன் பண்ணிடறேன் ஈரோடு செள!

● ● ●




## இந்த வாரக் கவிதை:

***என் கண் கலங்கினால்***
***துளிகளாக நீ***
***வெளிப்படுகிறாய்.***
***மனம் கலங்கினால்***
***வரிகளாக***
***வெளிப்படுகிறாய்!***

காதல்ல சிக்கின கவி மனசு! கங்கிராட்ஸ், சி.கே. ராஜாசந்திரசேகர்!

ஒரு நல்ல கவிதையோட அழகு, குறைவான வார்த்தைகள்ல அது சொல்லப் படறதுதான்னு நினைக்கறேன். 'விருட்சம்' வெளியீடா வந்திருக்கிற 'ஞானக்கூத்தன் கவிதைகள்' படிச்சிட்டிருக்கேன். என்ன ப்ரில்லியன்டா சொற்களை ஹேண்டில் பண்றார் தெரியுமா? பெரும்பாலான கவிதைகள்ல அபாரமான நகைச்சுவை + கிண்டல் உணர்வு வேற இருக்கு. இவர் கவிதைகள்ல இருக்கற (வேற யார்கிட்டேயும் இல்லாத) விசேஷம் - எல்லாமே சந்தத்தோட கூடின புதுக்கவிதைகள்! வெயிட் - முழுக்கப் படிச்சிட்டு விரிவா எழுதறேன்.

● ● ●

## இந்த வார ஹ்யூமரஸ் ஐட்டம்:

ஒரு மலைப்பாதை. இளம்பெண் ஒருத்தி (என்னை விடக் கொஞ்சம் குறைஞ்ச அழகுள்ளவள்னு வெச்சுக்கங்க) தனியா கார் ஓட்டிட்டுப் போறா. ஒரு திருப்பத்துல, எதிரே ஒரு கார் வேகமா வந்து மோதிடுது. ரெண்டு காருக்கும் பலத்த சேதம். ஆனா, அதிர்ஷ்டவசமா ரெண்டு பேரும் உயிர் பிழைச்சிடறாங்க.

எதிர்ல வந்த கார்ல ஒரு அழகான இளைஞன். "கடவுள் புண்ணியத்துல நாம ரெண்டு பேரும் எப்படியோ தப்பிச்சுட்டோம் பாரு"ங்கறான் அவன்.

நசுங்கிப் போன அவன் கார் கதவு உடைஞ்சு ஆட, உள்ளேருந்து ஒரு விஸ்கி பாட்டில் உருண்டு விழுது.

இவ சொல்றா: "ஆமாமா, ரொம்பப் பெரிய விஷயம். வி ஹாவ் டு செலிபரேட் இட்."

அவன் உடனே பாட்டிலை ஓப்பன் பண்ணி கார்ல வெச்சிருந்த ரெண்டு கிளாஸ்ல ஊத்தி, ஒண்ணை அவளுக்கு நீட்டறான்.

சியர்ஸ் சொல்லி முடிச்சதும் அவன் கடகடன்னு குடிச்சிட, அவ சிரிச்சிக்கிட்டே கிளாசை நைசா தூக்கிப் போட்டுட்டு நினைச்சுக்கறா: "நல்லவேளை, குடிச்சிட்டு வண்டியோட்டி மோதிட்டான்னு கேஸ் ஃபைல் பண்ணி, நஷ்டாடு கறந்துடலாம்!"

- எங்கியோ படிச்சதா என் ஃப்ரெண்ட் பாரதி சொன்னது இது.

— சுபி

# நடக்குமென்பார், நடக்கும்!

## அக்னிசர்மா பக்கம்

**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

பெரிய மனிதர்களின் தொடர்பு நிச்சயம் உண்டு. சுபகாரியங்களில் பங்கு பெறுவது ஒரு பக்கம் என்றால், உங்க குடும்பத்துலயே சுப காரியங்கள் சம்பந்தமான செலவுகளும் இருக்கும். பெண்களுக்கும் கலைத் துறையினருக்கும் ஜோரான வாரம். தொழிலதிபர்களும் சரி, கல்லாப் பெட்டியில் உட்கார்ந்து கொண்டு பணத்தை எண்ணுகிற பொறுப்பிலுள்ளவர்களும் சரி, உஷாரா இல்லேன்னா சிக்கலாயிடும். பொதுவா வீண் அலைச்சலைத் தவிர்க்க முடியாது. புது ஆளுங்ககிட்ட எச்சரிக்கையா இருக்கணும். பயணத்திலும் ஜாக்கிரதையா இருக்கணும்.

**ரிஷபம் :** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

இந்த வாரம் உங்க பேச்செல்லாம் தேனில் நனைந்து வருகிற மாதிரி அத்தனை இனிமையா இருக்கும். அப்புறம் எதிராளிங்க டமால்னு விழாம என்ன பண்ண முடியும்? பொண்ணு பார்த்துட்டுப் போன பிள்ளை வீட்டார் பச்சைக் கொடி காட்டுவாங்க. விருந்து, உல்லாசம்னு வீடே அமர்க்களப்படும். பண நடமாட்டமும் திருப்திகரமாவே இருக்கும். ஒரு சிலருக்கு சைட் பிசினஸ் மூலமும் வருவாய் கிடைக்கும். ஏதாவது புதுப் பொருள் வாங்கற யோகம் இருக்கு. அது சாதாரணப் பொருளாவும் இருக்கலாம். வீடு, நிலம் மாதிரியான சொத்துக்களாவும் இருக்கலாம். பொதுவா இந்த வாரம் வேலையாட்கள் கிட்ட உஷாரா இருக்கறது அவசியம்.

**மிதுனம் :** *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

உங்கள் இட்டங்கள் நிறைவேறும் என்பது ஒரு புறம் என்றால், மறுபுறம் உங்களுக்கு சமுதாயப் பணிகளில் அக்கறையும் ஈடுபாடும் ஏற்படும். அதனால உங்கள் செல்வாக்கும் உயரும். சுரங்கத் தொழிலாளர்கள், தொழிற்சாலையில் பணி செய்பவர்களுக்கு முன்னேற்றமான வாரம். ஆனால், சாகசச் செயல்கள் செய்யக் கூடியவர்கள் – அப்படிப்பட்ட தொழில் செய்பவர்கள் உஷாரா இல்லேன்னா, விபத்துகள் ஏற்பட்ற சான்ஸ் நிறையவே இருக்கு. பொதுவாச் சொல்லணும்னா, எதையும் ஒரு தடவைக்கு இரண்டு தடவையா யோசிச்சுச் செய்யுங்க. பயணத்தைத் தள்ளிப் போட்டுடுங்க.

**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

பண விஷயத்தில் நல்ல அபிவிருத்தி தெரியும். சிலருக்குத் திடீர் அதிர்ஷ்டமும் அடிக்கும். வெளிநாட்டுச் சேதியால உற்சாகமாவீங்க. வீடு, மனை, வாகனாதி விஷயங்களில் ஆதாயம் கிடைக்கும். உத்தியோகஸ்தர்களுக்கு புரமோஷன் சான்ஸ் இருக்கு. நீங்கள் சந்தோஷப்படும்படியான காரியங்களை உங்கள் வாரிசுகள் செய்வாங்க. பெண்களுக்குப் புடைவை, நகை, வாஷிங்மெஷின்னு வாங்கற யோகம் இருக்கு. சிலருக்கு உல்லாசப் பயணம் வாய்க்கும். வியாபாரிகள் அகலக் கால் வைக்கக் கூடாது. கணவன் - மனைவிக்குள்ள விட்டுக் கொடுத்துப் போகலேன்னா பிரச்னைதான்.

**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

போட்டி, பந்தயங்கள்; வழக்குகள் போன்றவற்றில் ஜெயிச்சுக் காட்டுவீங்க. தன்னம்பிக்கை அமோகமா இருக்கறதால எடுத்த காரியங்களிலும் வெற்றிக்கான வாய்ப்புகளே அதிகம். ஏற்றுமதி - இறக்குமதி, இரசாயனத் தொழில் சம்பந்தப்பட்டவர்களுக்கு ஆதாயமான வாரம். ஆனா அரசாங்க விஷயங்களில் அதிக பலனை எதிர்பார்க்காதீங்க. ஏமாந்துடுவீங்க. உத்தியோகஸ்தர்கள் கொஞ்சம் கவனப் பிசகா காரியம் செஞ்சாலும், மேலதிகாரிகிட்ட வசமா மாட்டிக்குவீங்க. பண விஷயம் சீராவே இருக்காது. எனவே எக்கணமும் சிக்கனத்தை மறந்துடாதீங்க.



**கன்னி :** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

உங்கள் சாமர்த்தியம் வெளிப்படுகிற வாரம் இது. எதுவானாலும் சுலபமா நிறைவேறும். உத்தியோகஸ்தர்கள், வக்கீல்கள், ஆசிரியர்களுக்கு அமோகமான வாரம். கல்யாணமாகாதவங்களுக்கு டும்டும்முக்கான ஏற்பாடுகள் நடக்கும். சிலருக்கு உல்லாசப் பயண வாய்ப்புன்னா, சிலருக்குப் புனிதப் பயண வாய்ப்பு வரும். சிலருக்குத் திடீர் அதிர்ஷ்டத்துக்கான சான்ஸும் இருக்கு. சிலருக்கு வெளிநாட்டுத்

தொடர்பால லாபமோ அல்லது வெளிநாட்டுப் பயணமோ நிச்சயம். பேச்சுல கவனம் காட்டுங்க. மனசுல ஒரு கவலை இருந்துக்கிட்டே இருக்கும். தியானம் பண்ணுங்க.



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

கிரக சஞ்சாரங்கள் சிறப்பா இல்லாததால, எதிலுமே எச்சரிக்கையா இருக்கணும். குறிப்பா வீண் வம்பு, வழக்கு விஷயங்கள் பக்கம் தலை வெச்சுக் கூடப் படுக்காதீங்க. உங்கமேல அக்கறையுள்ளவங்களை அடிக்கடி போய்ப் பாருங்க. அவங்க ஆலோசனைப்படி நடக்கறதே உத்தமம். வயிறு சம்பந்தமான உபாதைகள் சிலருக்கு ஏற்படும். பயணத்தால பலன் கிடைக்கும்னாலும் பயணத்தில் எச்சரிக்கை அவசியம். மாணவர்கள் கடுமையாப் படிக்க வேண்டியிருக்கும். கணவன் - மனைவிக்கிடையிலும் சிறுசிறு சலசலப்புகள் இருக்கும்.



**விருச்சிகம் :** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

**பதிப்புத்துறைல இருக்கற, விருச்சிக ராசிக்காரர் 'வாண்டு' சோமு, இந்த வாரம் சிக்கன நடவடிக்கைகளைத் தீவிரமா கடைபிடிக்கணுமாம்.**

கல்யாணமாகாதவங்களுக்குக் கல்யாணம், வீட்டில் குவாகுவா சத்தம், வெளிநாட்டுத் தொடர்பால ஆதாயம்னு உற்சாகம் கரைபுரண்டு ஓடும். உத்தியோகஸ்தர்களுக்கு புரமோஷன் சான்ஸும் இருக்கு. விவசாயிகளுக்கு வளர்ச்சி உறுதி. வேலை தேடிக்கிட்டிருக்கிறவங்களுக்கு வேலை கிடைக்கும். இயந்திரம் தொடர்பான வேலைகளில் இருப்பவர்கள் எச்சரிக்கையா இருக்கணும். சகோதரர் - சகோதரிகள் மூலம் பிரச்னையோ செலவுகளோ ஏற்படலாம். விளையாட்டு வீரர்களுக்கு சிறு விபத்து ஏற்பட சான்ஸ் இருக்கு. எல்லோருமே சிக்கனமா இருக்கறது நல்லது.



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

உங்கள் செயல் திறனும் பராக்கிரமமும் வெளிப்பட்டு ஜெயித்துக் காட்டப் போறீங்க. அரசாங்க விஷயத்துல கூட உங்களுக்குச் சாதகமான திருப்பத்தைக் காண முடியும். வீடு, மனை விஷயங்கள் நல்ல பயனைக் கொண்டு வரும். சிலருக்குச் சொத்துக்கள் சேர்க்கையும் ஏற்படும். வியாபாரிகளுக்கு வளர்ச்சி உறுதி. கேளிக்கை - உல்லாசங்களில் நாட்டம் பிறக்கும். ஆனாலும் சிறு சிறு குழப்பங்கள் ஏற்படும். முன்பின் தெரியாத வங்ககிட்ட உஷாரா இருக்கணும். உணவு விஷயத்திலும் கவனமா இருக்கணும். இண்டு இடுக்குகளில் கையை விட்டுத் துழாவாதீங்க. விஷக் கடிகளுக்குச் சான்ஸ் இருக்கு.



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

கோர்ட்டு, வழக்கு ஏதும் பெண்டிங் இருந்தா, அதில் ஒரு திடீர் திருப்பம் ஏற்படும். எதிரிகளெல்லாம் ஓடி ஒளியற வாரம் இது. இன்னும் சொல்லப் போனா வசந்தகால இனிமையை இந்த வாரம் உணர்வீங்க. வீடு, நிலம், ரியல் எஸ்டேட் விஷயங்களெல்லாம் நல்ல லாபம் தரும். சிலருக்குப் புது சொத்துக்கள் சேர வாய்ப்பு இருக்கு. புதுத் தொழில் தொடங்கறதுக்கு சரியான டைம் இல்லீங்க. கேஷியர் மாதிரி பணப் புழக்கமுள்ள தொழில் செய்யறவங்க உஷாரா இருக்கணும். யார்கிட்டேயும் சூடான வார்த்தைகளைப் பேசாம இருக்கறது நல்லது.



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

உங்கள் ஆசைகள் இனிதே நிறைவேறக்கூடிய வாரம் இது. பல இடங்களிலிருந்து உங்களுக்கு வருவாய் வர்றதுக்குச் சான்ஸ் இருக்கு. உங்க மதிப்பும் செல்வாக்கும் உயரும். பேச்சில் திறமையும் வசீகரமும் பளிச்சிடும். திருமணம் போன்ற சுபகாரியங்கள் நடக்க இருக்கறதால குடும்பத்தில் குதூகலம் பொங்கும். அலுவலகப் பணியாளர்களுக்கு சம்பள உயர்வு உறுதி. வேலையில்லாதவர்களுக்கு வேலையும் உறுதி. பயணமும் பலன் தருவதாவே இருக்கும். மக்களால் மகிழ்ச்சி உண்டுன்னாலும் கூடப் பிறந்தவங்களால பிரச்னைகளும் செலவும் ஏற்படும். உஷாராயிருங்க.



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

முக்கியமான கிரகங்கள் உங்களுக்கு அனுகூலமா இல்லாததால எதிலும் எச்சரிக்கையா இருப்பது அவசியம். குடும்ப நலனில் ரொம்பவும் அக்கறை காட்டணும். பயணம் கூடாது. தவிர்க்க முடியாத பயணமாய் இருந்தால் தகுந்த எச்சரிக்கையுடன் போவதே நல்லது. கூடப் பிறந்தவங்களோட மனஸ்தாபம் வர்றதுக்கான சான்ஸ் இருக்கு. வீண் வம்பு, அநாவசியப் பேச்செல்லாம் கூடவே கூடாது. தந்தையின் உடல் நலத்தில் அக்கறை காட்டுங்க. செலவு எக்கச்சக்கமா இருக்கும். உஷாரா இருங்க.

"கருத்தம்மா படத்தில் ஒரு பாட்டுப் பாடினேன். ஆனால், அது படத்தில் இடம் பெறவில்லை. ஆனால், அந்தப் பாடலை பாரதி ராஜா, 'அந்தி மந்தாரை' படத்தில் பயன்படுத்திக்கொண்டார். கன்று போடப் போகும் பசுவைப் பற்றிய 'புல்லு திங்கும் புள்ளத்தாச்சி' என்ற என் முதல் பாட்டே, 'தேசிய விருது பெற்ற தமிழ் படத்துக்காக' என்பதில் எனக்கு ரொம்ப சந்தோஷம்" என்கிறார் சுமங்கலி.

மாணிக்கம் படத்தில் அடுத்துப் பாடினார் இவர். அதுவும் படத்தில் இடம் பெறவில்லை.



• சுமங்கலி

அதற்கப்புறம் அரவிந்தன், மாப்பிள்ளை கவுண்டர் என்று இன்னும் சில படங்களில் பாடி விட்டார்.



• ஹரீஷ்

சினிமாவில் பாடி, கிடைக்காத பெயரும் புகழும் இப்போது டீ.வி.யில் கிடைத்து விட்டது! விஜய் டீ.வியில் ஒளிபரப்பாகும் 'பாடுவோர் பாடலாம்' நிகழ்ச்சியினை நடத்துகிற 'பிஸைப பெண்' இந்த சுமங்கலி அரியநாயகம்தான்!

# எல்லோரும் பாடலாம் வாங்க!

அப்பா அரியநாயகம் டாக்டர். எட்டாம் வகுப்பு வரை சுமங்கலி படித்தது மஸ்கட்டில். அங்கே இருந்தபோது இவருக்கு மேற்கத்திய இசையில்தான் ஆர்வம். இசைக் குழுவில் பாடிய அனுபவம் உண்டு!

முறைப்படி பாட்டு கற்றுக் கொள்ளவில்லை என்றாலும் சென்னை வந்த பிறகு பாட்டுப் போட்டிகளில் கலந்து கொண்டு பல பரிசுகள் பெற்றிருக்கிறார். ஒரு விழாவில் இவர் பாடியதைக் கேட்டுவிட்டுதான் ஏ.ஆர். ரஹ்மான், கருத்தம்மாவில் வாய்ப்புக் கொடுத்தாராம். இப்போது பாடகர் மனோவின் இசைக்குழுவில் பாடிக் கொண்டிருக்கிறார். கங்கை அமரனின் மகன் வெங்கட் பிரபு, எஸ்.பி.பியின் மகன் சரண், மலேசியா வாசுதேவனின் மகன் யுகேந்திரன் ஆகியோர் சேர்ந்து நடத்தி வரும் இளையதலைமுறை இசைக்குழுவிலும் சுமங்கலி பாடுகிறார்.

"பாடுவோர் பாடலாம் நிகழ்ச்சியில் எப்படி வாய்ப்புக் கிடைத்தது?"

"அதற்கு அந்த நிகழ்ச்சியில் என்னோடு வரும் ஹரீஷ்தான் காரணம்."

"நிகழ்ச்சியில் படுஜாலியாகப் பேசுகிறீர்கள். எல்லாம் உங்கள் சொந்தச் சரக்கா?"

"இல்லை. எல்லாம் ஹரீஷின் கைவண்ணம்தான்."

"மறக்க முடியாத அனுபவம்?"

"நிகழ்ச்சியை இணைந்து நடத்தும் ஹரீஷ் ஐந்தடி பதினோரு அங்குலம். நான் ஐந்தடி மூன்று அங்குலம்! எனவே, என்னை முதல் நாள் ஷூட்டிங்கின்போது ஹீல்ஸ் அணியச் சொன்னார்கள். முதல் நிகழ்ச்சி என்பதால் படுடென்ஷன். ஷூட்டிங் ஐந்து மணி நேரத்துக்கு நீண்டு விட்டது. என் கால், இடுப்பு எல்லாம் ஒரே வலி. ஷூட்டிங் முடிந்த போது மயக்கம் போட்டு விழாத குறை!

அது யார் ஹரீஷ்?

அப்பா பிரபல சினிமா புகைப்படக்காரரான ஹரீஷ்.

மகன் பெயர்தான் அப்பாவுக்குப் புனை பெயர். கர்நாடக இசைப் பரிச்சயம் உள்ள

குடும்பம். ஆனால், ஹரீஷ் முறைப்படி சங்கீதம் கற்றவரில்லை! கேள்வி ஞானம் தான். அதை வைத்தே பல போட்டிகளில் பரிசுகள் தட்டி வந்தவர். விவேகானந்தா கல்லூரியில் பி.காம் முடித்துவிட்டு, சென்னைப் பல்கலைக் கழகத்தில் பகுதி நேர எம்.பி.ஏ. பிளஸ் கம்ப்யூட்டர் பயிற்சி.

இவருக்கும் நிறைய சினிமா வாய்ப்புகள் வந்து கொண்டிருக்கின்றன. வித்யா சாகர், தேவா, ஆதித்யன், மரகதமணி என்று பலரது இசையமைப்பில் பாடிவிட்டார்.

"எனக்கு இப்போது சினிமாவில் நடிக்க வாய்ப்பு வருகிறது. ஆனால், அவ்வளவு திருப்தியாக இல்லை. நல்ல பிரேக் கிடைக் கும்படியான படம் என்றால் நடிக்க இஷ்டம்தான். பி.யூ. சின்னப்பா, எம்.கே. தியாகராஜ பாகவதர்போல, தற்காலத் தில் எஸ்.பி.பி. போலப் பாடி, நடிக்கும் நடிகர் என்று பெயர் வாங்க ஆசை" என் கிறார்.

"எல்லாம் சரிதான். பாடுவோர் பாட லாம் என்று பெயர் வைத்திருப்பதால், ரொம்ப சுமாராகப் பாடுகிறவர்கள் எல்லாம் கூட நிகழ்ச்சியில் பங்கேற்க வந்து விடுகிறார் களே? இல்லை. யார் வேண்டுமானாலும் வந்து பங்கேற்றுப் பாடலாம் என்பதால் இப்படிப் பெயர் வைத்திருக்கிறீர்களா?"

"பாடுவோர் பாடலாம் என்பது பாட்டுத் திறமைக்கான போட்டி இல்லை. ஒரு பொழுதுபோக்கு நிகழ்ச்சி. இதில் பங்கேற்க நல்ல குரல் வளம்; இசைஞானமெல்லாம் தேவையில்லை! பாடல்கள் பற்றிய சுமாரான 'அறிவு' இருந்தாலே போதும். எனவே, எங்கள் நிகழ்ச்சியினை சீரியஸான பாட்டுத் திறமைக்கான நிகழ்ச்சிகளுடன் ஒப் பிடாதீர்கள்!" என்கிறார்கள் சுமங்கலியும் ஹரீஷும்.

"ரொம்ப மாடர்னாக இருக்கிறீர்கள். ஆனால் பெயர் மட்டும் கர்நாடகமாக இருக்கிறதே சுமங்கலி?"

"ஹூம்! என் அப்பா மெடிகல் காலேஜில் படித்தபோது அவரை மிகவும் கவர்ந்த ஒரு பேராசிரியரிடம் எனக்குப் பெயர் வைக்கச் சொல்லியிருக்கிறார். அவர் தம் மகளின் பெயரை எனக்குச் சூட்டி விட்டார்! 'வேணாம் போ!' என்று அந்த வயதில் அடம் பிடிக்க முடியலையே!" ●

— மானஸா

அட்டை வண்ணப்படம், படங்கள்: ஸ்ரீஹரி

# வாசகர்களே, அதைச் சொல்ல முடியாது!

ஹலோ, வாசகர்களே!

'அவர் வந்தார்; தந்தார்; சென்றார்! இவர் வென்றார்' என்ற தலைப்பில் (28.2.99 இதழில்) ஒரு கட்டுரையை வெளியிட்டாலும் வெளியிட் டோம்... எங்களால் போன் கால்களுக்குப் பதில் சொல்லி மாளவில்லை!

''சர்க்கரை வியாதியைக் குணப்படுத்தற அந்த மூலிகை மாத்திரையோட பேரை கட்டு ரையில நீங்க பிரசுரிக்கவேயில்லையே!''

''ஆமாம். வேணும்னேதான் நாங்க பிரசுரிக்கலை!''

''இப்படிச் செய்யலாமா? பேரைப் பிரசுரிச் சிருந்தா, எங்களுக்கு உபயோகமாக இருந் திருக்குமே!''

''மாத்திரையோட பேரைத் தெரிஞ்சுக் கிட்டதுமே, டாக்டரைப் பத்தியெல்லாம் கவலைப்படாம, நீங்களாவே கடைக்குப் போய் வாங்கிச் சாப்பிட ஆரம்பிச்சுடுவீங்க. அது தப்பு. டாக்டரோட ஆலோசனை இல்லாம எந்த மருந் தையும் உட்கொள்ளக் கூடாது. அதனாலதான் நாங்க பிரசுரிக்கலை.''

''சரி. பேரையாவது சொல்லுங்க. அந்த மாத் திரையைச் சாப்பிடலாமான்னு எங்க டாக்டர் கிட்ட நாங்க கன்சல்ட் பண்ணிக்கறோம்.''

''நீங்க டாக்டர்கிட்டப் போனா, அவருக்கே இது பத்தித் தெரிஞ்சிருக்கும். அவரே சொல்லுவாரு.''

– இது போன்ற உரையாடல்கள்தான் கடந்த ஒரு வாரத்துக்கு மேலாக அலுவலகத்தில் நடந்து கொண்டிருந்தன. போதாததற்குக் கடிதங்கள் வேறு!

நாங்கள் அந்தக் கட்டுரையைப் பிரசுரித்ததன் முக்கிய நோக்கம், முன்பின் தெரியாத ஒரு சாமியார், ஓர் இளம் தொழிலதிபரைச் சந்தித்து ஓலைச் சுவடிகளைக் கொடுத்ததும் அதன் மூலம், இவர் மூலிகை மாத்திரைத் தயாரிப்பைத் தொடங்கி வெற்றி பெற்றதும்– ஓர் அற்புதம் மாதிரி நடந்ததே... அதை வெளிக்காட்டு வதற்குத்தானே தவிர, அந்த மாத்திரைக்கு விளம்பரம் தருவதற்காக அல்ல.

அந்த மாத்திரை சர்க்கரை வியாதியை வெற்றிகரமாகக் குணப்படுத்துவதாகச் சொல் லப்படுவது குறித்து நமக்கு மகிழ்ச்சியே! ஆனாலும் அதைச் சாப்பிடலாம் என்று நோயாளிகளுக்குச் சிபாரிசு செய்ய வேண் டியவர்கள் டாக்டர்களே தவிர, நாங்கள் அல்ல என்பதை வாசகர்களுக்கு மீண்டும் மீண்டும் தெரிவித்துக் கொள்கிறோம்!

— ஆசிரியர்



# அன்னனுக்கு ஆபத்து!

**நா**ன் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தது, சுதந்தரப் போராட்டக் காலம். மொத்த தேசமும் காந்திஜியை மனித தெய்வமாக மதித்தது. அவரது கட்டளைக்குக் காத்திருந்தது. நானும் காந்தியின் பேச்சுக்களையும் எழுத்துக்களையும் ஆர்வமுடனும் ஆழமாகவும் படிப்பேன்.

இதன் காரணமாக, காந்திஜியின் சபர்மதி ஆசிரமத்தில் சேர்ந்து பணியாற்ற வேண்டும் என்கிற ஆர்வம் எனக்குள் உண்டானது. உடனே காந்திஜிக்கு ஒரு கடிதம் எழுதினேன். அவர் மீது நான் கொண்டிருக்கும் மரியாதை; அவருடன் சேர்ந்து பணி புரியத் துடிக்கும் என் ஆர்வம் இவற்றை விவரித்துவிட்டு, அவரது ஆசிரமத்தில் சேரும் முறையைத் தெரிவிக்கும்படிக் கோரியிருந்தேன்.

தொடர்ந்து, காந்திஜியிடமிருந்து பதில் வருமா? என்ன பதில் எழுதுவார் என்று எனக்குப் பெரும் சஸ்பென்ஸ். ஆனால் சில நாட்களில் காந்திஜியிடமிருந்து எனக்கு பதில் வந்தது. அது ஒரு போஸ்ட் கார்டு.

''உனக்குத் தேவையான உணவை உன்னால் சமைத்துக் கொள்ள முடியுமானால், உன் கழிப்பிடத்தை உன்னால் சுத்தம் செய்து கொள்ள முடியுமானால், நீ சபர்மதி ஆசிரமத்தில் சேருவதற்குத் தடை ஏதும் கிடையாது'' என்று அந்தக் கடிதத்தில் எழுதப்பட்டிருந்தது.

நான் எழுதிய கடிதத்துக்கு, காந்திஜியிடமிருந்து பதில் வந்ததில் எனக்கு மிகுந்த சந்தோஷம்தான் என்றாலும், அவர் எழுதிய பதில் எனக்கு உற்சாகம் ஏற்படுத்தவில்லை. காரணம், எனக்கு சமைக்கத் தெரியாது! அது என்னவோ தெரியவில்லை. சிறு வயது முதலே எனக்கு சமையலில் ஆர்வம் இல்லை. எனவே, வளர்ந்த பின்னரும் சமையல் கற்றுக் கொள்ளவேயில்லை!

காந்திஜி போட்ட முதல் கண்டிஷனையே நிறைவேற்ற முடியாத நான், எப்படி சபர்மதி ஆசிரமத்தில் சேரமுடியும்? ஆக சபர்மதி ஆசிரமத்தில் சேரும் ஆசை அன்றோடு மறைந்து விட்டது.

**ப**டிப்பை முடித்துவிட்டு, சுமார் ஒரு வருடம் டெல்லியில் இருந்தேன், குடும்பத்துடன். அப்போது மகாத்மா காந்தியை 'பிர்லா ஹவு'சில் சந்தித்துப் பேசும் அரிய வாய்ப்பு எனக்குக் கிடைத்தது.

அப்போது காந்திஜி என்னிடம், ''உனக்கு இந்தி பேசத் தெரியுமா?'' என்று கேட்டார். இதுபோன்ற ஒரு கேள்வியை காந்திஜியிடமிருந்து நான் எதிர்பார்க்கவில்லை.

நான் இந்தி படித்திருக்கிறேன். ஆனால் அதை வைத்துக்கொண்டு என்னால் சரளமாகப் பேச வராது. எனவேதான் காந்திஜியின் கேள்விக்கு 'எனக்கு இந்தி தெரியும்' என்றோ, 'தெரியாது' என்றோ திட்டவட்டமாக என்னால் பதில் சொல்ல முடியவில்லை.

''ம்... அப்புறம்?'' என்கிறாற்போல காந்திஜி என்னையே பார்த்துக் கொண்டிருந்தார். அடுத்து அவரையே தர்மசங்கடத்தில் ஆழ்த்தும் கேள்வி ஒன்றை நான் கேட்கப்போகிறேன் என்று அவர் எதிர்பார்த்திருக்க மாட்டார்.

"எனக்கு இந்தி தெரியுமா என்று கேட்கிறீர்களே! உங்களுக்குத் தமிழ் தெரியுமா?''

**மாதா, பிதா, மாணவன் – 3** • **திருமதி ஒய்.ஜி.பி**

லேசாகப் புன்னகைத்த மகாத்மா, "கொஞ்சம் தெரியும்" என்றார். உடனே நான், "உங்களுக்கு எப்படி தமிழ் தெரியுமோ அப்படித்தான் எனக்கு இந்தி தெரியும்" என்றேன்.

அத்துடன் நான் நிறுத்திக் கொண்டுவிட வில்லை. "இந்தியா போன்ற பல மொழிகள் பேசப்படும் தேசத்தில், ஒருவருக்குத் தாய் மொழி தவிர மற்ற மொழிகள் தெரிந்திருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கக் கூடாது" என்றும் சொன்னேன்.

"ரொம்ப கட்டித்தனமாகப் பேசுகிறாயே! பேஷ்" என்று தட்டிக் கொடுத்தார்.

இன்றைய இளைய தலைமுறையினர் புத்திசாலிகளாக இருக்கிறார்கள். நாலு இடத்துக்குப் போய் வருகிறார்கள். ஆனால் எதிர்பாராமல் ஏதாவது ஒரு பிரச்னை வந்து விட்டது என்றால், தடுமாறிப்போய் விடு கிறார்கள். அவர்களுடைய படிப்பு, அத் தகைய தருணங்களில் அவர்களுக்குக் கைகொடுப்பதில்லை. எனவேதான், நான் என் மாணவர்களுக்கு, 'கிரைசிஸ் மேனேஜ் மென்ட்' பற்றி அடிக்கடி சொல்லுவேன். திடீரென்று ஒரு பிரச்னை என்றால், ஸ்தம் பித்துப் போய் விடக் கூடாது. அந்தப் பிரச் னையைப் பற்றிக் கொஞ்சம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். அதற்கு என்ன தீர்வு? அதன் பின் விளைவுகள் என்ன என்றெல் லாம் ஆராய வேண்டும். அதே சமயம் நிதானமும் வேண்டும்.

எங்கள் குடும்பம் எப்போதும் சந்தித்தி ராத ஒரு பிரச்னை வந்தபோது, கல்லூரி மாணவியாக இருந்த நான் எப்படிச் சமாளித்தேன் என்று சொல்கிறேன்.

திருச்சியில் நாங்கள் வசித்துக் கொண்டி ருந்த கால கட்டம் அது. ஒரு பிற்பகலில் ரயில்வே ஸ்டேஷன் வரை போய்விட்டு வருவதாகச் சொல்லிவிட்டுப் புறப்பட்டான் என் மூத்த சகோதரன். போனவன் மாலை இருட்டிய பிறகும் வீடு திரும்பவில்லை. எங்களுக்கு ஒன்றும் புரியவில்லை. என் அம்மா ரொம்ப வாட்டமடைந்து விட் டாள். என் அண்ணனின் மனைவியோ, பயத்தில் அழத்தொடங்கிவிட்டாள்! என் அப்பா ஆபீஸ் விஷயமாக வெளியூர் போய் விட்டதும் இதில் சேர்ந்து கொண்டுவிட, 'அவன் ஏன் இன்னும் வீட்டுக்கு வர வில்லை? எங்கே போனான் என்று எப்படி யாவது கண்டுபிடி' என்று என் அம்மாவும் சிறிது நேரத்தில் அழத் தொடங்கிவிட்டாள்.

இந்த விஷயமாக ஏதாவது நடவடிக்கை எடுக்க வேண்டுமானால், அதை நான் தான் செய்ய வேண்டிய சூழ்நிலை. "அழுது கலாட்டா பண்ணாதீர்கள்" என்று நான் அவர்களை சமாதானப்படுத்திக் கொண்டி ருந்த வேளையில், எங்கள் வீட்டு விலா சத்தை விசாரித்துக் கொண்டு ஒரு போலீஸ் காரர் வந்தார். எங்களுக்கு பகிரென்றது.

வந்த போலீஸ்காரர் என் அண்ணன் போலீஸ் ஸ்டேஷனில் வைக்கப்பட்டிருப்ப தாகச் சொன்னபோது என் அம்மாவும் அண்ணியும் வீலென்று அலறிவிட்டனர்!

ரயில்வே ஸ்டேஷன் அருகே போய்க் கொண்டிருந்தபோது, ஒரு போலீஸ்காரர் ஏதோ கேள்விகள் கேட்க, என் அண்ணன் (பயத்தில்) ஏதோ உளறிவிட, அவனை ஸ்டேஷனுக்கு அழைத்துக் கொண்டு போய் விட்டனர் என்று அந்த போலீஸ்காரர் சொன்னதிலிருந்து நாங்கள் தெரிந்து கொண்டோம்.

அடுத்து நான் செய்ய வேண்டியது என்ன என்று ஒரு கணம் யோசித்தேன். என் அப்பாவோ ஊரில் இல்லை; சிறிய பெண் ணான நான் தனியே போலீஸ் ஸ்டேஷ னுக்குப் போய் 'என் அண்ணன் அப்பாவி! அவனை வீட்டுக்கு அனுப்பி விடுங்கள்' என்று கேட்டால், நிச்சயம் அவர்கள் செவி சாய்க்க மாட்டார்கள். என் அம்மா, அண்ணி இருவராலும் அழுவதைத் தவிர, வேறு ஒன்றும் இது விஷயமாகச் செய்ய முடியாது. 'சரி, நாமே முயற்சி செய்வது' என்றும், ஆனால் நேரடியாய் இல்லாமல், யார் சொன்னால் போலீஸ்காரர்கள் கேட்



"உங்க ஆபீஸ் கிளர்க்குக்கு இருந்தாலும் ரொம்ப திமிரா, எப்படி?"

"தூங்கப் போறேன்; சரியா சாயங்காலம் அஞ்சு மணிக்கு எழுப்பி விடுங்கன்னு ஆபீஸர்கிட்டேயே சொல்றான்னா பாரேன்!"

– வெ. ராஜா ராமன்

''என் மனைவிக்கு சீட்டாடக் கற்றுக் கொடுத்துவிட்டேன்.''

''என்ன பிரயோசனம்?''

''என்ன பிரயோசனமா? என் போன மாத சம்பளத்தில் பாதியை அவளிடம் இருந்து ஜெயித்து விட்டேனே!''

– எஸ். சங்கரநாராயணன்



பார்களோ, அவர் மூலமாக செயலில் இறங்குவது என்றும் தீர்மானித்தேன்.

எங்கள் வீட்டுக்கு எதிர் வீட்டில் ஒரு போலீஸ் அதிகாரி வசித்து வந்தார். அவர் ஒரு பிரிட்டிஷ்காரர். ஆனால் அவருடன் நெருக்கமான பழக்கம் எங்கள் குடும்பத்தினருக்குக் கிடையாது. போகிறபோது, வருகிறபோது ஹலோ சொல்லிப் புன்னகை செய்யும் அளவுக்குத்தான் பழக்கம். எப்படி இருந்தாலும், அவர் மூலமாக இந்தப் பிரச்னைக்குத் தீர்வு காண முடியும் என்று நான் நம்பினேன்.

என் அம்மாவிடம் இதைச் சொன்னேன். 'ஐயோ! ஆறுமணியாகிவிட்டால் அவர் குடிக்க ஆரம்பித்து விடுவார் என்று சொல்கிறார்களே! வயசுப் பெண்ணான நீ இப்போ அவர் வீட்டுக்கு போக வேண்டாம்!'' என்றார் அவர்.

''நீ அதைப் பற்றிக் கவலைப்படாதே! என் மீது நம்பிக்கை இருக்கிறதல்லவா உனக்கு! பேசாமல், சாமிகிட்டே உட்கார்ந்து, பிரார்த்தனை பண்ணிக் கொண்டு இரு! நான் அண்ணனுடன் திரும்பி வருவேன்! கவலைப்படாதே!'' என்று தைரியமூட்டிவிட்டு, எதிர்வீட்டை நோக்கி நடந்தேன்.

அந்த வீட்டுக் காவல்காரர் என்னை உள்ளே விடவில்லை.

''ஒரு எமர்ஜென்ஸி! என் அண்ணனை போலீஸ் பிடித்துக் கொண்டு போய் விட்டது! என் அப்பாவோ ஊரில் இல்லை. நான் இந்த அதிகாரியை உடனடியாய்ப் பார்த்தாக வேண்டும்'' என்று சற்று உரத்த குரலில் சொன்னது, உள்ளே இருந்த பிரிட்டிஷ் அதிகாரியின் காதில் விழுந்திருக்கும் போலும்! அவரே ''என்ன விவகாரம்?'' என்று கேட்டபடி வெளியே வந்தார். நான் பிரச்னையைச் சொன்னதும், ''அப்படியா நடந்துவிட்டது! என்னுடன் காரில் ஏறு! ஸ்டேஷனுக்குப் போகலாம்!'' என்றார்.

அவர் உதவ முன் வந்ததற்கு மனமார்ந்த நன்றியைச் சொல்லிவிட்டு ''தயவு செய்து மன்னித்துக் கொள்ளுங்கள்! உங்களுடன் காரில் வருவதற்கு நான் விரும்பவில்லை! நீங்கள் காரில் புறப்பட்டுப் போங்கள். நான் ஒரு சைக்கிள் ரிக்ஷா பிடித்து பின்னாலேயே வந்து விடுகிறேன்'' என்றேன். அவர் காரில் புறப்பட்டுப் போனார்.

நான் சைக்கிள் ரிக்ஷாவில் என் அம்மாவை அழைத்துக் கொண்டு ஸ்டேஷனுக்குப் போனேன். நாங்கள் உள்ளே நுழைந்தபோது அந்த அதிகாரி என்ன விவரம் என்று விசாரித்துவிட்டு, ''பாவம்! இந்த அப்பாவிப் பையனை ஸ்டேஷனில் வைத்து, இவனது குடும்பத்துக்கு சிரமம் கொடுத்து விட்டீர்களே!'' என்று சொல்லிக் கொண்டிருந்தார். என் அண்ணன் மீது கேஸ் எதுவும் எழுதப்படவில்லை.

அந்த அதிகாரிக்கு நன்றி தெரிவித்துவிட்டு, நான் என் அம்மாவையும் அண்ணனையும் அழைத்துக் கொண்டு வீடு வந்து சேர்ந்தேன். தம் கணவரைக் கண்டதும் என் அண்ணி என் கைகளைப் பிடித்துக் கொண்டு ஆனந்தக் கண்ணீர் விட்டது மட்டுமில்லை; என் துணிச்சலை அதன் பிறகு பல வருடங்களுக்கு பலரிடம் சிலாகித்துச் சொல்லிக் கொண்டிருந்தார்.

இன்றைக்கும் கூடப் பல குழந்தைகளுக்குப் போலீஸ் என்றால் ஒருவித பயம் உண்டு. பெற்றோர்கள்கூட 'போலீஸ்காரரிடம் பிடிச்சுக் கொடுத்துவிடுவேன்' என்று பயமுறுத்துவது சகஜம். நான் மாணவர்களிடம் இந்த அனுபவத்தைச் சொல்லி போலீஸ் என்றால் அனாவசியமான பயம் வேண்டாம் என்று சொல்லுவேன். எதிர்பாராத பிரச்னைகள் வரும்போது எப்படி கலங்காமல் செயல்படுவது என்று விளக்குவேன்.

(தொடரும்)

படம்: ஸ்ரீஹரி

சத்துணவுக் கூடத்தில் பூகம்பம் வெடித்திருக்கிறது. கையில் பிரம்புடன் தமிழரசு சார் அங்கே ருத்ர தாண்டவம் ஆடிக் கொண்டிருக்கிறார்.

ஸ்டாஃப் ரூம் கதவைக் கால்வாசி திறந்து, தலையை மட்டும் உள்ளே நீட்டித் தகவல் சொல்லிவிட்டு ஓடினார் பாண்டுரங்கன் சார்.

பொதுவாழ்வில் பிரச்னைகளற்ற தறிவாத்தியார் பாடு எவ்வளவோ தேவலை. இன்ஸ்பெக்ஷன் என்று பருவ மழை பொய்க்காத சமயங்களில் மட்டும் வந்து சேரும் மாவட்டக் கல்வி அதிகாரிக்கும் அவரது பரிவாரங்களுக்கும் நாலு கைத்தறித் துண்டு நெய்து, போர்த்தி விட்டால் தீர்ந்தது விஷயம். சத்துணவுக் கூடத்தில் மட்டுமல்லாமல், அங்கிங்கெனாது நடக்கிற அத்தனை விவகாரங்களிலும் நினைத்த மாத்திரத்தில் கலந்து கொள்ள முடிகிறது. நம்மால் அப்படி முடிகிறதா என்று கேட்டார் டோரா மரகதம் டீச்சர். திருத்த வேண்டிய டெஸ்ட் பேப்பர்கள் கட்டுக் கட்டாக மேசையில் கிடக்க, "வா, போய்ப் பார்க்கலாம்" என்று கல்யாணியிடம் சொன்னாள்.

"நான் வரலை டீச்சர்" என்றாள் கல்யாணி. அவளுக்குத் தயக்கமாக இருந்தது. மேலும், பாண்டுரங்கன் சார் சொன்ன தகவலை வேறு யாரிடமாவது உறுதிப்படுத்திக் கொள்ள நினைத்தாள். தமிழரசு சாருக்குக் கோபம் வரக்கூடுமா? நினைத்துப் பார்க்கவே முடியவில்லை, அவளால். குரல் உயர்த்தாத கம்பீரத்தில் அவளை மிகவும் வசீகரித்திருந்தவர் அவர். டென்த் ஏவில் அவர் பாடம் நடத்துவதே சங்கீதம் போல இருக்கும். அதுவும் செய்யுள் வகுப்பென்றால் லட்டு. வகுப்பில் முடியாதென்றாலும் தனியாகவேனும் பையன்கள் கிண்டல் செய்யக்கூடும் என்கிற நினைப்பிருக்காதோ? ராகம் போட்டுப் பாட ஆரம்பித்தாரென்றால் சொர்க்கம் தான்.

ஸ்டாஃப் ரூமில் கூட சக ஆசிரியர்களுடன் அநாவசியப் பேச்சு வைத்துக் கொள்ளமாட்டார், தமிழரசு சார். எப்போதும் படிப்பு அல்லது எழுத்து. "என்னய்யா, சமஞ்ச பொண்ணாட்டம் ஒதுங்கி ஒதுங்கிப் போறே? வயசுப் பையன் போலவா இருக்கே?" – முதுகில் தட்டி, உதிரும் கேலிக்கும் பதில் சொல்கிற வழக்கமில்லை. ஒரு புன்னகையில், 'என் கம்பீரம் உனக்கு வராது' என்பதைச் சொல்லாமல் சொல்லிப் போய்விடுவார்.

"இருபத்திநாலு மணி நேரத்துல ஆறு மணி நேரம்தான் உத்தியோகம் பார்க்க வரோம். அந்தக் கொஞ்ச நேரத்தில் வேற எதையும் யோசிக்கிறதோ, பேசறதோ, பையன்களைப் பற்றி நினைக்காமல் இருக்கறதோ பாவம் கல்யாணி!" என்று அவளிடம் ஒருதரம் சொல்லியிருக்கிறார், தமிழரசு சார். இது கூடப் பள்ளி நேரத்தில் அல்ல. திருப்போரூர் சந்தைக்கு ஒரு ஞாயிற்றுக் கிழமை காலை வரச் சொல்லியிருந்தார். சந்தையில் தற்செயலாகச் சந்தித்துக் கொண்ட சக ஆசிரியர்கள் போலொரு பாவனை. கண்ணியமான இடைவெளி

# பொத்திவைத்த பூந்தோட்டம்

பா. ராகவன்

விட்டு நின்று, இளநீர் சாப்பிட்டபடி பேசினார்.

தன்னால் ஏன் இப்படியொரு அர்ப்பணிப்பு உணர்வுடன் வேலை பார்க்க முடியவில்லை என்று அவளுக்குக் குற்ற உணர்ச்சியாயிருந்தது. அவரை நெஞ்சுக்குள் நிரப்பிக் கொண்ட தினத்திலிருந்து இப்படித்தான். ஸ்டாஃப் ரூமில் இருக்கும் போதும் சரி; வகுப்பறையிலாயினும் சரி, எந்தக் கணத்திலும், யாரும் தன் மனத்தைத் திறந்து பார்த்துவிடப் போகிறார்களோ என்று உதைப்பாகவே இருக்கும். கவனமாக நாலு சுவர் எழுப்பி, ரகசியமாக வளர்க்கிற பூந்தோட்டம். கண்ணில் படாவிட்டால் என்ன? காற்றில், வாசனை பரவாமலா இருக்கும்?

ஆனால், தமிழரசு சாருக்கு அப்படியொரு கவலை இருப்பதாகவே அவளுக்குத் தெரியவில்லை.

"நாம் என்ன இருடறோமா? கொலை செய்யறோமா? சந்தோஷமா ஒருத்தரை ஒருத்தர் நேசிக்கிறோம். கல்யாணம் செஞ்சுக்கப் போறோம். ஆட்டமா போடறோம்? கவலையைத் தேடித் தேடி சேகரிக்காதே கல்யாணி. எத்தனை நாள் பழக்கம்! பள்ளிக் கூடத்தில் ஒருத்தருக்கானா சின்ன சந்தேகம் வந்திருக்குமா? அங்கே நான் ஒரு வாத்தியார். நீ சக டீச்சர். இதுக்கு மேல



ஒரு சின்ன உரிமை உன்கிட்டே எடுத்திருப் பேனா?"

சரிதான் தவறிக் கூட ஒருமையில் அழைத்த தில்லை. தனித்திருக்கையில், அவளுக்கு மட்டுமேவெனப் பொத்திவைத்துப் பூச்சொரி யும் பிரத்தியேகமான முறுவலை மறந்தும் வெளிப்படுத்தியதில்லை. சந்தேகமற்ற, அச்சமற்ற, தத்தளிப்போ- தடுமாற்றமோ அற்ற நேர்ப் பார்வைதான் பார்ப்பார். பேச வேண் டிய விஷயம் தீர்மானமான, வழுக்காத சொற் களில் நறுக்கென்று வந்து விழும். மெருகு குலையாத அந்த கம்பீரமே அவளைக் கிரங்க வைக்கும்.

ஆனால், தன்னால் ஏன் அப்படியொரு கம் பீரம் பேண முடியவில்லை? தமிழரசு சார் கடந்து போகிற போதெல்லாம் பார்வை, திருட் டுப் பாய்ச்சலில் அவர் நிழலைத் துரத்துவதை அவளால் தவிர்க்க முடிந்ததில்லை.

இதை ஒருதரம் அவரிடமே சொன்ன போது, கரங்களால் தரமுடியாத ஓர் அர வணைப்பை விழிகளில் காட்டிப் புன்னகை செய்தார்.

"இயல்பா இரு கல்யாணி. நம் உத்தியோகம், மத்தவங்களோடது மாதிரியா? படிக்கிற பசங் களுக்கு வாத்தியார்ங்கறது ஆம்பளையோ பொம்பளையோ இல்லை. வாத்தியார், வாத்தியார்தான். அந்த உயரத்தைக் காப்பாத் திக்கணுமில்லையா?"

அதுதான் அவளுக்குக் கவலையாக இருந் தது. ஓர் ஆசிரியையாகப் பணியாற்றுவதற்கான தகுதியை மனத்தளவில் தாம் இழந்து கொண் டிருக்கிறோமோ என்று நினைத்தாள். வகுப்பில் நிற்கும் போதெல்லாம், இந்தக் கணம் நம் காதல் யாராவது ஒரு பையனுக்குத் தெரிந்து போனால் என்னாவது என்று அஞ்சினாள். வாய் திறந்து, தானே சொன்னால்தானா என்ன? விழிகள் அள்ளியெடுத்துக் கடைபரப்பி விடாதோ? தரையில் கால்பாவாமல் மிதக்கிற காட்சிதான் காட்டிக் கொடுத்து விடாதோ? திடீர் திடீரென்று செயலற்றுப் போய் கண் சொருகி நிற்கிற கோலம் வெளிப்படுத்தி விடாதா என்ன?

உண்மையில், அவள் நினைத்துக் கவலைப்பட வேறுபல விஷயங்களும் இருந் தன. முக்கியமாக அவளது வீடு. ஒற்றை ஸ்ரீசூர்ணமும் வெற்றிலைச் சிவப்புமாக எப் போதும் வாசல் திண்ணையில் சாய்ந்திருக்கும் வயதான அப்பா. இப்போதெல்லாம் அவளைக் கரையேற்றுவது பற்றிய கவலையுடன் ஞாயிற் றுக்கிழமை பொழுது புலரும் வேளைகளில் மஞ்சள் பையும் மடித்த ஜாதகமுமாகக் கிளம்பி விடுகிறார். ஆயிரம் வருஷத்து மரபுகளை மனத்தில் நிறுத்தி, புறப்படும்போது அவர் உதடுகள் உச்சரிக்கும் மந்திரங்களைத் தமிழரசு சார் அறியமாட்டார். அதே ஞாயிறு காலை களில் அவர் ஒயர் கூடையுடன் மீன் வாங்கப் போவதைக் கல்யாணி பார்த்திருக்கிறாள்.

ஒருதரம் அவள் வீட்டுக்கு வந்திருந்தார் தமிழரசு சார். நான்காம் திருமுறையில் ஏதோ சந்தேகம் என்று அவளது அப்பாவிடம் விளக் கம் கேட்க வருகிற பாவனை. அப்படித்தான் அவள் நினைத்தாள். மனம் பரபரக்க, அவர் இருந்த ஒருமணி நேரமும் நிலை கொள்ளாமல் உலவிக் கொண்டிருந்தாள்.

ஆனால், தமிழரசு சார் வந்தவுடன் வணக் கம் சொல்லி, நாலைந்து சொற்கள் பேசியது தவிர அவள் பக்கமே அப்புறம் திரும்பவில்லை. வெற்று மார்பும் ஒடுங்கிய உடலும் சுடரும் ஸ்ரீசூர்ணமுமாக, "நான் அந்தக் காலத்து எஃப்.ஏ" என்று ஆரம்பித்த அப்பாவிடம் தீவிர மாக ஏதோ கேட்டுக் கொண்டிருந்தார்.

பேச்சு கொஞ்சம் சமதளத்துக்கு வந்தபோது, கல்யாணியின் தந்தை கேட்டார் : "நீங்க நாஸ் திகரா?"

பெயரும், எதுபற்றியுமான விஷயங்களைக் கையாள்கிற விதமும், பேச்சுத் தொனியும் தனக்கு அப்படித்தான் சுட்டிக் காட்டுவதாகப் பிறகு சொன்னார்.

"குடும்பமே கம்யூனிஸத்துல பற்று கொண்டு வளர்ந்ததுதான் சார். மனுஷனுக்கு மிஞ்சின விஷயமில்லைங்கறது நம்பிக்கை. சமுதாயத் துக்கு மிஞ்சின கோயில் இல்லைங்கறதுதான் அடிப்படை. என் அப்பா, ஆதியிலே காங்கிரஸ் காரர்தான். அப்புறம் கம்யூனிஸ்ட் ஆனவர், ஜெயிலுக்கெல்லாம் போயிருக்காரு."

'ஓஹோ' என்றார் கல்யாணியின் தந்தை. "அவாவாளுக்கு ஓரோர் நம்பிக்கை. எதை நம்பறோம்ங்கறதை விட, எத்தனை தீவிரமா இருக்கோம்ங்கறதுதான் முக்கியம்" என்று என்னவோ சொல்லி வைத்தார்.

அந்தக் கணம் குறுக்கே புகுந்து, இவர்தான் உனக்கு மாப்பிள்ளையாக வரப் போகிறவர் என்று சொன்னால், அதை எப்படி எதிர்கொள் வார் என்று கல்யாணி எண்ணிப் பார்த்தாள். எதுவும் விரும்பத்தக்கதாயிருக்காது என்று தோன்றியது. நிறையக் கவலையும் கண்ணீரும்

> "என்னதான் ஜோடிப் பொருத்தம் ஜோரா இருந்தாலும் கண்திருஷ்டி படாம இருக்க என் கழுத்திலே திருஷ்டி பூசணிக்காயைச் கட்டி விடறது சரியாக இல்லே, மாலா!"
>
> - வி.பி. கிருஷ்ணசாமி

இனி சுமப்பதற்கான விஷயமாயிருக்கும் என்று பட்டது. அவசரமாகத் தோட்டத்துப் பக்கம் சென்று விட்டாள். தமிழரசு சார் கிளம்பும் போது, ஏனோ அவரை மறுபடி சந்திக்க வேண்டாம் போலிருந்தது.

டோரா டீச்சர் வலுக்கட்டாயமாக அவளை இழுத்துக் கொண்டு சத்துணவுக் கூடத்துக்குச் சென்றாள். இருபது, முப்பது பையன்களும் ஏழெட்டுப் பெண்களும் அனைத்து ஆசிரியர்களும் சூழ்ந்திருக்க, மஞ்சள் சுவரில் கரியால் எழுதப்பட்டிருந்த வாசகம்தான் அவளுக்கு முதலில் கண்ணில் பட்டது. கடவுளே! துளிர்விடும் வயதில் என்னவொரு வக்கிரம்?

"யாருடா எழுதினது? மரியாதையா சொல்லிட்டா பொழைச்சீங்க! இல்லை, ஒவ்வொருத்தன் கையெழுத்தா செக் பண்ணி, கண்டு பிடிச்சி, அடுத்த நிமிஷம் டிஸி தரப் பண்ணிடுவேன். படிக்க வந்திருக்கீங்களா? பொறுக்கித்தனம் செய்ய வந்திருக்கீங்களா? ம்?"

தமிழரசு சார் உரத்த குரலில் மிரட்டிக் கொண்டிருந்தார்.

"நானில்லை சார்! நானில்லை சார்!" என்று கொத்துக் கொத்தாகக் குரல்கள் இடைவெளி விட்டு விட்டுக் கேட்டுக் கொண்டிருந்தன. சுவரில், பகிரங்கமாகிவிட்ட தன் பெயரைக் கண்டு அந்தப் பெண் அழுது கொண்டிருந்தது. இயல்பில் மிகவும் பயந்த சுபாவமுள்ளவள் அவள். ஒன்பதாம் வகுப்பு 'சி' பிரிவில் அவள் இருக்கும் இடம் கூடத் தெரியாது. அவளை ஒரு பையனுடன் இணைத்துக் கிசுகிசுத்திருந்தது, சுவர் வாசகம்.

கரியால் கிறுக்கப்பட்டிருந்த எழுத்துகளின் அமைப்பைப் பார்த்ததுமே கல்யாணிக்கு எழுதியவன் யார் என்று தெரிந்து விட்டது. அவள் வகுப்புப் பையன்தான். பாதிக்கப்பட்டிருந்த பெண்ணும் அவனுடன் இணைத்து எழுதப்பட்டிருந்த பையனுங்கூட அவளது வகுப்புக்காரர்கள்தான்.

ஒரு கணம், எழுதிய அந்தப் பையனை இழுத்து வரச் சொல்லி நாலு சாத்து சாத்தலாம் என்று தோன்றியது கல்யாணிக்கு. வகுப்பிலேயே மிக உயரமானவனும் அதிக வயதும் கூட உள்ளவன். தமிழரசு சார் சொல்வதுபோல டிஸி. கொடுத்து விடலாம். விருப்பமில்லாமல் வகுப்பில் இருப்பவனுக்கு அது ஆறுதலான விஷயமாகக் கூட இருக்கலாம். ஆனால் தலைமையாசிரியரின் இயல்பு அதற்கு ஒத்துழைக்காது. கண்டித்து விட்டுவிடலாம்; முதல் முறை தானே என்று சொல்லிவிடக் கூடும். அதன் பின் வகுப்பில் அவனை எதிர்கொள்வதில் தனக்குச் சிலபல சிக்கல்கள் வரலாம் என்று அவள் நினைத்தாள். நாளையே தமிழரசு சாருக்கும் தனக்குமுள்ள காதலைக் கண்டு பிடித்து, சத்துணவுக்கூடச் சுவரில் அசிங்கமாக எழுதி விட்டால்?

ஐயோ என்றிருந்தது அவளுக்கு. அவசரமாக அந்த இடத்தைவிட்டு வெளியே வந்தாள். ஆசிரியராக இருக்கத் துளி கூடத் தகுதியற்றுப் போய்விட்டதாகப் பட்டது. கேவலம், தன்னிடம் பயிலும் மாணவனிடம் பயப்படுகிறோம்! எழுதிக் கொடுத்து விட்டுப் போய்விடலாமா என்று நினைத்தாள்.

ஸ்டாஃப் ரூமுக்குச் சென்று ஒரு குவளை நீர் அருந்திவிட்டுத் தலையைப் பிடித்துக் கொண்டு அமர்ந்தாள். ஏனோ, உடனே வீட்டுக்குப் போய்விட வேண்டும் போலிருந்தது.

அப்பா மிகவும் கோபமாக இருந்தார். முன்னதாகத் தனக்கு இரவு உணவு வேண்டாம் என்று சொல்லியிருந்தார்.

கல்யாணிக்கு வியப்பாகவும் கலக்கமாகவும் இருந்தது. எதிர்வீட்டுப் பையன், யாரோ ஒரு பெண்ணைக் காதலிக்கிறான். அவளைத்தான் திருமணம் செய்து கொள்ளப் போவதாக வீட்டில் சொல்லியிருக்கிறான். ஒழிந்த வேளையில் அவனது தந்தை, கல்யாணியின் அப்பாவிடம் தன் வருத்தத்தைப் பகிர்ந்து கொண்டிருக்கிறார்.

காதல் ஒருபோதும் சமுதாயப் புரட்சியை உண்டு பண்ணப் போவதில்லை என்று கல்யாணியின் அப்பா சொன்னார். மாறாக, அது உறவுகளை வெட்டிச் செல்வது தவிர, வேறெதைச் சாதிக்கிறது? பெற்றவர்கள் மனம் வருந்தச் செய்கிற காரியம் எப்படி உன்னதமான விஷயமாயிருக்கக் கூடும்? எல்லா பெற்றோரும் காதலை எதிர்ப்பதன் காரணம், அதன் மீதான வெறுப்பல்ல. தம் குழந்தைகளின் திருமணம், அவர்களின் ஆயுள் கனவு. பார்த்துப் பார்த்து சிலை வடிக்கிற சிற்பி, அதன் கண்ணைத் திறப்பது போன்றதொரு வைபவம்.

"எனக்கு மனசே சரியில்லை கல்யாணி" என்றார் அப்பா.

வாழ்வில், இருள் சூழப்போகும் ஒரு குகையை நோக்கித் தான் பயணம் செய்து கொண்டிருப்பது போன்ற உணர்வு அவளுக்கு ஏற்பட்டது. அப்பாவை எதிர் கொள்வது

மிகவும் சிக்கலாக இருக்கப் போகிறது என்று நினைத்தான். தனக்குப் பின் வரிசையாகக் காத்திருக்கும் இரண்டு தங்கைகளின் ஞாபகம் வந்து, மேலும் கலவரமாயிற்று. எளிய உணவு, எளிய வாழ்க்கை, ஆடம்பரமற்ற குடித்தனம் என்ற போதும் வீட்டில் இதுகாறும் அமைதி குலைந்த தில்லை. மூன்றும் பெண்கள் என்கிற கவலை அடி மனத்தில் இருக்கக் கூடும்தான். ஆனாலும் அப்பாவைத் தன்னம்பிக்கையும் தெய்வ நம்பிக்கையும் ஆயுள் முழுவதும் சேமித்த சொற்பத் தொகையும் சுவாசித்துக் கொண்டிருக்கச் செய்திருக்கின்றன. தனது ஒரு சொல், அவரை நிலை குலையச் செய்து விடப் போகிறதோ என்று அஞ்சினான். தள்ளிப் போடுவதில் அர்த்தமில்லை. எப்படியும் சொல்லி விட வேண்டும். எப்படிச் சொல்லப் போகிறேன்?

**ரா**ஜலட்சுமி திரையரங்கில் உலகம் சுற்றும் வாலிபன். புதிய காப்பி. போகலாமா என்று கல்யாணியின் தங்கை கேட்டாள்.

குடும்பத்தோடு சினிமா போய் வெகு நாட்களாகி விட்டது என்று அம்மா ஞாபகப்படுத்த, சட்டையை எடுத்துப் போட்டுக் கொண்டார் கல்யாணியின் அப்பா.

முருகைய நாடார் கடை தாண்டி, படூர் சாலையில் நடந்து திரையரங்கை அடைந்த போது கல்யாணிக்கு உற்சாகம் மீண்டாற் போலிருந்தது. ஸ்பீக்கர் பாட்டும் பொரி கடலை வியாபாரமும் சைக்கிளில் வைத்துப் பூ விற்கிற கூட்டமும் குறுக்கும் நெடுக்குமாக ஓடி ஆடும் சிறுவர்களுமாகத் திருவிழா போலிருந்தது சூழ்நிலை.

ஒரு ரூபாய், பத்து பைசா பெஞ்ச் டிக்கெட்டுகள் ஐந்து வாங்கி வந்தார் அப்பா.

நாலு முழம் பூ வாங்கி, அம்மா வரிசையில் நிற்க வைத்து ஆளுக்கொரு முழம் வைத்து விட்டபோது வயதும் உத்தியோகமும் காதலும் கூட மறந்து, சிறுமியாகி விட்டது போலிருந்தது கல்யாணிக்கு.

**ப**டம் முடிந்து வெளியே வரும்போது தான் தமிழரசு சாரைப் பார்த்தார்கள்.

"அட, வாங்க சார்!" என்றார் கல்யாணியின் அப்பா.

கல்யாணிக்குச் சட்டென்று மனத்தில் நூறு பூ பூத்தாற்போலிருந்தது, அவரைப் பார்த்ததும்.

"படம் நல்லாயிருக்கா?" என்று சிரித்துக் கொண்டே கேட்டார் தமிழரசு சார்.

"வருஷம் தவறாமல் வரும் போதெல்லாம் பார்க்கற படம்தானே? போரடிக்கவே அடிக்காது!" என்றாள் கல்யாணியின் தங்கை.

கல்யாணிக்கு என்ன பேசுவதென்றே புரியவில்லை. பார்த்துக் கொண்டிருப்பதே போதும் போலிருந்தது. சற்றுமுன் குடும்பத்துடன் தான் அனுபவித்த மகிழ்ச்சிக்கும் இப்போது அனுபவிக்கிற மகிழ்ச்சிக்கும்தான் எத்தனை வித்தியாசம்? சிலீரென்று வாய்க்காலில் விழுந்து எழுந்திருப்பது போலொரு பரவசம்! திகிலும் பரபரப்பும் ஆனந்தமும் கலந்து வயிற்றில் சடுகுடு ஆடுகிற சங்கடமான சந்தோஷம்!

"பேசிட்டு வா கல்யாணி" என்று அப்பா நாலடி நடந்து போய் விடவே, அம்மாவும் தங்கைகளும் கூட அவளை விட்டு அகன்று விட்டார்கள்.

இந்தக்கணம் தன்னையும் தமிழரசு சாரையும் தியேட்டர் வாசலில் தனியாகப் பார்ப்பவர்கள் என்ன நினைப்பார்கள் என்று யோசித்தாள். தொடர்ந்து யோசிக்க வேண்டாம் என்று அவசரமாக முடிவு செய்து, "நைட் ஷோ பார்க்க வந்தீங்களா?" என்று தமிழரசு சாரைப் பார்த்துக் கேட்டாள்.

"உம்!" என்று புன்னகையுடன் ஆமோதித்தவர், "இங்கே உன்னைப் பார்ப்பேன்னு எதிர்பார்க்கவேயில்லை. எவ்ளோ சந்தோஷமா இருக்கு தெரியுமா?"

> **''இந்த ஏரியாவுல போலீஸ் கெடுபிடி அதிகமா?''**
>
> **''எப்படிக் கண்டு பிடிச்சீங்க?''**
>
> **''எல்லா ஆட்டோவுலயும் 'போலீசுக்கு இலவசம்'னு எழுதியிருக்கே!''**
>
> **– அம்பை தேவா**

"எனக்கும்தான்!" என்றாள் ரகசியமாக.

தூரத்தில் அப்பா திரும்பிப் பார்ப்பது தெரிந்தது. "வரேன்!" என்று அவசரமாகக் கிளம்பியவள், அதிர்ந்து நின்றாள். டிக்கெட் கவுன்ட்டரின் எதிரே வரிசையில் நின்றபடி கலியமூர்த்தி இவர்களைப் பார்த்துக் கொண்டிருந்தான். ஒன்பதாம் வகுப்பு சி பிரிவில் படிக்கிற மிக உயரமான பையன். சத்துணவுக் கூடச் சுவரில் கிசுகிசு எழுதுகிறவன். கல்யாணிக்கு உயிரே போய் விடும் போலிருந்தது.

**ம**றுநாள் அவன் பள்ளிக்குச் செல்லவில்லை. மிகவும் கவலையாகவும் பதைப்பாகவும் இருந்தது. படிக்கிற பையன்கள் திசை தப்பிப் போவது எதனால் என்று யோசித்துப் பார்த்தாள். சினிமா உள்ளிட்ட கேளிக்கைச் சாதனங்களைத் தடை பண்ணும் ஒரு கருணையுள்ள சர்வாதிகாரி நாட்டை ஆண்டால் எல்லா பிரச்னைகளும் தீர்ந்து விடும் என்று என்னவெல்லாமோ தோன்றியது. அந்தப் பையனைக் கட்டி வைத்துப் பளார் பளார் என்று மனதுக்குள் ஆசை தீர அடித்துப் பார்த்

தாள். கூடவே, தன் மீதுதான் தவறு என்றும் தோன்ற, ஓசைப்படாமல் அழுது தீர்த்தாள். இப்போது எழுதியிருப்பானா? காலையே எழுதியிருப்பானா? அல்லது எல்லோரும் சென்ற பின் மாலை எழுதுவானா என்று எண்ணி எண்ணிக் கவலைப்பட்டாள். "ஏன் ஸ்கூலுக்குப் போகலை? உடம்பு சரியில்லையா?" என்று கவலையுடன் கிட்டே வந்து தொட்டுப் பார்த்த அம்மாவிடம் எரிந்து விழுந்தாள். முள்ளில் நின்று ஒரு நாளைக் கழித்து விட்டு, மறுநாள் பள்ளிக்குச் சென்றாள்.

நேரே சத்துணவுக் கூடத்துக்குச் சென்று பார்த்தவள், அங்கு ஏதும் எழுதப் படாததில் சற்றே ஆசுவாசம் கொண்டு வகுப்புக்குப் போனாள்.

வகுப்பு அமைதியாக இருந்தது. மாணவர்கள் பாடம் கேட்கத் தயாராக இருந்தது போல் பட்டது. உள்ளே நுழைந்ததுமே அவள் பார்வை கலியமூர்த்தியைத் தேடியது. வழக்கம் போல் அவன் நேரத்துக்கு வந்திருக்கவில்லை. வகுப்பில் அவன் இல்லாதது ஆறுதலாக இருந்த



போதிலுங்கூட, எங்கிருந்தாலும் அவனை இழுத்து வரச் செய்து, ஏதேனும் ஒரு காரணத்துக்காக வலிக்க வலிக்க அறைய வேண்டும் போலிருந்தது.

இதென்ன? நான் மனுஷிதானா? இப்படியொரு குரூர உணர்வுள்ளவள் ஆசிரியராக இருக்க என்ன தகுதி இருக்கிறது? ஒரு கணம் தன்னையே அப்படி வலிக்க வலிக்க இம்சித்துக் கொள்ள வேண்டும் போலவுமிருந்தது, அவளுக்கு. சுவரில் எழுதிவைக்க வேண்டும் என்பது கூட இல்லை; தான் கண்டதை அவன் காற்றில் ஒலிபரப்பி விட்டால் கூடப் போதும். மாணவர்களுக்கு விஷயம் தெரிந்தால் என்ன நினைப்பார்கள்?

"பையன்களுக்கு வாத்தியார்ங்கறவர் ஆம்பளையோ, பொம்பளையோ இல்லை கல்யாணி" – காதுகளில் ஒலிக்கிற தமிழரசு சாரின் குரல். அவருக்கும் அவர் கட்டிக் காக்கிற கம்பீரத்துக்கும்தான் எத்தனை தலை குனிவு?

பீரியட் முடிந்ததற்கான மணி அடித்தது. கலியமூர்த்தி வந்தால் தன்னை வந்து பார்க்கச் சொல்லி விட்டுப் போனாள் கல்யாணி.

பதினொன்றே காலுக்கு அவன் வந்தான். யாருமில்லாத ஸ்டாஃப் ரூமில் கதவைச் சாத்தி விட்டு, "ஏன் லேட்டு" என்றாள் கல்யாணி.

அவன் பதில் பேசவில்லை. தலை குனிந்திருந்தான்.

"கேட்கிறேனில்லை? ஏன் முதல் பீரியட் கிளாஸுக்கு வரலை?"

தன்னையறியாமல் குரல் உயர்வதை அவள் உணர்ந்தாள். படபடப்பு கூடிக் கொண்டிருப்பது போல் பட்டது.

சட்டென்று அவன் அழுது விட்டதில் ஒரு கணம் அதிர்ந்து போனாள்.

"உங்க முன்னால் நிக்கறதுக்கே வெட்கமா இருக்கு டீச்சர். என்னை மன்னிச்சிடுங்க டீச்சர்."

கல்யாணிக்கு எதுவும் புரியவில்லை. மிகவும் குழப்பமாக அவனைப் பார்த்தாள்.

"அன்னிக்கு செவுத்துல எழுதினது நான்தான் டீச்சர். நீங்க வந்து பார்த்ததுமே கண்டு பிடிச்சிட்டீங்க. எனக்குத் தெரியும்!"

"நீ அங்க இருந்தியா?"

"ஆமாம் டீச்சர்."

"நான் பார்க்கலையே?"

"ஒளிஞ்சிட்டிருந்தேன் டீச்சர். ஆனா, நீங்க கண்டு பிடிச்சப்புறமும் என்னை சார்கிட்ட மாட்டிவிடாம இருந்தீங்களே... இனிமே சத்தியமா இப்படியெல்லாம் நடந்துக்க மாட்டேன் டீச்சர்."

குப்பென்று கோடி கதவுகள் திறந்து, காற்று அள்ளிக் கொண்டு போவது போலிருந்தது அவளுக்கு. தியேட்டரில் தன்னையும் தமிழரசு சாரையும் ஒன்றாகப் பார்த்ததில் அவனுக்குத் தவறாக ஏதும் தோன்றியிருக்க முடியாது என்று இப்போது உறுதியாகப் பட்டது. பையன்களுக்கு வாத்தியார், வாத்தியார் தானே? ஆணோ, பெண்ணோ இல்லை.

"நீ இனிமே தப்பு செய்ய மாட்டே. நான் நம்பறேன். ஒழுங்கா கிளாஸுக்குப் போ" என்று தோளில் தட்டி அனுப்பியபோது, தான் ஒரு நல்ல டீச்சர்தான் என்பதிலும் அவளுக்கு நம்பிக்கை ஏற்பட்டது.

உற்சாகமாக இருந்தது. துடிப்புடன் ஏதாவது செய்ய வேண்டும் போலிருந்தது. இன்று மாலை அப்பாவிடம் தன் விஷயத்தைச் சொல்லிவிடலாம் என்று நினைத்தாள். எதையும் சமாளித்து விட முடியும் என்று தோன்றியது.

பீரியட் முடிந்து களைப்புடன் ஸ்டாஃப் ரூமுக்குள் நுழைந்த தமிழரசு சாரை முதல் முறையாகக் கண்ணை விரியத் திறந்து, அச்சமின்றி, மலர்ச்சியுடன் பார்த்தாள். "குட் மார்னிங் சார்!" என்றாள் புன்னகைத்தபடி. ●

கலியாணமாக, புத்திரபாக்யம் பெற, வியாபாரத் தடைகள் நீங்க, தம்பதியர் சந்தோஷமாக இல்லறம் நடத்த, தோஷங்கள், பித்ரு சாபங்கள் நீங்க, மற்றும் சகல துக்கங்களும் மறைய

# ஸ்ரீ ஸர்ப நாராயண தன்வந்த்ரி மஹா யக்ஞம்



ஸ்ரீ ஸுதர்சன சித்தி பீடத்தின் சார்பில், ஸ்ரீ ஸர்ப நாராயண தன்வந்த்ரி மஹா யக்ஞம், தொடர் வரிசையில் 41வது யக்ஞமாக, உலக அமைதிக்காகவும் சுபிட்சத்திற்காகவும் நடத்தப்படவுள்ளது. இந்த யக்ஞத்தின் முன்னார்ந்த நிகழ்ச்சிகள் வருகின்ற மார்ச் 21ந் தேதி 1999 (ஞாயிற்றுக்கிழமை) அன்று தொடங்கும். ஆந்திர மாநிலத்தின் கிருஷ்ணா ஜில்லாவில் (குடிவாடாவிலிருந்து சுமார் 20 கிலோ மீட்டர் தொலைவிலுள்ள) உனிகிளி என்ற இடத்தில் அமைந்துள்ள ஸ்ரீ நாக ஸுப்ரமண்யேஸ்வர ஸ்வாமி கோவிலில் இந்த யாகம் 9 அக்னி குண்டங்களுடன் 22.3.99 அன்று மாலை 3:00 மணியளவில் தொடங்கி நடைபெற உள்ளது.

இப்பீடத்தின் தலைவரும், சாயா அதர்வண வேத விற்பன்னருமான மேன்மை தங்கிய ஸ்ரீ வி.வி. ஸ்ரீதர் குருஜி அவர்களால் இம் மஹா யக்ஞம் நடத்தப்படும்.

பக்தர்களின் நன்மைக்காக இந்த யக்ஞத்தில் உன்னத ப்ரயோக சாஸ்திர முறைகளின் படியும், சாயா அதர்வண வேதச் சாயலிலும் ஸ்ரீ க்ருஷ்ண மோஹன தந்திரத்தின் தழுவலிலும், ஸ்ரீ ந்ருஸிம்ஹ தாபின்யோபநிஷத்தின் வழி சார்ந்தும் ஸ்ரீ குருஜி அவர்கள் கல்யாண ஸர்ப ப்ரயோகம், சந்தான ஸர்ப ப்ரயோகம் போன்ற சிறப்பு ப்ரயோகங்களை நடத்தவுள்ளார். மூளை புற்றுநோய், இருதய நிறுத்தம், சிறுநீரக நோய்கள், இரத்த கோளாறுகள், எலும்பு மஜ்ஜை, தோல் சம்பந்தமான வியாதிகள் போன்ற பல்வேறு வகைப்பட்ட தீரா உயிர் கொல்லி நோய்களின் வருந்துதலிலிருந்து விடுபட

தன்வந்த்ரி ப்ரயோகங்கள் நடைபெறவுள்ளது. சாயா அதர்வண வேத முறைப்படி பல்வேறு தன்வன்த்ரி மந்திரங்களின் உச்சாரணத்தின் பொழுது பல்வகை மூலிகை மருந்துப் பொருள்கள் இவ்ஹோம குண்டத்தில் வேயப்படும். நித்ய வாழ்வில் பித்ரு தோஷத்தால் அவதியுறும் பிறபிரச்சனைகளிலிருந்து விடுபடவும், மேலான பல நற்பயன்களைப் பெறவும் இவ்யக்ஞத்தில் கலந்து கொள்ளுதல் அவசியமாகும்.

நேரடியாக யக்ஞத்தில் கலந்து கொள்ள இயலாதவர்கள் உங்கள் குடும்பத்தில் உள்ளவர்களின் பெயர், முகவரி நட்சத்திரங்களுடன் ரூ. 101, 251, 501, 1001 என்று செலுத்தி பதிவு செய்து கொண்டால் யாகத்தில் சங்கல்பம் செய்து பின்பு பிரசாதம் அனுப்பிவைக்கப்படும்.

**இந்நற்பணிக்கு உதவி செய்ய விரும்பும் தாராள மனமுள்ளவர்கள் தங்களால் இயன்ற பணவுதவியையோ பொருளுதவியையோ கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.**



**வருமான வரி விலக்கு உண்டு.**

**வரி விலக்கு எண் 2 (411 - 1998 to 2001)**

## ஸ்ரீ ஹேதிராஜ ப்ரயோக யக்ஞ சமிதி,

**தலைமை அலுவலகம்:** நெ. 4, குளக்கரை தெரு, சிட்லப்பாக்கம், சென்னை – 600 064. போன்: 2365976

**நிர்வாக அலுவலகம்:** நெ. 27, தம்பையா சாலை விரிவு, மேற்கு மாம்பலம், சென்னை: 600 033. போன்:4831805

Advt

# குறையொன்றுமில்லை

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

கைகேயி ராமனைப் பார்த்து, "காட்டுக்கு நீ போக வேண்டும்" என்று சொன்னபோது, அதை உடனே அங்கீகரித்தானாம் ராமன். எதனால் அங்கீகரித்தான்...?

மனத்தினால் அங்கீகரித்தான்! அப்புறம் தான் வாக்கினால் 'போகிறேன்; விடையும் கொண்டேன்' என்று புறப்பட்டான். வாக்கு வருவதற்கு முன்னால் மனம் பேசி விட்டது.

எல்லோரும் உலகிலே வாக்கினால் அங்கீகரிப்பார்கள். மனத்தினால் அங்கீகரிப்பது தான் கஷ்டம். ஐந்நூறு ரூபாய் சம்பாவனை பெற்ற ஒருவரை 'திருப்தியா?' என்று கேட்டால், ரொம்ப திருப்தி என்கிறார். ஆனால் மனசு, 'ஆயிரம் கொடுத்திருக்கக் கூடாதா...?' என்று நினைக்கிறது! இங்கே வாக்குக்கும் மனசுக்கும் சம்யோகம் இருக்கிறதா பாருங்கள்! ஒருமைப்பாடு இல்லை! இரண்டும் சண்டை போட்டுக் கொண்டிருக்கின்றன.

ஆகையினாலே, நித்தியம் சஹஸ்ரநாமம் பாராயணம் பண்ணினாலும் மனம் அதில் இருந்தாலன்றிப் பயனில்லை. அப்படி மனம் லயித்துப் பண்ணப் பண்ண நம் மனமும் அடங்கி நிற்க ஆரம்பிக்கும். இதை நாம் மகான்களின் அனுஷ்டானங்கள் மூலமாகத் தெரிந்து கொள்ளலாம்.

வேத வேத்யன் விஷ்ணு: வேதாந்த வேத்யன், ஸ்ரீயஃப்பதி, ஜகத்காரணன், சர்வ வியாபி, சர்வ ரக்ஷகன், சர்வாந்தர்யாமி என்று பலவிதமாக விஷ்ணுவினுடைய பெருமை பேசப்படுகிறது.

வேத வேத்யன் - வேதத்தினால் எப்போதும் எங்கும் சொல்லப்படுகிறவன்.

ரிக், யஜுர் வேத மந்திரங்களை சொல்லி அக்னி தேவதையை நாம் உபாஸனை பண்ணுகிறபோது, யக்ஞத்திலே பிரதிஷ்டை பண்ணி ஹோமாதிகளெல்லாம் பண்ணுகிறபோது, அக்னிக்கு உள்ளேயிருந்து நமக்குப் பலனைக் கொடுக்கக் கூடியவன் யக்ஞ ரூபியான விஷ்ணு என்று தெரிகிறது.

விஷ்ணுவின் பெருமையை நிறையச் சொல்கிறது வேதம். அப்படிச் சொல்லிக் கொண்டே வருகிறபோது விஷ்ணுவையும் அக்னியையும் அபின்னமாய்ச் சொல்கிறது.

பின்னம் என்றால் 'வேறு' என்று அர்த்தம். அபின்னம் என்றால் ஒன்று. விஷ்ணுவும் யக்ஞமும் ஒன்று.

விஷ்ணுவைக் கோயிலில் போய் சேவிக்கிறோம். சங்கு - சக்ராதிகளோடு காட்சியளிக்கிறான். அதற்கு அர்ச்சா மூர்த்தி என்று பெயர். நாம் அர்ச்சிப்பதற்கு யோக்யன், திவ்ய மங்கள விக்ரஹமாக ஆச்சர்யமாகக் காட்சியளிக்கிறான். நாம் எந்த உருவத்தில் பகவானை நினைக்கிறோமோ அந்த உருவத்தில் வந்து விடுவான். அதனால் பகவான், பக்தர்கள் விரும்பும் படியான ரூபத்திலே காட்சியளிக்கிறான்.

நீ ஸ்ரீநிவாஸனாக இரு என்றால் ஸ்ரீநிவாஸனாக இருப்பான். ஸ்ரீ ராமனாக வரவேண்டும் என்றால் ராமனாக வருவான். நாம் என்ன நினைக்கிறோமோ அந்த நினைப்பிலே காட்சி அளிப்பான்.

திருமங்கை ஆழ்வார் திருவள்ளூர் க்ஷேத்திரத்துக்குப் போனார். திருவள்ளூரில்

படுத்துக் கொண்டிருப்பவன் வீரராகவன். வைத்திய வீரராகவன் என்று பெயர் அவனுக்கு. அவனை தியானம் பண்ணினோமானால் ரோகமெல்லாம் நிவர்த்தி ஆகும். அவனைப் போய் சேவிக்கிறார் திருமங்கை ஆழ்வார் :

'திருஎவ்வுள் என்கிற இந்த திவ்ய க்ஷேத்திரத்தில் சாலிஹோத்திர மஹரிஷிக்குப் பிரத்யக்ஷமான எம்பெருமான் படுத்துக் கொண்டிருக்கிறானே... அவனே சக்ரவர்த்தித் திருமகன்...' என்கிறார்.

உடனே அந்த எம்பெருமான் இவர் வாக்கிலே தன்னை கிருஷ்ணனாக அனுபவிக்க வேண்டும் என்று ஆசை கொண்டானாம்! உடனே ஒரு க்ஷணம் கிருஷ்ணனாகக் காட்சியளிக்கிறான் வீரராகவன்!

உடனே திருமங்கையாழ்வார், 'வெண்ணெயைத் திருடினவன் இவன்தானே! என்று கோபஸ்த்ரீகளெல்லாம் கொண்டாடிய கிருஷ்ணன் அல்லவா இங்கே படுத்திருக்கிறான்!' என்று பாடுகிறார்.

இதோ பாருங்கள்... ராமனைக் கொண்டாடுகிறபோதே



கிருஷ்ணனும் வந்து விட்டான் நடுவிலே... அப்படி பகவான் ஆழ்வாரை மயக்கி கிருஷ்ண சரித்திரத்தை அவரிடம் வரவழைக்கிறான்.

பகவான் விவித ரூபமாகப் பல இடங்களில் பல ரூபமாகக் காட்சியளிக்கிறான். அந்த மாதிரி சங்கு சக்ராதி திவ்ய பூஷணாதிகளுடன் திவ்ய திருவா

7

பரணங்களுடன் காட்சியளிக்கிறான். இதை நாம் கண் கொள்ளாக் காட்சியாய் நேரே அனுபவித்து ஆனந்திக்கிறோம்.

**ய**க்ஞத்திலே அந்த மாதிரி சங்கு சக்ராதிகள் கொண்ட ரூபம் உண்டா என்றால், அது அமூர்த்தம் என்று பெயர். இது மூர்த்தம்; அது அமூர்த்தம். மூர்த்தம் என்றால் வடிவு; அமூர்த்தம் என்றால் வடிவில்லாதது.

அந்த மாதிரி வடிவில்லாமல், இங்கே அக்னி ரூபமாய்ப் பிரகாசிக்கிறான் யக்ஞத்திலே. ஆகையினால் இந்த யக்ஞ வாடிகை, அங்கே இருக்கிற ஹோம குண்டம், அக்னி இதெல்லாம் விஷ்ணு ஸ்வரூபம் என்று சொன்னால் அந்த இடம் எத்தனை பவித்ரமானது! கோயிலில் சென்று சேவிக்கிற மாதிரிதான் இதுவும்.

சர்வதோமுகம் என்றொரு பெரிய மஹாயக்ஞம் பற்றிச் சொல்லியிருக்கிறேன். அதிலே யார் ஆராதிக்கப்படுகிறார்கள் என்றால் விஷ்ணுதான். சர்வதோ முகம் என்றால் எங்கும் முகம். விஷ்ணு எல்லா திக்கிலும் முகம் உடையவன். எங்கும் நிறைந்தவன். ஆகையினாலே, அக்னியை முகமாக உடையவர்கள் தேவதைகள்; விஷ்ணுவை முகமாக உடையவர்கள் தேவதைகள் - என்று இப்படி இரண்டு முகங்களைச் சொல்கிறது வேதம். அதற்கும் மேலே சென்று, அக்னிக்கும் அந்தர்யாமியாயிருந்து அக்னியையும் செயல்படுத்தக்கூடியவன் விஷ்ணுவானதாலே அக்னியைப் போலன்றி இவன் எங்கும் முகம் படைத்தவன் என்றும் சொல்கிறது.

தேவதைகளின் வரிசையை நாம் எண்ணினோமானால் எங்கேயிருந்து எண்ணுவோம்...? அக்னியிலிருந்துதான் ஆரம்பிக்க வேண்டும். அதனால்தான் 'நக்ஷத்ரேஷ்டி' என்கிற பாகமானது கிருத்திகா நக்ஷத்திரத்திலேயிருந்து ஆரம்பிக்கிறது. வேத வழக்குப்படி நக்ஷத்திரங்களின் எண்ணிக்கை கிருத்திகையிலேதான் ஆரம்பம். கிருத்திகையில் ஆரம்பித்து பரணியிலே போய் முடிகிறது.

நாம் உலக வழக்கிலே அச்வினி, பரணி, கிருத்திகை என்று மூன்றாவது நக்ஷத்திரமாகக் கிருத்திகையைச் சொல்கிறோம். ஆனால் கிருத்திகாதான் முதல் நக்ஷத்திரம். ஏன் கிருத்திகாவை முதலில் எண்ண வேண்டுமென்றால் கிருத்திகா நக்ஷத்திரத்துக்கு அதிஷ்டான தேவதையாக இருக்கக்கூடியவன் அக்னி. அக்னிதான் முதல் தேவதை என்பதனாலே கிருத்திகையை முதலில் எண்ணு என்றது!

ஆகையாலே அக்னிதான் முதல் தேவதை.

அவனுடைய அதிர்ஷ்டான தேவதையாய் இருக்கக்கூடிய நக்ஷத்திரம் கிருத்திகா நக்ஷத்திரம். எனவே கிருத்திகை முதல் நக்ஷத்திரம் என்று வேதமே காரணம் காட்டுகிறது.

அக்னி : அவம : - அக்னியானது கடைகோடி; விஷ்ணு : பரம : - விஷ்ணுதான் பரமன். அவனுக்கு மேலான தேவதை இல்லை என்று சொல்லி முடிக்கிறது வேதம்.

**ப**ரம : என்ற சப்தத்துக்குப் 'பரோம' என்று அர்த்தம்.

'ம' என்றால் இல்லை என்று பொருள். 'பர:' என்றால் அவனைக் காட்டிலும் மேம்பட்டவன். அதாவது, ஒத்தாரும் மிக்காரும் இல்லாத மாமாயன் அவன்!

இத்தகைய ஏற்றமுடையவனாக யக்ஞ புருஷ

## அருள்வாக்கு

"**நா**ங்கள் 'ரிடையர்' ஆன கிழங்களாச்சே! தொழிலை விட்டு விட்டவர்களாச்சே! எங்களால் யாருக்கு என்ன உதவி பண்ண முடியும்?" என்கிறீர்களா? உங்களால் முடியாதா? உங்களால்தான் ஜாஸ்தி முடியும். நீங்கள் உங்களைப் பட்டுப் போன மரம் என்று நினைக்க வேண்டாம். மனசு வைத்தால் நீங்கள்தான் இந்த தேசத்தை தேவலோகமாக்கக்கூடிய கல்பக விருட்சங்கள் என்று நான் நினைக்கிறேன். தெய்வ பலத்தை நம்பி மனோபலத்தோடு காரியம் செய்தால், அதுவும் தனக்காக இல்லாமல், உலகத்துக்காகச் செய்தால் கிழத்தனத்தின் பலஹீனமும் ஓய்ச்சலும் இல்லாமல் யுவர்களை விட உத்ஸாஹமாகப் பண்ணலாம். கிழவன் நானே சொல்கிறேன். மற்றவர்கள் ஆ·பீஸ் காரியம் போக, மிஞ்சிய கொஞ்சம்

ளாக, யஜ்ஞத்தை ரக்ஷிக்கக்கூடியவனாக அவனைக் காட்டுகிறது வேதம்.

யஜுர் வேதத்தின் முதல் காண்டத்திலே விஷ்ணோ விஷ்ணோ! என்றே 'விளி' வரும்.

அத்ரி மஹரிஷிதான் வேதத்துக்குப் பதம் பிரித்தவர். அவர் எப்படிப் பிரித்துக் கொடுத்திருக்கிறாரோ, அப்படித்தான் நாமும் பிரிக்க வேண்டும். நமக்கு சமஸ்கிருத ஞானம் இருக்கு என்பதாலே எப்படி இஷ்டமோ அப்படிப் பதத்தைப் பிரிக்க முடியாது. அவர் இந்த விஷ்ணோ சப்தம் அழகான விளியாய் வெளிப்படும்படிப் பிரித்துக் காட்டியிருக்கிறார்.

இப்படி 'விஷ்ணோ!' என்று கூப்பிடுகிறதே வேதம்... அது எல்லா யக்ஞங்களையும் விவரிக்கிறது. எத்தனையெத்தனையோ யக்ஞங்கள். ஆனால்... அதையெல்லாம் சொல்வதிலே தனக்குத் திருப்தி இல்லை என்றும் சொல்லி விடுகிறது வேதம்!

வேதத்துக்கு மட்டும்தான் திருப்தியில்லை என்று அர்த்தம் கொள்ளக் கூடாது. நமக்கும் திருப்தி ஏற்படாது.

"ஹோம குண்டத்தை இந்த மாதிரி கட்டு, இந்த மாதிரி தர்பத்தைப் போடு, இந்த இடத்திலே போய் நில்லு, இந்த மந்திரத்தைச் சொல்லு, இந்த தேவதைகளை இப்படிக் கூப்பிடு, அங்கே உட்கார வை..." - இப்படியே அடியேன் சொல்லிக் கொண்டிருந்தால் எத்தனை நாழி கேட்பது?

யக்ஞ காரியங்களெல்லாம் நடந்து கொண்டேயிருந்தால் பார்க்கத் தோன்றும். கடைசியில் எப்போது பூர்ணாஹுதி என்று கேட்பார்கள். 'எப்போது முடியும்?' என்று அர்த்தம் அக்கேள்விக்கு!

அப்படிக் கேட்கலாகாது. அந்தக் காரிய கலாபங்களெல்லாம் நடந்து கொண்டேயிருக்கும். நம் இந்த்ரியங்களெல்லாம் அடங்கி நிற்கின்றன. ஒரே விஷயத்தில் ஈடுபட்டு மந்திரம் சொல்கிறோம். பர்வதம் போல் அசையாமல் இருந்து ஒரே தாரையாக யக்ஞத்தைப் பண்ண வேண்டும் என்று சொல்லப்படுகிறது.

அப்படிப் பண்ணினால் நிகரேயில்லாத மிக உயர்ந்த கர்மாவாக அது பரிமளிக்கும்.

அப்படிப் பரிமளிக்கிறபோது யக்ஞரூபியானவன் சமஸ்தத்தையும் நமக்குக் கொடுக்கிறான்.

யக்ஞ ரூபியாக மாத்திரம் இல்லை; யக்ஞத்திலே நாம் சமர்ப்பிக்கக்கூடிய ஹவிஸாக இருக்கிறான்; ஹவிஸை உண்பவனாக இருக்கிறான்; யக்ஞத்தின் பலனைக் கொடுக்கக்கூடியவனாகவும் அவனே இருக்கிறான்.

(தொடரும்)

போதில்தான் பொதுத் தொண்டு பண்ண முடியுமென்றால் ரிடையரான நீங்களோ, ஃபுல் டைமும் ஸோஷல் ஸர்வீஸ் பண்ணுகிற பாக்யம் பெற்றிருக்கிறீர்கள். ஆஃபீஸுக்குப் போய்வந்த காலத்தில் உங்களுக்குக் குடும்பப் பொறுப்பும் அதிகம் இருந்தது. இப்போது அதுகளைக் கூடியவரையில் குறைத்துக் கொள்ள வேண்டும். அதற்குப் பதில் பொது ஜனங்களுக்காகப் பொறுப்பு எடுத்துக் கொண்டு புண்யம் ஸம்பாதிக்க வேண்டும். அநேகமாக ரிடையர் ஆகிற வயஸில் ஒருத்தனுக்கு நேர் பொறுப்பு உள்ள பிள்ளைகளின் படிப்பு, பெண்ணின் விவாஹம் முதலான கார்யங்கள் முடிந்திருக்கும். அதற்கப்புறமும் பேரன் படிப்பு, பேத்தி கல்யாணம் என்றெல்லாம் இழுத்துப் போட்டுக் கொண்டேயிருந்தால் அதற்கு முடிவே இருக்காது. ஓரளவு வயஸான பிற்பாடாவது கொஞ்ச விவேக வைராக்யாதிகளைப் பழக வேண்டாமா? வானப்ரஸ்தாச்ரமிகளைப் போல, வீட்டுப் பொறுப்புகளை அடுத்த தலைமுறைக்கு விட்டு விட்டுத் தங்கள் ஆத்மாவை கவனித்துக் கொள்ள வேண்டும். உத்யோக காலம் முடிந்தபின் சொந்த பிஸினஸ் பண்ணலாமா, ஃபாக்டரி வைக்கலாமா, ஃபார்ம் வைக்கலாமா, எக்ஸ்டென்ஷனுக்கு 'ட்ரை' பண்ணலாமா என்று தவித்துக் கொண்டிருக்காமல், தன்னைக் கடைத்தேற்றிக் கொள்வதற்கான வழிகளைத் தேட வேண்டும்.

இருக்கிற ஓய்வை நன்றாகப் ப்ரயோஜனப் படுத்திக் கொண்டு ஸத் விஷயங்களைத் தாங்கள் படித்தும் கேட்டும் தெரிந்து கொள்வதோடு மற்றவர்களுக்கும் அவற்றை எடுத்துச் சொல்வது பெரிய உபகாரம்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.**



# இவங்களுக்கு வாங்கித்தானே பழக்கம்?

'தோழிகள், சபையர் தியேட்டரை விற்கத் தீர்மானித்து விட்டார்களா? நம்ப முடியவில்லையே! அவர்களுக்கு எதையும் வாங்கித்தானே பழக்கம்!'- இப்படிக் கேட்கிறார் பெங்களூர் அ. சங்கரன். பயங்கரக் கிண்டல் சார் உங்களுக்கு! 'ஜெவின் ஆசையை பா.ஜ.க. நிறைவேத்துதோ இல்லையோ! கற்பனையிலதான்னாலும் நீங்க நிறைவேத்திட்டீங்க. பத்திரிகைகள் எனக்கெதிரா செயல்படுதுன்னு எப்பவும் ஜெ. புலம்பறபோது கல்கியை இனி சேர்த்துக்க மாட்டாங்க'ன்னு நெய்வேலி எஸ். கண்ணன் இன்னொரு புடி புடிக்கறாரு. ஒரிஸ்ஸா-பீகார் விஷயத்துல ரெண்டு பெரிய கட்சிகளும் எடுத்த தவறான முடிவுகளால ரொம்ப சிரமப்படப் போற நிலையை தலையங்கம் ரொம்ப அழகா விளக்கியிருக்கறதா சொல்றார் திருப்பரங்குன்றம் டி.கே. சுப்பிரமணியன். 'நேரா நடக்க ரெண்டு கால் இருக்கும் போதே நாம டூ வீலர், த்ரீ வீலர்னு தேடறோம். இந்தக் கருணாகரன் எப்படி சார் தலைகீழா நடக்கறாரு?'ன்னு திருச்சி உஷா முத்துராமன் ஆச்சரியப்படறாங்க. எல்லாம் விடா முயற்சி செய்யற வேலைங்க! 'ஃபெமினா மிஸ் இந்தியா' நீதிபதிகள், இந்தியப் பண்பாடு, கலாசாரம், ஆன்மீகம்-இதையெல்லாம் மதிக்கறாங்க'ன்னு அட்டைப்பட அழகுப் பெண் யுக்தா சொல்லியிருக்கறதுல சேலையூர் கே.வி. ராமனுக்குப் பரம சந்தோஷம். ஆனா, இவ்ளோ அழகா இருக்கற யுக்தா ஒரு பொட்டு வெச்சிக்கிட்டு இன்னும் அழகா இருக்கலாமேன்னு ஆதங்கப்படறாரு அண்ணனூர் ஹரிஹரன். திருமதி ஒய்.ஜி.பி யோட 'மாதா, பிதா, மாணவன்' முதல் அத்தியாயமே அத்தனை வாசகர்களுக்கும் ரொம்பப் பிடிச்சுப் போயிருக்கு! "இந்தத் தொடர் மீது ஒரு மரியாதையே வந்து விட்டது"ன்னு புல்லரிக்க எழுதியிருக்காங்க மதுரை ஆர். லட்சுமி. 'ஆர்வமும் முயற்சியும் எப்படி எப்படி கரெக்டா அமைஞ்சா ஜெயிக்கலாம்'னு ரா.கி. ரங்கராஜனோட ஜெயித்த கதை விளக்கியதாகச் சொல்றார், மன்னார்குடி பி.ஆர். பார்த்தசாரதி. "ரா.கி.ரவோட அனுபவங்களைத் தெரிஞ்சுக்கணுங்கறது என் நீண்ட நாள் ஆசை. ஜெயித்த கதை அதை நிறைவேத்திடுச்சி"ங்கறாரு பிச்சாண்டார் கோயில் எம். காமராஜ். சுமி எழுதின 'இலக்கிய உலக அக்கப்போரை'ப் படிச்சுட்டு பரவசப்பட்டு, சுமிக்கு மூணு பக்கம் ஒதுக்கக் கூடாதான்னு கேட்கிறார் மொரட்டுப்பாளையம் சு.நா. ராஜேஸ்வரன். ராயப்பேட்டை அய்யாறு வாசுதேவனுக்கு, ராஜரத்தினம் பிள்ளை புஸ்தகம் பத்தி எழுதின சுமி, அதனோட விலையைக் குறிப்பிடாம விட்டுட்டதுல வருத்தம். தன்னோட புனை பெயர்கள் பட்டியல்ல வந்திருக்கும் டபிள்யூ.ஆர். ஸ்வர்ணலதாங்கற பேர், தன்னோடது இல்லை; தவறுதலா வந்துடுச்சின்னு சுட்டிக்காட்டியிருக்கார் ரா.கி. ரங்கராஜன். 'நீண்ட நாட்களுக்குப் பிறகு மொழி பெயர்ப்புக் கதையா? அதுவும் காதல் கதையா! அதுவும், அதுவும் பஷீரா?'- 'ஐயோ, சொக்கா!'ன்னு திருவிளையாடல் நாகேஷ் கணக்கா பரவசப்பட்டிருக்கார் பூனாம்பாளையம் ஆர்.பி.ஜெயச்சந்திரன்!

**Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi**
**Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.**
**Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.**
**Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1900/- (Air Mail)**
**Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 950/- (Air Mail)**

